# ஸ்ரீமத் பகவத் கீதை

(பொழிப்புரையுடன் கூடியது)

உரை ஆசிரியர்

" அண்ணா "

ஸ்ரீ ராமகிருஷ்ண மடம்

மயிலாப்பூர் :: சென்னை - 600004

ஸர்வதர்மான் பரித்யஜ்ய
மாமேகம் சரணம் வ்ரஜ ।
அஹம் த்வா ஸர்வபாபேப்ப்யோ
மோக்ஷயிஷ்யாமி மா சுச: ॥

(கீதை 18. 66)

எல்லா அறங்களையும் விட்டொழித்திங் கென்றனையே
நல்லாய் சரண்புகுக நானுன்னை—அல்லல்தரு
பாவங்களின் முற்றும் பற்றறவே வீடுவிப்பேன்
மேவுதுயர் எல்லாம் விடு.

(கீதை வெண்பா.)

வன் பற்றறுக்கு மருந்தென்று மாயவன் றானுரைத்த
இன்பக்கட லமுதாமென நின்றவிக் கீதை தன்னை
அன்பர்க் குரைப்பவர் கேட்பவர் ஆதரித்தோதுமவர்
துன்பக்கடலில் துளங்குகை நீங்கித் துலங்குவரே.

(கீதார்த்த ஸங்க்ரஹம்.)

# குறிகளின் விளக்கம்

## உச்சரிப்பு

க ग கங்கை என்பதில் போல

ட ड குடம் ,,

த द பாதம் ,,

ப ब இன்பம் ,,

ரு ऋ எருது ,,

ச ஜ பாசம் ,,

ஃ ஹ.ஹி.ஹு — 'ராமஃ' — ராமஹ ; ஸ்ரீஃ — ஸ்ரீஹி ;
பாண்டுஃ — பாண்டுஹு ; என்றவாறு
ஈற்றெழுத்துடன் ஒத்துவரும்.
'கஃகிம்' கஹ்கிம்.

S— 'அ' தொக்கு நிற்கும்.

ஸ்ரீ:

ஸ்ரீ க்ருஷ்ணாய பரப்ரஹ்மணே நம:

# ஸ்ரீமத் பகவத் கீதை

## தியான ஸ்லோகங்கள்

ஓம் பார்த்தாய ப்ரதிபோதிதாம் பகவதா
    நாராயணேன ஸ்வயம்
வ்யாஸேன க்ரதிதாம் புராணமுனினா
    மத்யே மஹாபாரதம் ।
அத்வைதாம்ருத-வர்ஷிணீம் பகவதீம்-
    அஷ்டாதசாத்யாயினீம்-
அம்ப த்வாமனுஸந்ததாமி பகவத்-
    கீதே பவத்வேஷிணீம் ॥ 1 ॥

நமோஸ்து தே வ்யாஸ விசாலபுத்தே
    புல்லாரவிந்தாயதபத்ர-நேத்ர ।
யேன த்வயா பாரததைல-பூர்ண:
    ப்ரஜ்வாலிதோ ஜ்ஞானமய-ப்ரதீப: ॥ 2 ॥

1. ஸாக்ஷாத் பகவான் நாராயணனால் அர்ஜுனனுக்குப் போதிக்கப் பட்டதும், புராண முனிவராகிய வியாஸரால் மகா பாரதத்தின் மத்தியில் தொகுத்துவைக்கப்பட்டதும், அத்துவைதமாகிய அமிருதத்தைப் பொழிவதும், பிறவிக் கடலில் உழல்வதை வெறுப்பதும், பதினெட்டு அத்தியாய வடிவிலிருப்பதுமான பகவதி வடிவான பகவத் கீதைத்தாயே, உன்னை நான் தொடர்ந்து தியானிக்கின்றேன்.

2. விசாலமான புத்தியுடையவரும் மலர்ந்த தாமரை யிதழ் போன்ற பரந்த கண்களையுடையவருமான வியாஸரே! உமக்கு நமஸ்காரம். பாரதம் எனும் எண்ணெய்யால் நிறைந்த ஞான மயமான சிறந்த விளக்கு உம்மாலல்லவா ஏற்றிவைக்கப் பட்டது!

ப்ரபன்ன-பாரிஜாதாய தோத்ர-வேத்ரைக-பாணயே ।
ஜ்ஞானமுத்ராய க்ருஷ்ணாய கீதாம்ருத-துஹே நம: ॥ 3 ॥

ஸர்வோபநிஷதோ காவோ தோக்தா கோபால-நந்தன: ।
பார்த்தோ வத்ஸ: ஸுதீர்ப்-போக்தா துக்தம் கீதாம்ருதம் மஹத் ॥ 4 ॥

வஸுதேவஸுதம் தேவம் கம்ஸ-சாணூர-மர்த்தனம் ।
தேவகீ-பரமானந்தம் க்ருஷ்ணம் வந்தே ஜகத்குரும் ॥ 5 ॥

பீஷ்மத்ரோண-தடா ஜயத்ரத-ஜலா
காந்தார-நீலோத்பலா
சல்ய-க்ராஹவதீ க்ருபேண வஹனீ
கர்ணேன வேலாகுலா ।

3. சரணடைந்தவர்களுக்குக் கற்பக விருக்ஷமாகவும், ஒரு கையில் சாட்டை ஏந்தியவனாகவும், ஞான முத்திரை காட்டு பவனாகவும், கீதை எனும் அமுதத்தைக் கறப்பவனாகவும் விளங்கும் கிருஷ்ணனுக்கு நமஸ்காரம்.

4. எல்லா உபநிஷத்துக்களும் பசுக்கள்; இடையர்களை மகிழ்விக்கும் கிருஷ்ணன் பால் கறப்பவன்; அர்ஜுனன் கன்று; கறந்த பால் சிறந்த கீதை யெனும் அமுதம்; அருந்து வோர் நல்ல புத்திமான்கள்.

5. வசுதேவ புத்திரனும், கம்ஸன் சாணூரன் இவர்களை வதைத்தவனும், தேவகியின் ஆனந்தத்திற்கெல்லையாகிய வனும், உலக குருவும் தெய்வமும் ஆகிய கிருஷ்ணனை வணங்குகிறேன்.

6. பாரதப்போர் எனும் நதியானது பீஷ்மரையும் துரோண ரையும் கரைகளாகவும், ஜயத்ரதனை ஜலமாகவும், காந்தார தேசத்துச் சகுனியை நீலோத்பல புஷ்பமாகவும், சல்யனை

அச்வத்தாம-விகர்ண-கோர-மகரா
　　துர்யோதனாவர்த்தினீ
ஸோத்தீர்ணா கலு பாண்டவை ரணநதீ
　　கைவர்த்தகஃ கேசவஃ ॥ 6 ॥

பாராசர்யவசஃ-ஸரோஜ-மமலம்
　　கீதார்த்த-கந்தோத்கடம்
நாநாக்யானக-கேஸரம் ஹரிகதா-
　　ஸம்போதனாபோதிதம் ।
லோகே ஸஜ்ஜன-ஷட்பதை- ரஹரஹஃ
　　பேபீயமானம் முதா
பூயாத்பாரத-பங்கஜம் கலிமல-
　　ப்ரத்வம்ஸி நஃ ச்ரேயஸே ॥ 7 ॥

முதலையாகவும் கிருபரை வெள்ளமாகவும் கர்ணனைக் கரையைச் சிதறடிக்கும் பேரலையாகவும், அசுவத்தாமாவையும் விகர்ணனையும் கொடிய திமிங்கிலங்களாகவும், துரியோதனனைச் சுழலாகவும் கொண்டது. ஸ்ரீ கிருஷ்ணனைப் படகோட்டியாகக் கொண்டு பாண்டவர்களால் இந்நதி தாண்டப்பட்டது.

7. குற்றமற்ற பராசர புத்திரரான வியாஸருடைய சொற்களாகிய நீர்ப்பரப்பிலுதித்ததும், கீதையின் கருத்தாகிய சிறந்த வாசனையுடையதும், பல வரலாறுகளாகிய மகரந்த கேஸரங்களையுடையதும், ஹரிகதையாகிற மலர்ச்சிச் சக்தியால் மலர்விக்கப்பெற்றதும், உலகில் நல்லோர்களாகிய வண்டுகளால் நாள்தோறும் மகிழ்ச்சியுடன் பருகப்பட்ட தேனையுடையதும் ஆகிய பாரதம் எனும் தாமரை கலியின் தோஷத்தைக் களைந்து நமக்கு உயர் நலத்தை யளிப்பதாய் விளங்கட்டும்.

மூகம் கரோதி வாசாலம் பங்கும் லங்கயதே கிரிம் ।
யத் க்ருபா தமஹம் வந்தே பரமானந்த-மாதவம் ॥ 8 ॥

யம் ப்ரஹ்மா-வருணேந்த்ர-ருத்ர-மருத:
ஸ்துன்வந்தி திவ்யை: ஸ்தவைர்-
வேதை: ஸாங்க-பதக்ரமோபநிஷதைர்-
காயந்தி யம் ஸாமகா: ।
த்யானாவஸ்தித-தத்-கதேன மனஸா
பச்யந்தி யம் யோகினோ
யஸ்யாந்தம் ந விது: ஸுராஸுரகணா
தேவாய தஸ்மை நம: ॥ 9 ॥

8. ஊமையைப் பேச்சாளனாகவும், நொண்டியை மலையைத் தாண்டுபவனாகவும் எவருடைய கிருபை செய்கிறதோ அந்தப் பரமானந்த மூர்த்தியான மாதவனை நான் வணங்குகிறேன்.

9. பிரம்மாவும், வருணனும், இந்திரனும், ருத்திரனும் மருத்கணங்களும் எவரை தெய்வத்தன்மை வாய்ந்த ஸ்தோத்திரங்களால் துதிக்கிறார்களோ, ஸாமவேதிகள் எவரை அங்கம், பதம், கிரமம், உபநிஷதங்களுடன் கூடிய வேதங்களால் பாடுகிறார்களோ, யோகிகள் எவரை தியானத்தில் நிலைபெற்று அதிலேயே சென்றுவிட்ட மனதால் காண்கின்றார்களோ, தேவர் குழாமும் அசுரர் குழாமும் எவருடைய எல்லையை அறியவில்லையோ அந்த தேவதேவருக்கு நமஸ்காரம்.

ஸ்ரீ:

# ஸ்ரீ மத் பகவத் கீதை

## முதல் அத்தியாயம்

### (அர்ஜுன விஷாத யோகம்)

த்ருதராஷ்ட்ர உவாச—

தர்மக்ஷேத்ரே குருக்ஷேத்ரே ஸமவேதா யுயுத்ஸவ: ।
மாமகா: பாண்டவாச்சைவ கிமகுர்வத ஸஞ்ஜய ॥ 1 ॥

ஸஞ்ஜய உவாச—

த்ருஷ்ட்வாது பாண்டவானீகம் வ்யூடம் துர்யோதனஸ்-ததா
ஆசார்ய-முபஸங்கம்ய ராஜா வசன-மப்ரவீத் ॥ 2 ॥

பச்யைதாம் பாண்டுபுத்ராணா-மாசார்ய மஹதீஞ் சமூம் ।
வ்யூடாம் த்ருபதபுத்ரேண தவ சிஷ்யேண தீமதா ॥ 3 ॥

திருதராஷ்டிரர் கூறியது—

1. போருக்கு முனைந்துள்ள என் புத்திரர்களும் பாண்டு புத்திரர்களும் தர்ம பூமியாகிய குருக்ஷேத்திரத்தில் கூடினவர்களாய் என்ன செய்தார்கள்?

ஸஞ்ஜயர் கூறியது—

2. அரசனாகிய துரியோதனன் பாண்டவர் சேனை அணி வகுத்து நிற்பதைப் பார்த்து, துரோணாசாரியாரை அணுகி, இவ்வார்த்தையைச் சொன்னான்.

3. ஆசிரியரே! உம்முடைய புத்திமானான சிஷ்யனும் துருபதபுத்திரனுமாகிய—திருஷ்டத்யும்னனால்—அணி வகுத்து நிறுத்தப் பட்டுள்ள பாண்டு புத்திரர்களுடைய இந்தப் பெரிய சேனையைப் பாரும்.

அத்ர சூரா மஹேஷ்வாஸா பீமார்ஜுன-ஸமா யுதி ।
யுயுதானோ விராடச்ச த்ருபதச்ச மஹாரதஃ ॥ 4 ॥

த்ருஷ்டகேதுச் சேகிதானஃ காசிராஜச்ச வீர்யவான் ।
புருஜித் குந்திபோஜச்ச சைப்யச்ச நரபுங்கவஃ ॥ 5 ॥

யுதாமன்யுச்ச விக்ராந்த உத்தமௌஜாச்ச வீர்யவான் ।
ஸௌபத்ரோ த்ரௌபதேயாச்ச ஸர்வ ஏவ மஹாரதாஃ ॥ 6 ॥

அஸ்மாகம் து விசிஷ்டா யே தாந்-நிபோத த்விஜோத்தம ।
நாயகா மம ஸைந்யஸ்ய ஸம்ஜ்ஞார்த்தம் தான் ப்ரவீமி தே ॥ 7 ॥

பவான் பீஷ்மச்ச கர்ணச்ச க்ருபச்ச ஸமிதிஞ்ஜயஃ ।
அச்வத்தாமா விகர்ணச்ச ஸௌமதத்திஸ்—ததைவ ச ॥ 8 ॥

---

4–6. இங்கே பெரிய வில்லாளிகளும் யுத்தத்தில் பீமனுக்கும் அர்ஜுனனுக்கும் சமமான சூரர்களும் உளர். ஸாத்யகி, விராடன், மஹாரதனான துருபதன், திருஷ்டகேது, சேகிதான ராஜா, வீரியவானான காசி ராஜா, புருஜித்து, குந்திபோஜன் நரசிரேஷ்டனான சைப்யன், பலவானான யுதாமன்யு, வீரியவானான உத்தமௌஜன், சுபத்திரையின் புத்திரனான அபிமன்யு, திரௌபதியின் புத்திரர்கள், எல்லோருமே தேர்ப் போரிற் சிறந்தவர்கள்.

7. பிராம்மண சிரேஷ்டரே! நமக்குள் எவர்கள் முக்கியஸ்தர்களோ, என்னுடைய சேனைக்கு நாயகர்களோ, அவர்களையும் கவனியும். உமக்குக் குறிப்பிடும் பொருட்டு அவர்களைக் கூறுகிறேன்.

8. தாங்கள், பீஷ்மர், கர்ணன், யுத்தத்தில் ஜயமே பெறும் கிருபாசாரியார், அசுவத்தாமா, விகர்ணன், சோமதத்தனுடைய புத்திரன் பூரிசிரவசு, ஜயத்ரதன்; ......

அன்யே ச பஹவஃ சூரா மதர்த்தே த்யக்த-ஜீவிதாஃ ।
நாநா-சஸ்த்ர-ப்ரஹரணாஃ ஸர்வே யுத்த-விசாரதாஃ ॥ 9 ॥

அபர்யாப்தம் ததஸ்மாகம் பலம் பீஷ்மாபிரக்ஷிதம் ।
பர்யாப்தந்த்வித-மேதேஷாம் பலம் பீமாபிரக்ஷிதம் ॥ 10 ॥

அயனேஷு ச ஸர்வேஷு யதாபாக-மவஸ்த்திதாஃ ।
பீஷ்ம-மேவாபிரக்ஷந்து பவந்தஃ ஸர்வ ஏவ ஹி ॥ 11 ॥

தஸ்ய ஸஞ்ஜனயன் ஹர்ஷம் குருவ்ருத்தஃ பிதாமஹஃ ।
ஸிம்ஹநாதம் விநத்யோச்சைஃ சங்கம் தத்மௌ
ப்ரதாபவான் ॥ 12 ॥

ததஃ சங்காச்ச பேர்யச்ச பணவானககோமுகாஃ ।
ஸஹஸைவாப்ப்யஹன்யந்த ஸ சப்தஸ்-துமுலோऽபவத் ॥ 13 ॥

---

9. இன்னும் பல சூரர்கள் என் பொருட்டு உயிரைக் கொடுத்தவர்கள், பல ஆயுதங்களைத் தரித்தவர்கள், எல்லோரும் யுத்தத்தில் கைதேர்ந்தவர்கள்.

10. பீஷ்மரால் காக்கப்பட்ட நம்முடைய அந்த சேனை வெற்றி பெறுவதற்குப் போதாது; ஆனல் பீமனல் காக்கப்பட்ட பாண்டவர்களுடைய சேனை போதுமான சக்தியுடையது.

11. நீங்கள் எல்லோரும் எல்லா அணிகளின் முன் நிலையிலும் அவரவர்களிடத்தில் நின்று கொண்டு பீஷ்மரையே செவ்வையாய்க் காக்கவேண்டும்.

12. சத்துருக்களைத் தவிக்கச் செய்பவரும் குரு வம்சத்துப் பெரிய கிழவரும் பாட்டனுமாகிய பீஷ்மர் அந்த துரியோதனனுக்கு ஸந்தோஷத்தை உண்டாக்கிக் கொண்டு, உரத்த குரலில் சிங்கத்தைப் போல் கர்ஜித்துச் சங்கத்தை ஊதினர்.

13. பிறகு சங்குகளும் பேரிகைகளும் மத்தளங்களுந் தப்பட்டைகளுங் கொம்புகளும் உடனே முழங்கத் தொடங்கின; அந்த ஒலி பெரிதாக வளர்ந்தது.

தத: ச்வேதைர்-ஹயைர்-யுக்தே மஹதி ஸ்யந்தனே
ஸ்த்திதௌ ।
மாதவ: பாண்டவச்சைவ திவ்யௌ சங்கௌ ப்ரதத்மது:
॥ 14 ॥

பாஞ்சஜன்யம் ஹ்ருஷீகேசோ தேவதத்தம் தனஞ்ஜய: ।
பௌண்ட்ரம் தத்மௌ மஹாசங்கம் பீமகர்மா வ்ருகோதர:
॥ 15 ॥

அனந்தவிஜயம் ராஜா குந்தீபுத்ரோ யுதிஷ்டிர: ।
நகுல: ஸஹதேவச்ச ஸுகோஷ-மணிபுஷ்பகௌ ॥ 16 ॥

காச்யச்ச பரமேஷ்வாஸ: சிகண்டீ ச மஹாரத:
த்ருஷ்டத்யும்னோ விராடச்ச ஸாத்யகிச்சாபராஜித: ॥ 17 ॥

த்ருபதோ த்ரௌபதேயாச்ச ஸர்வச: ப்ருதிவீபதே ।
ஸௌபத்ரச்ச மஹாபாஹு: சங்கான் தத்மு: ப்ருதக்
ப்ருதக் ॥ 18 ॥

---

**14.** பிறகு வெண்மையான குதிரைகள் பூட்டின பெரிய தேரின்மேல் நின்றுகொண்டு கிருஷ்ணனும் அர்ஜுனனும் தெய்விகமான சங்குகளை நன்றாய் ஊதினார்கள்.

**15.** கிருஷ்ணன் பாஞ்சஜன்யம் எனும் சங்கையும், அர்ஜுனன் தேவதத்தம் எனும் சங்கையும், பயங்கரச் செயலும் பெருவயிறுமுடைய பீமன் பௌண்ட்ரம் எனும் பெரிய சங்கையும் ஊதினார்கள்.

**16.** குந்தீ புத்ரனான யுதிஷ்டிர ராஜா அனந்தவிஜயம் எனும் சங்கையும், நகுல ஸஹதேவர்கள் ஸுகோஷம் மணி புஷ்பகம் எனும் சங்குகளையும் ஊதினார்கள்.

**17–18.** பூமியை ஆளும் திருதராஷ்டிரரே! வில்லாளிகளிற் சிறந்த காசிராஜனும், சிறந்த தேராளியான சிகண்டியும், திருஷ்டத்யும்னனும் விராடனும் பிறரால் ஜயிக்க முடியாத ஸாத்யகியும், துருபதனும் துரௌபதியின் புத்திரர்களும் தோள்வலிமையுடைய சுபத்திரையின் குமாரன் அபிமன்யுவும் ஒவ்வொரு திசையிலும் தனித்தனியே சங்குகளை முழக்கினார்கள்.

ஸகோஷோ தார்த்தராஷ்ட்ராணாம் ஹ்ருதயானி வ்யதாரயத் ।
நபச்ச ப்ருதிவீஞ்சைவ துமுலோ வ்யனுநாதயன் ॥ 19 ॥
அத வ்யவஸ்த்திதான் த்ருஷ்ட்வா தார்த்தராஷ்ட்ரான் கபித்வஜ: ।
ப்ரவ்ருத்தே சஸ்த்ர-ஸம்பாதே தனு-ருத்யம்ய பாண்டவ: ॥20॥
ஹ்ருஷீகேசம் ததா வாக்ய-மிதமாஹ மஹீபதே ।

அர்ஜுன உவாச—
ஸேனயோ-ருபயோர்-மத்த்யே ரதம் ஸ்த்தாபய மேऽச்யுத ॥21॥
யாவதேதாந் நிரீக்ஷேऽஹம் யோத்துகாமா-னவஸ்த்திதான் ।
கைர்-மயா ஸஹ யோத்தவ்ய-மஸ்மின் ரணஸமுத்யமே ॥22॥
யோத்ஸ்யமானா-னவேக்ஷேऽஹம் ய ஏதேऽத்ர ஸமாகதா:
தார்த்தராஷ்ட்ரஸ்ய துர்ப்புத்தேர்-யுத்தே ப்ரியசிகீர்ஷவ: ॥ 23 ॥

---

19. ஆகாயத்தையும் பூமியையும் எதிரொலிகளால் நிரப்பிய அந்த ஆரவார ஒலி துரியோதனாதியருடைய இருதயங்களைப் பிளந்தது.

20. மஹாராஜா! அதற்குப் பிறகு குரங்குக் கொடியோனை அர்ஜுனன் எதிர் நின்று துரியோதனாதியரைப் பார்த்து, ஆயுதங்களைப் பிரயோகிக்கும் தருணம் வந்ததும், வில்லை எடுத்துக்கொண்டு கிருஷ்ணனிடம் இந்த வார்த்தையைச் சொன்னான்.

அர்ஜுனன் கூறியது—

21-23. கிருஷ்ணா! இந்த யுத்த ஆரம்பத்தில் எங்ஙனம் நின்று பார்த்தால் நான் யுத்தத்தில் ஆவலுடன் கூடியுள்ள இவர்களை நன்றாய்ப் பார்ப்பேனோ, யார் யாருடன் கூட என்னால் யுத்தம் செய்யவேண்டுமோ, இந்த யுத்தத்தில் கெட்ட புத்தியுள்ள த்ருதராஷ்ட்ர புத்திரனுக்குப் பிரியத்தை செய்ய விரும்பி எந்த ஜனங்கள் வந்திருக்கிறார்களோ, யுத்தஞ் செய்யப் போகின்ற அவர்களை யெல்லாம் எப்படி நான் நன்றாகக் காண்பேனோ, அப்படி இரு சேனைகளுக்கும் மத்தியில் என்னுடைய தேரை நிறுத்தும்.

ஸஞ்ஜய உவாச—

ஏவமுக்தோ ஹ்ருஷீகேசோ குடாகேசேன பாரத ।
ஸேனயோ-ருபயோர்-மத்யே ஸ்த்தாபயித்வா ரதோத்தமம்
॥ 24 ॥

பீஷ்மத்ரோண-ப்ரமுகதஃ ஸர்வேஷாஞ் ச மஹீக்ஷிதாம் ।
உவாச பார்த்த பச்யைதான் ஸமவேதான் குரூனிதி ॥ 25 ॥

தத்ராபச்யத் ஸ்த்திதான் பார்த்தஃ பித்ரூனத பிதாமஹான்।
ஆசார்யான் மாதுலான் ப்ராத்ரூன் புத்ரான் பௌத்ரான்
[ஸகீன் ஸ்ததா ॥ 26 ॥

ச்வசுரான் ஸுஹ்ருதச் சைவ ஸேனயோ-ருபயோ-ரபி ।
தான் ஸமீக்ஷ்ய ஸ கௌந்தேயஃ ஸர்வான் பந்தூ-
னவஸ்த்திதான் ॥ 27 ॥

க்ருபயா பரயா SSவிஷ்டோ விஷீதன்-னித-மப்ரவீத் ।

ஸஞ்ஜயர் கூறியது—

24–25. திருதராஷ்டிரா! தூக்கத்தை ஜயித்த அர்ஜுனனால் இவ்வாறு சொல்லப்பட்ட ஸ்ரீ பகவான் இரண்டு சேனைகளுக்கும் நடுவில், பீஷ்மர் துரோணர் இவர்களுக்கு எதிராகவும், எல்லா அரசர்களுக்கும் எதிராகவும் சிறந்த இரதத்தை நிறுத்தி "அர்ஜுனா! கூடியுள்ள இந்தக் கௌரவர்களைப் பார்" என்று கூறினார்.

26. பிறகு அர்ஜுனன் அங்கே இரு சேனைகளிலும் இருந்த தகப்பன்மாரையும், குருமாரையும், மாமன்மாரையும், சகோதரர்களையும், பிள்ளைகளையும், பேரன்மார்களையும், தோழர்களையும், அவ்வாறே மாமனார்களையும் சிறந்த நண்பர்களையும் பார்த்தான்.

27. குந்தீ புத்திரனான அவ்வர்ஜுனன் அங்கே நின்ற எல்லா உறவினர்களையும் நன்றாய்ப் பார்த்து விட்டு அதிகமான கருணையால் மனந்தளர்ந்து விசனமடைந்து இதைச் சொன்னான்.

அர்ஜுன உவாச—

த்ருஷ்ட்வேமம் ஸ்வஜனம் க்ருஷ்ண யுயுத்ஸும் ஸமுபஸ்த்
[திதம் ॥ 28 ॥

ஸீதந்தி மம காத்ராணி முகஞ்ச பரிசுஷ்யதி ।
வேபதுச்ச சரீரே மே ரோமஹர்ஷச்ச ஜாயதே ॥ 29 ॥

காண்டீவம் ஸ்ரம்ஸதே ஹஸ்தாத் த்வக்சைவ பரிதஹ்யதே ।
ந ச சக்னோம்-யவஸ்த்தாதும் ப்ரமதீவ ச மே மனஃ ॥ 30 ॥

நிமித்தானி ச பச்யாமி விபரீதானி கேசவ ।
ந ச ச்ரேயோ ஽னுபச்யாமி ஹத்வா ஸ்வஜன-மாஹவே ॥ 31 ॥

ந காங்க்ஷே விஜயம் க்ருஷ்ண ந ச ராஜ்யம் ஸுகானி ச ।
கிந்நோ ராஜ்யேன கோவிந்த கிம் போகைர் ஜீவிதேன வா
॥ 32 ॥

---

அர்ஜுனன் கூறியது—

28-29. கிருஷ்ணா! போர்புரிய விரும்பிக் கூடியிருக்கிற இந்த உறவினர்களைப் பார்த்து என்னுடைய அவயவங்கள் சோர்வடைகின்றன; வாயும் உலர்கின்றது; என் உடலில் நடுக்கமும் மயிர்க்கூச்சமும் உண்டாகிறது.

30. கையிலிருந்து காண்டீவமும் நழுவுகிறது; உடம்பின் மேல் தோலும் எங்கும் எரிகிறது. நிற்பதற்கு சக்தியற்றவனு யிருக்கிறேன். என் மனம் நிலையற்றுச் சுழல்வது போலுந் தோன்றுகிறது.

31. கிருஷ்ணா! தாறுமாறான அபசகுனங்களையும் பார்க்கிறேன். யுத்தத்தில் சொந்த ஜனங்களைக் கொல்வதால் ஒரு நன்மையையும் நான் காணவில்லை.

32. வெற்றியையாவது அரசையாவது, சுகங்களையாவது நான் விரும்பவில்லை. கிருஷ்ணா, நமக்கு அரசால் என்ன பயன்! போகங்களாலும் வாழ்க்கையாலுந்தான் என்ன பயன்?

யேஷாமர்த்தே காங்க்ஷிதம் நோ ராஜ்யம் போகாஃ
ஸுகானி ச ।
த இமே஽வஸ்திதா யுத்தே ப்ராணான்ஸ்-த்யக்த்வா தனானி ச
॥ 33 ॥

ஆசார்யாஃ பிதரஃ புத்ராஸ்-ததைவ ச பிதாமஹாஃ ।
மாதுலாஃ ச்வசுராஃ பௌத்ராஃ ச்யாலாஃ ஸம்பந்தி
னஸ்-ததா ॥ 34 ॥

ஏதாந் ந ஹந்து-மிச்சாமி க்னதோ஽பி மதுஸூதன ।
அபி த்ரைலோக்ய-ராஜ்யஸ்ய ஹேதோஃ கிந் நு மஹீக்ருதே
॥ 35 ॥

நிஹத்ய தார்த்தராஷ்ட்ராந் நஃ காப்ரீதிஃ ஸ்யாஜ்-ஜனார்த்தன
பாபமேவாச்ரயே-தஸ்மான் ஹத்வைதா-னாததாயினஃ ॥ 36 ॥

தஸ்மாந்-நார்ஹா வயம் ஹந்தும் தார்த்தராஷ்ட்ரான்
ஸ்வபாந்தவான் ।
ஸ்வஜனம் ஹி கதம் ஹத்வா ஸுகினஃ ஸ்யாம மாதவ ॥ 37 ॥

33. எவர்களின் பொருட்டு நமக்கு அரசு விரும்பத்தக்கதோ, போகங்களும் சுகங்களும் விரும்பத்தக்கனவோ, அவர்களே இங்கு உயிரையும் பொருளையும் துறந்து யுத்தத்தில் கூடி நிற்கின்றனர்.

34. உபாத்தியாயர்கள் தகப்பன்மார்கள் பிள்ளைகள் பாட்டன்மார்கள் பேரன்மார்கள் அம்மான்மார்கள் மாமனார்கள் மைத்துனர்கள் ஸம்பந்திகள்.

35. கிருஷ்ணா! மூவுலகையும் ஆளும் பொருட்டும், கொல்லுபவர்களாயினும் நான் இவர்களைக் கொல்ல விரும்பவில்லை. இந்த பூமியால் ஆவதென்ன?

36. கிருஷ்ணா! திருதராஷ்டிரர் பிள்ளைகளைக் கொன்று நமக்கு என்ன சந்தோஷம் ஏற்படப்போகிறது? இந்தக் கொடும்பாவிகளைக் கொன்றும் நம்மைப் பாவமே சேரும்.

37. ஆகையால் நமது உறவினர்களாகிய திருதராஷ்டிரர் பிள்ளைகளை நாம் கொல்லுவதற்குத் தகுதி யுடையவர்கள் அல்லோம். கிருஷ்ணா! உறவினர்களைக் கொன்று எங்ஙனம் சுகம் எய்தியவர்களாக ஆவோம்?

யத்யப்யேதே ந பச்யந்தி லோபோபஹத-சேதஸ: ।
குலக்ஷய-க்ருதம் தோஷம் மித்ரத்ரோஹே ச பாதகம் ॥ 38 ॥

கதம் ந ஜ்ஞேய-மஸ்மாபி: பாபா-தஸ்மாந்-நிவர்த்திதும் ।
குலக்ஷயக்ருதம் தோஷம் ப்ரபச்யத்பிர் ஜனார்த்தன ॥ 39 ॥

குலக்ஷயே ப்ரணச்யந்தி குலதர்மா: ஸநாதநா: ।
தர்மே நஷ்டே குலம் க்ருத்ஸ்ன-மதர்மோ ऽபிபவத்யுத ॥ 40 ॥

அதர்மாபிபவாத் க்ருஷ்ண ப்ரதுஷ்யந்தி குலஸ்த்ரிய: ।
ஸ்த்ரீஷு துஷ்டாஸு வார்ஷ்ணேய ஜாயதே வர்ணஸங்கர: ॥ 41 ॥

ஸங்கரோ நரகாயைவ குலக்னானாம் குலஸ்ய ச ।
பதந்தி பிதரோ ஹ்யேஷாம் லுப்த-பிண்டோதக-க்ரியா: ॥ 42 ॥

38–39. பேராசையால் விவேகம் இழந்தவர்களான இவர்கள் குலநாசத்தால் விளையுங் கெடுதலையும் நண்பர்களுக்குத் தீமை செய்வதால் விளையும் பாவத்தையும் காணவில்லை என்றாலும், கிருஷ்ணா! குலநாசத்தால் விளையுங் கெடுதலைத் தெளிவுறக் காண்பவர்களான நாம் இந்தப் பாவத்தினின்று விலகுவதற்கு வழியை எங்ஙனம் அறியாமல் போகலாம்?

40. குலம் நாசமடையும்போது தொன்றுதொட்டு வந்த குலதருமங்கள் நாசமடையும்; தருமம் அழிந்தால், குலமுழுதும் அதருமம் பரவி நிற்கும்.

41. கிருஷ்ணா! அதருமம் பரவுவதால், குலப்பெண்கள் கற்பை இழந்து கெட்டுப்போவர்; விருஷ்ணி குலத்துதித்த கிருஷ்ணா! பெண்கள் கெட்டால் ஜாதிக்கலப்பு ஏற்படும்.

42. ஜாதிக் கலப்பு குலத்தை நாசம் செய்தோருக்கும் நாசமடைந்த குலத்துக்கும் நரகத்திற்கே காரணமாகும் அன்றோ! இவர்களுடைய பிதிருக்கள் பிண்டம் தர்ப்பணம் முதலிய கிரியைகள் இன்றி வீழ்வார்கள்.

தோஷைரேதைః குலக்க்னானாம் வர்ண ஸங்கர-காரகைః ।
உத்ஸாத்யந்தே ஜாதிதர்மாః குலதர்மாச்ச சாச்வதாః ॥ 43 ॥

உத்ஸன்ன-குலதர்மாணாம் மனுஷ்யாணாம் ஜனார்த்தன ।
நரகே நியதம் வாஸோ பவதீத்-யனுசுச்ரும ॥ 44 ॥

அஹோ பத மஹத்பாபம் கர்த்தும் வ்யவஸிதா வயம் ।
யத்ராஜ்ய-ஸுக-லோபேன ஹந்தும் ஸ்வஜன-முத்யதாః ॥ 45॥

யதி மா-மப்ரதீகாரம் அசஸ்த்ரம் சஸ்த்ரபாணய ః ।
தார்த்தராஷ்ட்ரா ரணே ஹன்யுஸ்-தன்மே க்ஷேமதரம் பவேத் ॥ 46 ॥

---

43. குலமழித்த பாதகர்களின் ஜாதிக்கலப்பை விளைவிக்கும் இக்கொடுஞ் செயல்களால் தொன்றுதொட்டு வந்த ஜாதி தருமங்களும் குலதருமங்களும் அழிவடைகின்றன.

44. ஜனார்த்தனா! குலவொழுக்கஞ் சிதைந்த மனிதர்க்கு நிலையான நரகவாசம் ஏற்படுகின்றது என்று கேள்விப்பட்டுள்ளோம்.

45. எந்த அரச இன்பத்தில் பேராசை கொண்டு உறவினரைக் கொல்வதற்கு முன் வந்தோமோ, அக்காரணத்தால், அந்தோ! பெரும் பாவத்தையே செய்வதற்கு நாம் துணிந்தவர்களாயினோம்.

46. எதிர்த்துப் போராடாதவனாயும் ஆயுதமில்லாதவனாயும் உள்ள என்னை ஆயுதமேந்திய திருதராஷ்டிர புத்திரர்கள் போர்க்களத்தில் கொல்லுவரேனும் அது எனக்கு நன்மை தருவதாக ஆகும்.

ஸஞ்ஜய உவாச—

ஏவமுக்த்வா(அ)ர்ஜுன: ஸங்க்யே ரதோபஸ்த்த உபாவிசத் ।
விஸ்ருஜ்ய ஸசரம் சாபம் சோக-ஸம்விக்ன-மானஸ: ॥ 47 ॥

இதி ஸ்ரீமத் பகவத்கீதாஸூபநிஷத்ஸு ப்ரஹ்மவித்யாயாம்
யோகசாஸ்த்ரே ஸ்ரீக்ருஷ்ணார்ஜுன-ஸம்வாதே
அர்ஜுன விஷாத-யோகோ நாம
ப்ரதமோ(அ)த்யாய: ॥

---

ஸஞ்ஜயர் கூறியது—

47. அர்ஜுனன் இவ்வாறு கூறிவிட்டுப் போர்க்களத்தில் அம்புகளுடன் வில்லை எறிந்துவிட்டுப் பொங்கும் துயரத்தால் மனமொடிந்தவனாய்த் தேர்த்தட்டின் மேல் உட்கார்ந்து விட்டான்.

இங்ஙனம் பிரம்ம வித்தையாயும் யோக சாஸ்திரமாயும்
ஸ்ரீ கிருஷ்ணனுக்கும் அர்ஜுனனுக்கும் ஸம்வாதமாயும் விளங்கும் ஸ்ரீமத் பகவத் கீதை என்னும் உப
நிஷத்தில் அர்ஜுனவிஷாதயோகம் என்று பெயர்
பெற்ற முதல் அத்தியாயம் முற்றும்.

## இரண்டாம் அத்தியாயம்

(ஸாங்கிய யோகம்)

ஸஞ்ஜய உவாச—

தம் ததா க்ருபயாவிஷ்ட-மச்ருபூர்ணுகுலேக்ஷணம் ।
விஷீதந்த-மிதம் வாக்ய-முவாச மதுஸூதனஃ ॥ 1 ॥

ஸ்ரீபகவானுவாச—

குதஸ்-த்வா கச்மலமிதம் விஷமே ஸமுபஸத்திதம் ।
அனார்யஜுஷ்ட-மஸ்வர்க்ய-மகீர்த்திகர-மர்ஜுன ॥ 2 ॥

க்லைப்யம் மாஸ்ம கமஃ பார்த்த நைதத் த்வய்யுபபத்யதே ।
க்ஷுத்ரம் ஹ்ருதயதௌர்ப்பல்யம் த்யக்த்வோத்திஷ்ட்ட பரந்தப ॥ 3 ॥

அர்ஜுன உவாச—

கதம் பீஷ்ம-மஹம் ஸங்க்யே த்ரோணஞ்ச மதுஸூதன ।
இஷுபிஃ ப்ரதியோத்ஸ்யாமி பூஜார்ஹா-வரிஸூதன ॥ 4

ஸஞ்ஜயர் கூறியது—

1. அவ்வாறு இரக்கத்தால் மனங்கரைந்தவனும் கண்ணீரால் மறைந்த பார்வையுடையவனும் ஆகிய அர்ஜுனனை நோக்கி கிருஷ்ணன் இந்த வார்த்தையைக் கூறினுன்.

பகவான் கூறியது—

2. அர்ஜுனு! இந்தச் சிக்கலான நிலையில் மேல் மக்களுக் கொவ்வாததும் வானவர் நாட்டின் வழியை யடைப்பதும் பழிக்கிடமானதும் ஆகிய மனக்குழப்பம் உன்னை எங்கிருந்து வந்தடைந்தது?

3. அர்ஜுனு! பேடித்தனத்தை அடையாதே. இது உன்னிடத்தில் சிறிதும் பொருந்தாது. எதிரிகளை எரிப்பவனே அற்பமான மனத்தளர்ச்சியை ஒழித்து எழுந்திரு.

அர்ஜுனன் கூறியது—

4. மது என்ற அரக்கனைப் போக்கியவனும் எதிரிகளை ஒழித்தவனும் ஆகிய கிருஷ்ணு! நான் பூஜிக்கத் தகுந்த

குரூ-னஹத்வா ஹி மஹானுபாவான்
ச்ரேயோ போக்தும் பைக்ஷ்ய-மபீஹ லோகே ।
ஹத்வார்த்த-காமாம்ஸ்து குரூ-னிஹைவ
புஞ்ஜீய போகான் ருதிர-ப்ரதிக்தான் ॥ 5 ॥

நசைதத் வித்மஃ கதரந்நோ கரீயோ
யத்வா ஜயேம யதி வா நோ ஜயேயுஃ ।
யாநேவ ஹத்வா ந ஜிஜீவிஷாமஸ்-
தேऽவஸ்த்திதாஃ ப்ரமுகே தார்த்தராஷ்ட்ராஃ ॥ 6 ॥

கார்ப்பண்ய-தோஷோபஹத-ஸ்வபாவஃ
ப்ருச்சாமி த்வாம் தர்மஸம்மூடசேதாஃ ।
யச்ச்ரேயஸ்யாந்-நிச்சிதம் ப்ரூஹி தன்மே
சிஷ்யஸ்தேऽஹம் சாதி மாம் த்வாம் ப்ரபன்னம் ॥ 7 ॥

---

பீஷ்மரையும் துரோணரையும், அம்புகளைக் கொண்டு யுத்தத்தில் எங்ஙனம் எதிர்த்துப் போர்புரிவேன் ?

5. போற்றுதற்குரியவர்களான ஆசிரியர்களைக் கொல்லாமல் இவ்வுலகில் பிச்சை புகுந்துண்ணுதலும் சிறந்ததன்றோ ? ஆசிரியர்களைக் கொன்றால் இரத்தந் தோய்ந்த பொருளையும் இன்பங்களையும் போகங்களையுமே அனுபவித்தவனாவேன்.

6. நாம் ஜயிக்கலாம் அல்லது நம்மை அவர்கள் ஜயிக்கலாம்; நமக்கு இரண்டுள் எது சிறந்தது என்பதை நாம் உணரவில்லை. எவர்களைக்கொன்று நாம் உயிர் வாழ விரும்போமோ அந்த திருதராஷ்டிர புத்திரர்கள் முன்னெதிர்த்து நிற்கின்றனர்.

7. இரக்கத்தால் இயற்கைக் குணங்களை இழந்தவனும் கடமையில் புத்தி திகைத்தவனும் ஆகிய நான் உன்னைக் கேட்கிறேன்; எனக்கு எது சிறந்த நன்மையளிக்கக்கூடியதாக இருக்குமோ அதை நிச்சயித்துக் கூறு; நான் உன்னுடைய சிஷ்யன்; உன்னைப் பிரபத்தி செய்த—சரண் புகுந்த—எனக்குக் கட்டளையிடு.

ந ஹி ப்ரபச்யாமி மமாபனுத்யாத்
யச்சோக-முச்சோஷண-மிந்த்ரியாணம் ।
அவாப்ய பூமாவஸபத்னம் ருத்தம்
ராஜ்யம் ஸுராணா-மபி-சாதிபத்யம் ॥ 8 ॥

ஸஞ்ஜய உவாச—

ஏவமுக்த்வா ஹ்ருஷீகேசம் குடாகேசஃ பரந்தபஃ ।
ந யோத்ஸ்ய இதி கோவிந்த-முக்த்வா தூஷ்ணீம் பபூவஹ ॥9॥

தமுவாச ஹ்ருஷீகேசஃ ப்ரஹஸன்னிவ பாரத ।
ஸேனயோ-ருபயோர் மத்யே விஷீதந்த-மிதம் வசஃ ॥ 10 ॥

ஸ்ரீ பகவானுவாச—

அசோச்யா-னன்வசோசஸ்-த்வம் ப்ரஜ்ஞாவாதாம்ச்ச பாஷஸே ।
கதாஸூ-நகதாஸூம்ச்ச நானுசோசந்தி பண்டிதாஃ ॥ 11 ॥

---

8. போரில் ஜயித்தால் பூமியில் எதிரியில்லாததும் எல்லா வளங்களும் உடையதும் ஆகிய அரசையும் தேவர்களுடைய ஆள்கையையும் அடைவதாயிருந்தாலும் என்னுடைய புலன்களை உலர்த்தி வாட்டும் விசனத்தை எது போக்குமோ அதை நான் காணவில்லை.

ஸஞ்ஜயர் கூறியது—

9. எதிரிகளை எரிப்பவனும் தூக்கத்தை ஜயித்தவனும் ஆகிய அர்ஜுனன் புலன்களை யாள்பவனாகிய கிருஷ்ணனை நோக்கி இவ்வாறு கூறிப் போர் புரியமாட்டேன் என்று சொல்லி மௌனமாக இருந்தான்.

10. பரத மஹாராஜன் வம்சத்தில் உதித்த திருதராஷ்டிரா! இரு சேனைகளுக்கும் மத்தியில் வருந்தி நிற்கும் அந்த அர்ஜுனனை நோக்கிக் கிருஷ்ணன் புன்முறுவல் பூத்தவன் போல் இந்த வார்த்தையைச் சொன்னான்.

ஸ்ரீபகவான் கூறியது—

11. நீ துக்கிக்கத் தகாதவர்களைக் குறித்துத் துக்கிக்கிறாய்; ஞான வார்த்தைகளையும் பேசுகிறாய்; ஞானிகள் உயிரிழந்தவர்களைக் குறித்தோ உயிரிழக்காதவர்களைக் குறித்தோ துக்கப்படமாட்டார்கள்.

ந த்வேவாஹம் ஜாது நாஸம் ந த்வம் நேமே ஜநாதிபா:।
ந சைவ ந பவிஷ்யாம: ஸர்வே வய-மத: பரம் ॥ 12 ॥

தேஹிநோஸ்மின் யதா தேஹே கௌமாரம் யௌவனம் ஜரா।
ததா தேஹாந்தரப்ராப்திர்-தீரஸ்-தத்ர ந முஹ்யதி ॥ 13 ॥

மாத்ரா-ஸ்பர்சாஸ்து கௌந்தேய சீதோஷ்ணஸுகதுக்கதா:
ஆகமாபாயிநோநித்யாஸ்-தாந்ஸ்-திதிக்ஷஸ்வ பாரத ॥ 14 ॥

யம் ஹி ந வ்யதயந்த்யேதே புருஷம் புருஷர்ஷப।
ஸமதுக்கஸுகம் தீரம் ஸோऽம்ருதத்வாய கல்பதே ॥ 15 ॥

நாஸதோ வித்யதே பாவோ நாபாவோ வித்யதே ஸத:।
உபயோரபி த்ருஷ்டோऽந்தஸ்-த்வநயோஸ்-தத்வதர்சிபி: ॥ 16 ॥

12. நான் ஒருபோதும் இல்லாமலிருந்ததில்லை; நீயும் அவ்வாறே இல்லாமலிருந்ததில்லை; இந்த அரசர்களும் இல்லா மலிருந்ததில்லை; இனிமேலும் நாமெல்லோரும் ஒருபோதும் இல்லாமல் போவோம் என்பதும் இல்லவே இல்லை.

13. உடலில் உறையும் ஆன்மாவுக்கு இவ்வுடலில் குழந் தைப் பருவம், இளமை, மூப்பு எப்படியோ, அப்படியே வேறு உடல் அடைதலும்; அதில் ஞானி மயங்குவதில்லை.

14. குந்தியின் மகனான அர்ஜுனா! புலன்கள் தத்தம் விஷயங்களுடன் கூடும் நிலைகளோ, குளிர் வெப்பம், இன்பம் துன்பம் எனும் உணர்ச்சிகளைத் தருகின்றன; அவை தோன்றி மறைபவை, நிலையற்றவை; பரதவம்சத்துதித் தோனே! அவற்றைப் பொறுத்துக்கொள்.

15. ஆண்மையிற் சிறந்தவனே! இவைகள் இன்பதுன்பங் களைச் சமமாய்க் கொண்டவனும் திடசித்தமுடையவனுமாகிய எந்தப்புருஷனைக் கலக்காவோ அவனன்றோ அழிவில்லாததும் நிலையுள்ளதுமாகும் வீடு பெறுதற்கு உரியவனாகிறான்.

16. இல்லாப் பொருளுக்கு இருப்பு உண்டாகாது, உண்மைப் பொருளுக்கு இன்மையும் உண்டாகாது. இவ் விரண்டினுடைய முடிவான கருத்து உண்மையை உணர்ந்த வர்களால் காணப்பட்டதன்றோ?

அவிநாசி து தத் வித்தி யேந ஸர்வமிதம் ததம் ।
விநாச-மவ்யயஸ்யாஸ்ய ந கச்சித் கர்த்து-மர்ஹதி ॥ 17 ॥

அந்தவந்த இமே தேஹா நித்யஸ்யோக்தாः சரீரிணः ।
அநாசிநோ ऽப்ரமேயஸ்ய தஸ்மாத் யுத்த்யஸ்வ பாரத ॥ 18 ॥

ய ஏனம் வேத்தி ஹந்தாரம் யச்சைனம் மன்யதே ஹதம் ।
உபௌ தௌ ந விஜாநீதோ நாயம் ஹந்தி ந ஹன்யதே ॥ 19 ॥

ந ஜாயதே ம்ரியதே வா கதாசிந்
நாயம் பூத்வா பவிதா வா ந பூயः ।
அஜோ நித்யः சாச்வதோऽயம் புராணோ
ந ஹன்யதே ஹன்யமானே சரீரே ॥ 20 ॥

வேதாऽவிநாசினம் நித்யம் ய ஏன-மஜ-மவ்யயம் ।
கதம் ஸ புருஷः பார்த்த கம் காதயதி ஹந்திகம் ॥ 21 ॥

17. இவ்வனைத்தும் எதனால் நிறைந்துளதோ அது நிச்சயமாக அழிவற்றது என்று உணர்வாய். இந்த மாறுதலிலாப் பொருளுக்கு அழிவைச் செய்வதற்கு எவனும் சமர்த்தனல்லன்.

18. என்றும் உளதாய், அழிவில்லாததாய் அளவிறந்ததாய் உள்ள ஆன்மாவினுடைய இவ்வுடல்கள் முடிவுடையவை என்று கூறப்பட்டன. பாரத! ஆகையால் போர் புரிவாய்.

19. எவன் இந்த ஆன்மாவைக் கொல்பவனாக உணர்கிறானோ, எவன் இதைக் கொல்லப்படுவதாக நினைக்கிறானோ, அவ்விருவரும் உண்மை உணர்ந்தவர்களல்லர். இது கொல்வதில்லை. கொல்லப்படுவதும் இல்லை.

20. இது ஒரு போதும் பிறப்பதில்லை; இறப்பதுமில்லை; இல்லாமலிருந்து மறுபடியும் உண்டாவதில்லை. பிறப்பற்றது. என்றுமுளது, அழியாதது, பழைமையானது; சரீரம் கொல்லப் பட்டால் இது கொல்லப் படுவதில்லை.

21. பார்த்தா! எவன் இதை அழிவற்றதாகவும் என்றுமுள்ளதாகவும், பிறப்பற்றதாகவும், மாறுபாடற்றதாகவும் அறிகின்றானோ அந்தப்புருஷன் எங்ஙனம் எவனைக் கொல்வான், எவனைக் கொல்விப்பான் ?

வாஸாம்ஸி ஜீர்ணானி யதா விஹாய
நவானி க்ருஹ்ணாதி நரோ ऽபராணி ।
ததா சரீராணி விஹாய ஜீர்ணான்-
யன்யானி ஸம்யாதி நவானி தேஹீ ॥ 22 ॥

நைநஞ் ச்சிந்தந்தி சஸ்த்ராணி நைநந் தஹதி பாவக: ।
ந சைனங் க்லேதயந்த்யாபோ ந சோஷயதி மாருத: ॥ 23 ॥

அச்சேத்யோ ऽய-மதாஹ்யோ ऽய-மக்லேத்யோ ऽசோஷ்ய ஏவ ச ।
நித்ய: ஸர்வகத: ஸ்த்தாணு-ரசலோ ऽயம் ஸநாதன: ॥ 24 ॥

அவ்யக்தோ ऽய-மசிந்த்யோ ऽய-மவிகார்யோ ऽய-முச்யதே ।
தஸ்மா-தேவம் விதித்வைநம் நானுசோசிது-மர்ஹஸி ॥ 25 ॥

அத சைனம் நித்யஜாதம் நித்யம் வா மன்யஸே ம்ருதம் ।
ததாபி த்வம் மஹாபாஹோ நைநம் சோசிது-மர்ஹஸி ॥ 26 ॥

22. மனிதன் எவ்வாறு நைந்துபோன துணிகளை எறிந்து விட்டு வேறு புதியவற்றை எடுத்துக் கொள்கிறானோ அவ்வாறு உடலில் உறைபவன் நைந்துபோன உடலங்களை விட்டுவிட்டு வேறு புதியவற்றை அடைகிறான்.

23. ஆயுதங்கள் இவ்வான்மாவைச் சிதைக்கமாட்டா; தீ இதை எரிக்காது: தண்ணீர் இதை நனைக்காது; காற்றும் உலர்த்தாது.

24. இது வெட்டொணாதது; எரிக்கொணாதது; நனைக்கொணாதது; உலர்த்தவும் ஒண்ணாததே. இது அழிவற்றது. எங்குமுளது, நிலை பெற்றது, அசைவில்லாதது, என்றுமுளது.

25. இது புலன்களுக்கெட்டாதது. மனதுக் கெட்டாதது, மாற்ற முடியாதது எனக் கூறப்படுகிறது. ஆகையால் இதை இவ்வாறு அறிந்து துக்கிப்பதற்கு நீ உரியவனில்லை.

26. அன்றி இதை எப்போதும் பிறப்பதாயும் எப்போதும் இறப்பதாயும் நீ நினைத்தாய் எனினும், அப்போதும் வெற்றித் தோள் படைத்தோனே! நீ இதை குறித்துத் துக்கப்படுவதற்கு உரியவனில்லை.

ஜாதஸ்ய ஹி த்ருவோ ம்ருத்யுர்-த்ருவம் ஜன்ம ம்ருதஸ்ய ச
தஸ்மா-தபரிஹார்யேsர்த்தே ந த்வம் சோசிது-மர்ஹஸி ॥27॥

அவ்யக்தாதீனி பூதானி வ்யக்த-மத்த்யானி பாரத ।
அவ்யக்த-நிதனான்யேவ தத்ர கா பரிதேவனா ॥ 28

ஆச்சர்யவத் பச்யதி கச்சிதேனம்
ஆச்சர்யவத்-வததி ததைவ சான்ய: ।
ஆச்சர்யவச்சைன-மன்ய: ச்ருணோதி
ச்ருத்வாப்யேனம் வேத ந சைவ கச்சித் ॥ 29 ॥

தேஹீ நித்ய-மவத்த்யோsயம் தேஹே ஸர்வஸ்ய பாரத ।
தஸ்மாத் ஸர்வாணி பூதானி ந த்வம் சோசிது-மர்ஹஸி ॥ 30 ॥

ஸ்வதர்மமபி சாவேக்ஷ்ய ந விகம்பிது-மர்ஹஸி ।
தர்ம்யாத்தி யுத்தாச்-ச்ரேயோsன்யத் க்ஷத்ரியஸ்ய ந
வித்யதே ॥ 31 ॥

27. பிறந்தவனுக்குச் சாவு நிச்சயமன்றோ? இறந்தவனுக்கும் பிறப்பு நிச்சயம். ஆகையால் தவிர்க்கமுடியாத விஷயத்தில் நீ துக்கிப்பதற்கு உரியவனில்லை.

28. பார்த்தா! பொருள்கள் தோன்றாமை முதலாயும் தோற்றம் இடையாயும் தோன்றாமையே முடிவாயும் உடையன. அங்கு பரிதவித்தல் ஏன்?

29. எவனோ ஒருவன் இதை ஆச்சரியம்போல் காண்கிறான்; அவ்வாறே வேறொருவன் இதைப்பற்றி ஆச்சரியம்போல் பேசுகிறான்; மற்றுமொருவன் இதை ஆச்சரியம்போல் கேட்கிறான்; எவனும் கேட்டும் இதை அறியவே இல்லை.

30. பார்த்தா! எல்லா உடலிலும் இந்த ஆன்மா என்றும் மரணமில்லாதது; ஆகையால் நீ எவ்வுயிர்களிடத்தும் துக்கிப்பதற்கு உரியவனில்லை.

31. உனக்குரிய தருமத்தை நோக்குமிடத்தும் நீ பின்னிடுவதற்கு உரியவனில்லை. ஏனெனில் தர்மயுத்தத்தை விடச் சிறந்தது வேறொன்றும் க்ஷத்திரியனுக்கு இல்லை.

யத்ருச்சயா சோபபன்னம் ஸ்வர்க்கத்வார-மபாவ்ருதம் ।
ஸுகினஃ க்ஷத்ரியாஃ பார்த்த லபந்தே யுத்த-மீத்ருசம் ॥ 32 ॥

அத சேத் த்வமிமம் தர்ம்யம் ஸங்க்ராமம் ந கரிஷ்யஸி ।
ததஃ ஸ்வதர்மம் கீர்த்திஞ் ச ஹித்வா பாப-மவாப்ஸ்யஸி ॥ 33 ॥

அகீர்த்திஞ்சாபி பூதானி கதயிஷ்யந்தி தே஽வ்யயாம் ।
ஸம்பாவிதஸ்ய சாகீர்த்திர்-மரணா-ததிரிச்யதே ॥ 34 ॥

பயாத்-ரணா-துபரதம் மம்ஸ்யந்தே த்வாம் மஹாரதாஃ ।
யேஷாஞ் ச த்வம் பஹுமதோ பூத்வா யாஸ்யஸி லாகவம் ॥ 35 ॥

அவாச்ய-வாதாம்ச்ச பஹூன் வதிஷ்யந்தி தவாஹிதாஃ ।
நிந்தந்தஸ்-தவ ஸாமர்த்த்யம் ததோ துஃக்கதரம் நு கிம் ॥ 36 ॥

32. பார்த்தா! தற்செயலாய் வாய்த்ததும் திறக்கப்பட்ட ஸ்வர்க்க வாசல் போன்றதுமாகிய இதுபோன்ற யுத்தத்தைப் பாக்கியவான்களான க்ஷத்திரியர்களே அடைவார்கள்.

33. ஆனால் இந்த தர்மமான யுத்தத்தைச் செய்யா விட்டால் அதனால் உனக்குரிய தருமத்தையும், புகழையும் விட்டு விலகித் தீவினையை அடைவாய்.

34. மேலும் உலகத்துள்ளோர் உன்னுடைய அழியாத பழியைப் பேசுவார்கள். நல்ல புகழ் பெற்றவனுக்குப் பழிச் சொல் சாவைக் காட்டிலும் அதிகமாகும்.

35. சிறந்த தேராளிகளும் உன்னைப் பயத்தால் போரி லிருந்து பின்வாங்கியவனைக் கருதுவார்கள். இவர்களுக்கு நீ வெகுமானிக்கத் தகுந்தவனாக இதுவரை இருந்து இனி எளிமையை அடைவாய்.

ஹதோ வா ப்ராப்ஸ்யஸி ஸ்வர்க்கம் ஜித்வா வா
போக்ஷ்யஸே மஹீம்
தஸ்மா-துத்திஷ்ட்ட கௌந்தேய யுத்தாய க்ருதநிச்சயஃ ॥37॥
ஸுகதுஃக்கே ஸமே க்ருத்வா லாபாலாபௌ ஜயாஜயௌ ।
ததோ யுத்தாய யுஜ்யஸ்வ நைவம் பாப-மவாப்ஸ்யஸி ॥ 38 ॥
ஏஷா தேऽபிஹிதா ஸாங்க்யே புத்திர்-யோகே த்விமாம்
ச்ருணு ।
புத்த்யா யுக்தோ யயா பார்த்த கர்மபந்தம் ப்ரஹாஸ்யஸி ॥39॥
நேஹாபிக்ரம-நாசோऽஸ்தி ப்ரத்யவாயோ ந வித்யதே ।
ஸ்வல்பமப்யஸ்ய தர்மஸ்ய த்ராயதே மஹதோ பயாத் ॥ 40 ॥
வ்யவஸாயாத்மிகா-புத்தி-ரேகேஹ குருநந்தன ।
பஹுசாகா ஹ்யனந்தாச்ச புத்தயோऽவ்யவஸாயினாம் ॥ 41 ॥

---

36. உன்னுடைய சத்துருக்களும் உன்னுடைய திறமையை இகழ்ந்து பல சொல்லத் தகாத வார்த்தைகளைச் சொல்வார்கள். அதை விடத் துன்பம் மிகுந்தது யாது?

37. கொல்லப்பட்டாலோ ஸ்வர்க்கத்தை அடைவாய்; ஜயித்தாலோ பூமியை அனுபவிப்பாய்; ஆகையால் குந்தி புத்ரா! போருக்குத் துணிந்தவனாக எழுந்திரு.

38. இன்ப துன்பங்களையும் லாப நஷ்டங்களையும் வெற்றித் தோல்விகளையும் சமமாகக் கொண்டு, பிறகு போருக்கு முயல்வாய். இங்ஙனம் செய்தால் பாவத்தை அடையமாட்டாய்.

39. ஸாங்கிய விஷயத்தில் இந்த புத்தியானது உனக்குச் சொல்லப்பட்டது; இனி யோக விஷயத்தில் இதைக் கேள்; பார்த்தா! இந்த புத்தியுடன் கூடியவனாய்க் கருமத்தளையை அறுத்திடுவாய்.

40. இதில் முயற்சி வீணாதல் இல்லை; எதிரிடையான பலன் உண்டாகாது; இந்த தருமத்தின் சிறிதுங்கூடப் பெரிய பயத்தினின்றும் காப்பாற்றும்.

41. அர்ஜுனா! இதில் நிச்சயவடிவான புத்தி ஒன்றே; நிச்சய மொன்றில்லாதவருக்குப் புத்திகள் பல கிளைகளையுடையன, முடிவில்லாதன.

யாமிமாம் புஷ்பிதாம் வாசம் ப்ரவதந்த்-யவிபச்சித: ।
வேதவாதரதா: பார்த்த நான்ய-தஸ்தீதி வாதின: ॥ 42 ॥

காமாத்மான: ஸ்வர்க்கபரா ஜன்மகர்ம-பலப்ரதாம் ।
க்ரியாவிசேஷபஹுலாம் போகைச்வர்யகதிம் ப்ரதி ॥ 43 ॥

போகைச்வர்ய-ப்ரஸக்தானும் தயாபஹ்ருத-சேதஸாம் ।
வ்யவஸாயாத்மிகா புத்தி: ஸமாதௌ ந விதீயதே ॥ 44 ॥

த்ரைகுண்யவிஷயா வேதா நிஸ்த்ரைகுண்யோ பவார்ஜுன:
நிர்த்வந்த்வோ நித்யஸத்வஸ்த்தோ நிர்யோகக்ஷேம
ஆத்மவான் ॥ 45 ॥

யாவானர்த்த உதபானே ஸர்வத: ஸம்ப்லுதோதகே ।
தாவான் ஸர்வேஷு வேதேஷு ப்ராஹ்மணஸ்ய விஜானத:
॥ 46 ॥

---

42–43. பார்த்தா! அறிவீனர்கள் வேதத்தின் அர்த்த வாதத்தில் பற்றுடையவராய், வேறு இல்லை என்று வாதஞ்செய்பவராய், ஆசை நிறைந்த மனத்தினராய், ஸ்வர்க்கத்தையே மேலாகக் கொண்டவராய் இன்ப நுகர்ச்சிக்காகவும் உயர் பதவிக்காகவும் எடுக்கும் ஜன்மத்தையே தொழிலின் பயனைக் கொண்டதும் விசேஷமானதும் விரிவானதுமான கிரியைகளைப்பற்றியதுமாகிய பூப்போன்ற வார்த்தைகளை இனிதாகத் தொடர்ந்து பேசுவார்கள்.

44. இன்ப நுகர்ச்சியிலும் உயர் பதவியிலும் ஆழ்ந்த பற்றுடையவர்களும் அதனால் விவேகத்தை இழந்தவரும் ஆகிய இவர்கட்கு நிச்சயமான புத்தி உள்ளத்தில் உதியாது.

45. வேதங்கள் முக்குணங்களைப் பற்றியவை. அர்ஜுனா! நீ முக்குணத்தைக் கடந்தவனாய், இருமைகளை ஜயித்தவனாய், நிலைபெற்ற மனத்தினனாய்ப் பொருளை ஈட்டுதலினும் போற்றுதலினும் அலையாத மனத்தினனாய், உடல் நாட்டம் விட்டு, உள் நாட்டம் உடையவனாய் இரு.

46. எங்கும் பரந்து பெருகிய நீர் நிலையில், பருகுதற்குரிய சிற்றூறலில் உள்ள பயன் எங்ஙனம் அடங்கியுள்ளதோ, அங்ஙனமே கற்றுணர்ந்த பிராம்மணனுக்கு வேதம் அனைத்திலுமாம்.

கர்மண்யேவாதிகாரஸ்தே மா பலேஷு கதாசன ।
மா கர்மபல ஹேதுர்பூர்-மா தே ஸங்கோ஽ஸ்த்-வகர்மணி ॥ 47 ॥

யோகஸ்த்த: குரு கர்மாணி ஸங்கம் த்யக்த்வா தனஞ்ஜய ।
ஸித்த்யஸித்த்யோ: ஸமோ பூத்வா ஸமத்வம் யோக
[உச்யதே ॥ 48 ॥

தூரேண ஹ்யவரம் கர்ம புத்தியோகாத் தனஞ்ஜய ।
புத்தௌ சரண-மன்விச்ச க்ருபணா: பலஹேதவ: ॥ 49 ॥

புத்தியுக்தோ ஜஹாதீஹ உபே ஸுக்ருததுஷ்க்ருதே ।
தஸ்மாத்-யோகாய யுஜ்யஸ்வ யோக: கர்மஸு கௌசலம்
[॥ 50 ॥

கர்மஜம் புத்தியுக்தா ஹி பலம் த்யக்த்வா மநீஷிண: ।
ஜன்மபந்த-விநிர்முக்தா: பதம் கச்சந்த்-யனாமயம் ॥ 51 ॥

47. கருமத்திலேயே உனக்கு அதிகாரம்; ஒருபோதும் பயனில் இல்லை; பயனைக் கருதிக் கருமம்செய்பவனாக இராதே; செயலின்மையில் உனக்குப் பற்றும் ஏற்படவேண்டாம்.

48. தனஞ்ஜயா! யோகத்தில் நிலைபெற்றுப் பற்றை விட்டு வெற்றி தோல்விகளில் ஸமமாக இருந்துகொண்டு கருமங்களைச் செய்வாய். ஸமநிலையே யோகம் என்று சொல்லப்படுகிறது.

49. தனஞ்ஜயா! ஸம புத்தியுடன் செய்யும் நிஷ்காம கருமத்தை விடக் காம்ய கருமம் வெகுதூரம் கீழ்ப்பட்டதன்றோ? ஸமத்வ புத்தி யோகத்தில் சரண் புகுதலை விரும்பு; பயனைக் கருதிக் கருமம் செய்பவர் லோபிகள்.

50. ஸம புத்தியுடன் கூடினவன் இவ்வாழ்க்கையில் புண்ணியம் பாவம் இரண்டையும் விடுகின்றான். ஆகையால் யோகத்திற்காக முயற்சி செய்வாய். யோகம் கருமத்தில் ஸாமர்த்தியம் ஆகும்.

51. ஸம புத்தியுடன் கூடிய அறிஞர் வினைப்பயனைத் துறந்து பிறவித் தளையினின்று விடுபட்டுத் துக்கமற்ற நிலையை நிச்சயமாக அடைகின்றனர்.

யதா தே மோஹகலிலம் புத்திர்-வ்யதிதரிஷ்யதி ।
ததா கந்தாஸி நிர்வேதம் ச்ரோதவ்யஸ்ய ச்ருதஸ்ய ச ॥ 52 ॥
ச்ருதிவிப்ரதிபன்னா தே யதா ஸ்தாஸ்யதி நிச்சலா ।
ஸமாதாவசலா புத்திஸ்-ததா யோக-மவாப்ஸ்யஸி ॥ 53 ॥

அர்ஜுன உவாச—

ஸ்திதப்ரஜ்ஞஸ்ய கா பாஷா ஸமாதிஸ்தஸ்ய கேசவ ।
ஸ்திததீ: கிம் ப்ரபாஷேத கிமாஸீத வ்ரஜேத கிம் ॥ 54 ॥

ஸ்ரீ பகவானுவாச—

ப்ரஜஹாதி யதா காமான் ஸர்வான் பார்த்த மனோகதான் ।
ஆத்மன்யேவாத்மனா துஷ்ட: ஸ்திதப்ரஜ்ஞஸ்-ததோச்யதே ॥ 55 ॥
து:க்கேஷ்வனுத்விக்னமனா: ஸுகேஷு விகத-ஸ்ப்ருஹ: ।
வீத-ராக-பயக்ரோத: ஸ்திததீர்-முனி-ருச்யதே ॥ 56 ॥

52. எப்பொழுது உன்னுடைய புத்தி மோகமாகிற கலக்கத்தைக் கடந்து செல்லுமோ அப்போது கேட்க வேண்டியதிலும் கேட்டதிலும் விருப்பின்மையை அடைவாய்.

53. எப்பொழுது பல பொருளுங்கேட்டுப் பலவகையிற் கலங்கும் புத்தி அசைவற்று நிற்குமோ, அப்போது யோகத்தை அடைவாய்.

அர்ஜுனன் கூறியது—

54. கேசவா! ஞானம் நிலைத்து ஸமாதியில் நிற்பவனுடைய வர்ணனை என்ன? அந்த ஸ்திதப்ரஜ்ஞன் எவ்வாறு பேசுவான்? எப்படி இருப்பான்? எங்ஙனம் நடப்பான்?

ஸ்ரீ பகவான் கூறியது—

55. பார்த்தா! எப்பொழுது மனத்திலடங்கிய ஆசைகள் அனைத்தையும் தூரத் தள்ளுகின்றானோ, ஆத்மாவினிடத்திலேயே ஆத்மாவினால் உள் மகிழ்ச்சி நிறைந்தவனாகின்றானோ அப்போது அவன் ஸ்திதப்ரஜ்ஞன் என்று சொல்லப்படுகிறான்.

56. துன்பத்தில் துடியாத மனத்தினனாய் இன்பத்தில் ஆசை எழாதவனாய், விருப்பம், பயம், கோபம், இல்லாதவனாய் இருப்பவனே ஞானம் நிலைபெற்ற முனிவன் எனச் சொல்லப்படுகிறான்.

யஃ ஸர்வத்ராநபிஸ்நேஹஸ் தத்தத் ப்ராப்ய சுபாசுபம் ।
நாபிநந்ததி ந த்வேஷ்டி தஸ்ய ப்ரஜ்ஞா ப்ரதிஷ்ட்டிதா ॥ 57 ॥

யதா ஸம்ஹரதே சாயம் கூர்மோங்கானீவ ஸர்வசஃ ।
இந்த்ரியாணீந்த்ரியார்த்தேப்ப்யஸ்-தஸ்ய ப்ரஜ்ஞா
[ப்ரதிஷ்ட்டிதா ॥ 58 ॥

விஷயா விநிவர்த்தந்தே நிராஹாரஸ்ய தேஹினஃ ।
ரஸவர்ஜம் ரஸோऽப்யஸ்ய பரம் த்ருஷ்ட்வா நிவர்த்ததே
॥ 59 ॥

யததோ ஹ்யபி கௌந்தேய புருஷஸ்ய விபச்சிதஃ ।
இந்த்ரியாணி ப்ரமாதீனி ஹரந்தி ப்ரஸபம் மனஃ ॥ 60 ॥

தானி ஸர்வாணி ஸம்யம்ய யுக்த ஆஸீத மத்பரஃ ।
வசே ஹி யஸ்யேந்த்ரியாணி தஸ்ய ப்ரஜ்ஞா ப்ரதிஷ்டிதா
[ ॥ 61 ॥

57. எவன் எல்லா இடத்திலும் பற்றில்லாதவனும் அந்த அந்த நன்மை தீமைகளை அடைந்து ஸந்தோஷத்தால் பூரிப்பதில்லையோ, துக்கத்தால் வெறுப்பதில்லையோ அவனுடைய ஞானம் உறுதியாய் நிலைபெற்றதாகும்.

58. மேலும் எப்போது இந்த யோகி ஆமையானது தன் அங்கங்களைச் செய்வது போலப் புலன்களை இந்திரிய விஷயங்களினின்று எல்லா வகையிலும் உள்ளே இழுத்துக்கொள்ளுகின்றானோ அவனுடைய ஞானம் உறுதியாக நிலைபெற்றதாகும்.

59. உணவை ஒழித்தவனுக்குப் பொருள்கள் ஒழிவடைகின்றன—ருசி ஒன்று நீங்கலாக; ருசியும் பரம்பொருளைக் கண்டபின் இவனுக்கு ஒழிவடைகிறது.

60. குந்தியின் மகனே! முயற்சியுடையவனும் நல்லறிவுடையவனும் ஆகிய புருஷனுடைய மனத்தையும் கலக்குறச் செய்யும் இந்திரியங்கள் பலாத்காரமாய் மனத்தை இழுத்துச் செல்லுகின்றன அன்றோ?

61. நிலைபெற்ற மனத்தினன் அவை யாவற்றையும் செவ்வனவே அடக்கி என்னையே உயர் பொருளாய்க் கருதி அமைவுற இருக்க வேண்டும். எவனுடைய இந்திரியங்கள் தன் வசப்பட்டனவோ அவனுடைய ஞானமே உறுதியானது.

த்யாயதோ விஷயான் பும்ஸ: ஸங்கஸ்-தேஷூபஜாயதே ।
ஸங்காத் ஸஞ்ஜாயதே காம: காமாத் க்ரோதோऽபிஜாயதே
॥ 62 ॥

க்ரோதாத் பவதி ஸம்மோஹ: ஸம்மோஹாத்
[ஸ்ம்ருதிவிப்ப்ரம: ।
ஸ்ம்ருதிப்ப்ரம்சாத் புத்திநாசோ புத்திநாசாத் ப்ரணச்யதி
॥ 63 ॥

ராகத்வேஷ-வியுக்தைஸ்து விஷயா-னிந்த்ரியைச்-சரன் ।
ஆத்மவச்யைர்-விதேயாத்மா ப்ரஸாத-மதிகச்சதி ॥ 64 ॥

ப்ரஸாதே ஸர்வ-து:க்காணும் ஹானி-ரஸ்யோபஜாயதே ।
ப்ரஸன்ன-சேதஸோ ஹ்யாசு புத்தி: பர்யவதிஷ்ட்டதே ॥ 65 ॥

நாஸ்தி புத்தி-ரயுக்தஸ்ய ந சாயுக்தஸ்ய பாவனு ।
ந சாபாவயத: சாந்தி-ரசாந்தஸ்ய குத: ஸுகம் ॥ 66 ॥

62. பொருள்களை உற்று நினைக்கிற புருஷனுக்கு அவற்றினிடம் பற்று உண்டாகின்றது; பற்றினின்று ஆசை தோன்றுகின்றது; ஆசையினின்று கோபம் பிறக்கின்றது.

63. கோபத்தினின்று பெருமோகம் உண்டாகிறது; பெருமோகத்தினின்று நன்னினைவின் கேடு விளைகின்றது; நன்னினைவு கெட்டதனால் புத்தி நாசம் ஏற்படுகின்றது; புத்தி நாசத்தினால் முற்றும் அழிகின்றான்.

64. ஆனால் விருப்புவெறுப்பற்றவையும் தன்வயமானவையும் ஆகிய இந்திரியங்களால் பொருள்களை அனுபவித்துக் கொண்டு தன்னடக்கம் பெற்றவன் உள்ளத்தெளிவை எய்துகிறான்.

65. உள்ளத்தெளிவில் இவனுடைய எல்லாத் துன்பங்களுக்கும் அழிவு ஏற்படுகின்றது; தெளிந்த மனமுடையவனுக்குச் சீக்கிரத்தில் புத்தி தடுமாற்றமின்றி நன்கு நிலை பெறுகின்றது.

66. நிலைபெறாதவனுக்கு விவேகம் இல்லை; நிலைபெறாதவனுக்கு ஆன்ம சிந்தையும் இல்லை; ஆன்ம சிந்தையில்லாதவனுக்கு மனவமைதி இல்லை; மனவமைதி யில்லாதவனுக்கு இன்பம் எங்ஙனம்?

இந்த்ரியாணாம் ஹி சரதாம் யன்மனோऽனுவிதீயதே ।
தததஸ்ய ஹரதி ப்ரஜ்ஞாம் வாயுர்-நாவமிவாம்பஸி ॥ 67 ॥

தஸ்மாத் யஸ்ய மஹாபாஹோ நிக்ருஹீதானி ஸர்வச: ।
இந்த்ரியாணீந்த்ரியார்த்தேப்ப்யஸ்-தஸ்ய ப்ரஜ்ஞா
ப்ரதிஷ்ட்டிதா ॥ 68 ॥

யா நிசா ஸர்வபூதானாம் தஸ்யாம் ஜாகர்த்தி ஸம்யமீ ।
யஸ்யாம் ஜாக்ரதி பூதானி ஸா நிசா பச்யதோ முனே: ॥ 69 ॥

ஆபூர்யமாண-மசலப்ரதிஷ்ட்டம்
ஸமுத்ரமாப: ப்ரவிசந்தி யத்வத் ।
தத்வத் காமா யம் ப்ரவிசந்தி ஸர்வே
ஸ சாந்தி-மாப்னோதி ந காமகாமீ ॥ 70 ॥

67. அலைகின்ற இந்திரியங்களுக்கு அனுகூலமாய் எந்த மனம் பின் செல்கின்றதோ அது இவனுடைய விவேகத்தைக் காற்றானது நீரின்மேல் படகைப்போல கவர்ந்து செல்கின்றது.

68. ஆகையால், தோள்வலி படைத்தவனே ! எவனுடைய இந்திரியங்கள் விஷயங்களினின்று முற்றும் அடக்கப்பெற்றனவோ அவனுடைய ஞானம் தான் நிலைபெற்றது.

69. எல்லாப்பிராணிகளுக்கும் எது இரவோ அதில் மனமடங்கிய முனிவன் விழிப்புடையவனாயிருக்கிறான்; எதில் பிராணிகள் விழிப்புடையனவோ அது உண்மையைக் காணும் முனிவனுக்கு இரவாகும்.

70. எங்கும் நிரம்பியதும் நிலைகுலையாததும் ஆகிய ஸமுத்திரத்தை நதிகள் எவ்வாறு அடைகின்றனவோ அவ்வாறு ஆசைகளெல்லாம் எவனை அடைகின்றனவோ அவன் அமைதியை எய்துகிறான்; ஆசைகளைத் தொடர்பவன் எய்தான்.

விஹாய காமான் யஃ ஸர்வான் புமாம்ச்-சரதி நிஸ்ப்ருஹஃ ।
நிர்மமோ நிரஹங்காரஃ ஸ சாந்தி-மதிகச்சதி ॥ 71 ॥

ஏஷா ப்ராஹ்மீஸ்த்திதிஃ பார்த்த நைநாம் ப்ராப்யவிமுஹ்யதி।
ஸ்த்தித்வாஸ்யா-மந்தகாலேऽபி ப்ரஹ்மநிர்வாணம் ருச்சதி
॥ 72 ॥

இதி ஸ்ரீமத் பகவத்கீதாஸூபநிஷத்ஸு ப்ரஹ்மவித்யாயாம்
யோகசாஸ்த்ரே ஸ்ரீக்ருஷ்ணார்ஜுன-ஸம்வாதே
ஸாங்க்யயோகோ நாம
த்விதீயோऽத்யாயஃ ॥

---

71. எந்தப் புருஷன் எல்லா ஆசைகளையும் விட்டுப் பற்றில்லாதவனாய் 'நான்' 'என்னுடையது' என்பதில்லாதவனாய்ச் சஞ்சரிக்கின்றானோ அவன் அமைதியை எய்துகிறான்.

72. பார்த்தா! இதுவே பிரம்மத்துடன் ஒன்றுபட்ட நிலை; இதை அடைந்து ஒருவன் மோஹத்தில் அழுந்தமாட்டான். கடைசிக்காலத்திலும் இதில் நின்று பிரம்மத்தில் கலந்து போக்குவரவற்ற முக்தி நிலையை அடைகிறான்.

இங்ஙனம் பிரம்ம வித்தையாயும் யோகசாஸ்திரமாயும்
ஸ்ரீ கிருஷ்ணனுக்கும் அர்ஜுனனுக்கும் ஸம்பாஷணையாயும்
விளங்கும் ஸ்ரீமத் பகவத் கீதை என்னும் உபநிஷத்தில்
ஸாங்கியயோகம் என்று பெயர் பெற்ற
இரண்டாவது அத்தியாயம் முற்றும்.

## மூன்றும் அத்தியாயம்
## (கர்ம யோகம்)

அர்ஜுன உவாச—

ஜ்யாயஸீ சேத் கர்மணஸ்-தே மதா புத்திர்-ஜனார்த்தன ।
தத் கிம் கர்மணி கோரே மாம் நியோஜயஸி கேசவ ॥ 1 ॥

வ்யாமிச்ரேணைவ வாக்யேன புத்திம் மோஹயஸீவ மே ।
ததேகம் வத நிச்சித்ய யேன ச்ரேயோऽஹ-மாப்னுயாம் ॥ 2 ॥

ஸ்ரீ பகவானுவாச—

லோகேऽஸ்மின் த்விவிதா நிஷ்டாபுரா ப்ரோக்தா மயானக ।
ஜ்ஞானயோகேன ஸாங்க்யானாம் கர்மயோகேன யோகினாம் ॥ 3 ॥

ந கர்மணா-மனாரம்பாந்-நைஷ்கர்ம்யம் புருஷோऽச்னுதே ।
ந ச ஸந்ந்யஸனாதேவ ஸித்திம் ஸமதிகச்சதி ॥ 4 ॥

அர்ஜுனன் கூறியது—

1. ஜனார்த்தனா! கருமத்தைக்காட்டிலும் ஞானம் மேலானது என்பது உன்னுடைய கருத்து எனில், அப்போது ஏன் கேசவா! கொடிய கருமத்தில் என்னை ஏவுகிறாய்?

2. குழப்புவது போன்ற வாக்கால் என்னுடைய அறிவை மயக்குகிறவன் போல் காண்கிறாய். எதனால் நான் உயர் நலத்தை அடைவேனோ அந்த ஒன்றையே நிச்சயித்துக் கூறியருள்வாய்.

ஸ்ரீ பகவான் கூறியது—

3. பாவமற்றவனே! இவ்வுலகில் இருவகையான நிஷ்டை ஆதியில் என்னால் கூறப்பட்டது: ஞானயோகத்தால் ஸாங்கியர்க்கும் கருமயோகத்தால் கருமயோகிகட்கும்.

4. புருஷன் கருமங்களைத் தொடங்காததால் கருமத்திலிருந்து விடுபட்ட நிலையை அனுபவிப்பதில்லை. மேலும் கருமத்தை விட்டொழித்தலாலேயே சித்தியை அடைகிறதும் இல்லை.

ந ஹி கச்சித் க்ஷணமபி ஜாது திஷ்ட்டத்-யகர்மக்ருத் ।
கார்யதே ஹ்யவச: கர்ம ஸர்வ: ப்ரக்ருதிஜைர்-குணை: ॥ 5 ॥

கர்மேந்த்ரியாணி ஸம்யம்ய ய ஆஸ்தே மனஸா ஸ்மரன் ।
இந்த்ரியார்த்தான் விமூடாத்மா மித்யாசார: ஸ உச்யதே ॥ 6 ॥

யஸ்த்விந்த்ரியாணி மனஸா நியம்-யாரபதே ऽர்ஜுன ।
கர்மேந்த்ரியை: கர்மயோக-மஸக்த: ஸ விசிஷ்யதே ॥ 7 ॥

நியதம் குரு கர்ம த்வம் கர்ம ஜ்யாயோ ஹ்யகர்மண: ।
சரீரயாத்ராபி ச தே ந ப்ரஸித்த்யே-தகர்மண: ॥ 8 ॥

யஜ்ஞார்த்தாத் கர்மணோऽன்யத்ர லோகோऽயம் கர்மபந்தன: ।
ததர்த்தம் கர்ம கௌந்தேய முக்தஸங்க: ஸமாசர ॥ 9 ॥

5. ஒருபோதும், ஒரு விநாடிகூட, எவனும் கருமம் செய்யாதவனாக நிற்பதில்லை. இயற்கையின் குணங்களால் எல்லோரும் தம்மை யறியாமல் தொழிலில் இயக்குவிக்கப்படுகின்றனர்.

6. எவன் கருமேந்திரியங்களை மட்டும் அடக்கிவிட்டு இந்திரியங்கள் நாடும் பொருள்களை மனத்தால் நினைத்துக் கொண்டு இருக்கிறானோ அந்தப் பெரும் மூடன் பொய்யொழுக்க முடையவன் என்று சொல்லப்படுவான்.

7. அர்ஜுனா! ஆனால் எவன் ஐம்பொறிகளையும் மனத்தால் நன்கு அடக்கிப் பற்றின்றி கருமேந்திரியங்களால் கருமயோகத்தைத் தொடர்கின்றானோ அவன் சிறந்தவன்.

8. நீ விதிக்கப்பட்டுள்ள கடமையைச் செய்; கருமம் செய்யாமையினும் கருமம் செய்தல் சிறந்தது; கருமம் செய்யாத நிலையில் உனக்கு உடலை நடத்துதலுங்கூட முடியாமற்

9. யஜ்ஞத்திற்காக, அதாவது பகவதர்ப்பணமாக உள்ள கருமத்தினின்று விலகிய இடத்தில் தான் இந்த உலகம் கருமக்கட்டுடைத்து; அர்ஜுனா! யஜ்ஞத்தின் பொருட்டுப் பற்றற்றவனாய்க் கருமத்தைச் செவ்வனே செய்வாய்.

ஸஹ யஜ்ஞா: ப்ரஜா: ஸ்ருஷ்ட்வா புரோவாச ப்ரஜாபதி: ।
அனேன ப்ரஸவிஷ்யத்த்வ-மேஷவோऽஸ்த்விஷ்ட-காமதுக் ॥ 10 ॥

தேவான் பாவயதானேன தே தேவா பாவயந்து வ: ।
பரஸ்பரம் பாவயந்த: ச்ரேய: பரமவாப்ஸ்யத ॥ 11 ॥

இஷ்டான் போகான் ஹி வோ தேவா தாஸ்யந்தே யஜ்ஞபாவிதா: ।
தைர்-தத்தா-னப்ரதாயைப்யோ யோ புங்க்தே ஸ்தேன ஏவ ஸ: ॥ 12 ॥

யஜ்ஞசிஷ்டாசின: ஸந்தோ முச்யந்தே ஸர்வகில்பிஷை: ।
புஞ்ஜதே தே த்வகம் பாபா யே பசந்த்-யாத்மகாரணாத் ॥ 13 ॥

அன்னாத்-பவந்தி பூதானி பர்ஜன்யா-தன்னஸம்பவ: ।
யஜ்ஞாத்-பவதி பர்ஜன்யோ யஜ்ஞ: கர்மஸமுத்பவ: ॥ 14 ॥

---

10. ஆதியில் பிரம்மா யஜ்ஞங்களுடன் மனிதர்களைச் சிருஷ்டித்துக் கூறினார்:—இதனால் வளர்ச்சியடைவீர்கள்; இது உங்களுக்கு விரும்பியதை அளிக்கும் காமதேனுவாக இருக்கட்டும்.

11. இதனால் தேவர்களைப் போற்றுங்கள்; தேவர்கள் உங்களைப் போற்றட்டும்; ஒருவரையொருவர் போற்றுபவர்களாய் உயர்ந்த நன்மையை அடைவீர்கள்.

12. தேவர்கள் வேள்வியால் போற்றப்பட்டு விரும்பிய இன்பப் பொருள்களை உங்களுக்கு அளிப்பார்கள்; அவர்களால் கொடுக்கப்பட்டவற்றை அவர்களுக்குக் கொடுக்காமல் எவன் அனுபவிக்கின்றானோ அவன் திருடனேயன்றோ?

13. யஜ்ஞம் செய்து மிஞ்சியதை உண்ணும் சாதுக்கள் எல்லாப் பாவங்களினின்றும் விடுபடுகின்றனர்; ஆனால் எவர்கள் தமக்கெனவே சமைக்கின்றார்களோ அந்தப் பாவிகள் பாவத்தையே உண்கின்றார்கள்.

14. பிராணிகள் உணவினின்று உண்டாகின்றன; உணவு உண்டாதல் மழையினின்று; மழை யஜ்ஞத்தினின்று உண்டாகிறது; யஜ்ஞம் கருமத்தினின்று உண்டாகிறது.

கர்ம ப்ரஹ்மோத்பவம் வித்தி ப்ரஹ்மாக்ஷரஸமுத்பவம் ।
தஸ்மாத் ஸர்வகதம் ப்ரஹ்ம நித்யம் யஜ்ஞே ப்ரதிஷ்ட்திதம் ॥ 15 ॥

ஏவம் ப்ரவர்த்திதம் சக்ரம் நானுவர்த்தயதீஹ யஃ ।
அகாயு-ரிந்த்ரியாராமோ மோகம் பார்த்த ஸ ஜீவதி ॥ 16 ॥

யஸ்த்வாத்ம-ரதிரேவ ஸ்யா-தாத்ம-த்ருப்தச்ச மானவஃ ।
ஆத்மன்யேவ ச ஸந்துஷ்டஸ்-தஸ்ய கார்யம் ந வித்யதே ॥ 17 ॥

நைவ தஸ்ய க்ருதேனார்த்தோ நாக்ருதேனேஹ கச்சன ।
ந சாஸ்ய ஸர்வபூதேஷு கச்சிதர்த்த-வ்யபாச்ரயஃ ॥ 18 ॥

தஸ்மா-தஸக்தஃ ஸததம் கார்யம் கர்ம ஸமாசர ।
அஸக்தோ ஹ்யாசரன் கர்ம பரமாப்நோதி பூருஷஃ ॥ 19 ॥

---

15. கருமம் வேதத்தினின்று உண்டானதாக அறிவாய்; வேதமோ அழிவற்ற பரம்பொருளினின்று தோன்றியது; ஆகையால் எங்கும் பரவிய வேதம் யஜ்ஞத்தில் நிலைபெற்றுளது.

16. பார்த்தா! எவன் இங்கு இவ்வாறு சுழன்று வரும் சக்கரத்தைப் பின்பற்றிச் செல்வதில்லையோ அவன் விஷய சுகத்தைப் போற்றுபவனும் பாவத்தில் ஆயுளைப் போக்குபவனும் வீணாக வாழ்கிறான்.

17. ஆனால் எந்த மனிதன் ஆன்மாவிலேயே இன்புற்று, ஆன்மாவிலேயே திருப்தியடைந்து, ஆன்மாவிலேயே சந்தோஷத்தைப் பெற்றவனாக உள்ளவனோ அவனுக்குச் செய்ய வேண்டிய கருமம் ஒன்றுமில்லை.

18. அவனுக்கு இங்கே ஒரு கருமத்தைச் செய்வதால் பயன் இல்லை; ஒன்றைச் செய்யாததாலும் எப்பயனும் இல்லை; அவனுக்கு எல்லாப் பொருள்களிலும் பயனைக் கருதி நாடத் தகுந்தது ஒன்றுமில்லை.

19. ஆகையால் பற்றற்றவனாக எப்போதும் செய்ய வேண்டிய கருமத்தைச் செவ்வனே செய். ஏனெனில் பற்றில்லாமல் கருமத்தை அனுஷ்டித்துப் புருஷன் உயர்நிலத்தை எய்துகிறான்.

கர்மணைவ ஹி ஸம்ஸித்தி-மாஸ்த்திதா ஜனகாதய: ।
லோகஸங்க்ரஹ-மேவாபி ஸம்பச்யன் கர்த்துமர்ஹஸி ॥ 20 ॥

யத்யதாசரதி ச்ரேஷ்ட்டஸ்-தத்ததேவேதரோ ஜன: ।
ஸ யத் ப்ரமாணம் குருதே லோகஸ்-ததனுவர்த்ததே ॥ 21 ॥

ந மே பார்த்தாஸ்தி கர்த்தவ்யம் த்ரிஷு லோகேஷு கிஞ்சன
நாநவாப்த-மவாப்தவ்யம் வர்த்த ஏவ ச கர்மணி ॥ 22 ॥

யதிஹ்யஹம் ந வர்த்தேயம் ஜாது கர்மண்-யதந்த்ரித: ।
மம வர்த்மானுவர்த்தந்தே மனுஷ்யா: பார்த்த ஸர்வச: ॥ 23 ॥

உத்ஸீதேயு-ரிமே லோகா ந குர்யாம் கர்ம சேதஹம் ।
ஸங்கரஸ்ய ச கர்த்தாஸ்யா-முபஹன்யா-மிமா: ப்ரஜா: ॥24॥

---

20. ஜனகர் முதலானோர்கள் கருமத்தாலேயே உயர்ந்த சித்தியை அடைந்தனர். ஆகையால் உலகை நல்வழிப் படுத்துதலைக் கருதியும் நீ கருமத்தைச் செய்தற்கே உரியவனா கிறாய்.

21. பெரியோன் எது எதை அனுஷ்டிக்கிறானோ அதையே ஏனைய ஜனங்களும் பின்பற்றுகின்றனர். அவன் எதை மதிப்புள்ளதாகச் செய்கிறானோ அதை உலகம் பின் பற்றுகிறது.

22. பார்த்தா! செய்யவேண்டிய கருமம் எனக்கு மூவுல கிலும் ஒரு சிறிதும் இல்லை; அடையப் படாததாயும் இனி அடைதற்குரியதாயும் ஒன்றும் இல்லை; எனினும் கருமத்தில் முயன்றுகொண்டே இருக்கிறேன்.

23. பார்த்தா! நான் எப்போதும் அயர்வின்றிக் கருமத் தில் முயலாமற் போனால், நிச்சயமாக மனிதர்களும் என்னுடைய அந்நெறியையே எங்கும் பின்தொடர்வர்.

24. நான் கருமத்தைச் செய்யாமற் போனால் இவ்வுலகங் கள் அழிந்துபோகும்; மேலும் கலக்கத்திற்கும் ஜாதிக்குழப் பத்திற்கும் நான் கர்த்தா ஆவேன்; இந்த ஜனங்களைக் கெடுத்தவனும் ஆய்விடுவேன்.

ஸக்தா: கர்மண்-யவித்வாம்ஸோ யதா குர்வந்தி பாரத ।
குர்யாத்-வித்வாம்ஸ்-ததாஸக்தச்-சிகீர்ஷுர்-லோகஸங்க்ர
[ஹம் ॥ 25 ॥

ந புத்திபேதம் ஜனயே-தஜ்ஞானும் கர்மஸங்கினும் ।
ஜோஷயேத் ஸர்வகர்மாணி வித்வான் யுக்தஃ ஸமாசரன் ॥ 26 ॥

ப்ரக்ருதே: க்ரியமாணனி குணை: கர்மாணி ஸர்வச: ।
அஹங்கார-விமூடாத்மா கர்த்தாஹமிதி மன்யதே ॥ 27 ॥

தத்வவித்து மஹாபாஹோ குணகர்ம-விபாகயோ:
குணு குணேஷு வர்த்தந்த இதி மத்வா ந ஸஜ்ஜதே ॥ 28 ॥

ப்ரக்ருதேர்-குணஸம்மூடா: ஸஜ்ஜந்தே குணகர்மஸு ।
தானக்ருத்ஸ்ன-விதோ மந்தான் க்ருத்ஸ்னவிந்ந விசால
[யேத் ॥ 29 ॥

---

**25.** பார்த்தா! கருமத்தில் பற்றுள்ள பாமரர் எவ்வாறு செய்கின்றனரோ அவ்வாறே ஞானியும் உலகை நல்வழிப் படுத்துவதை விரும்பிப் பற்றில்லாமல் கருமம் செய்தல் வேண்டும்.

**26.** கருமத்தில் பற்றுள்ள அவிவேகிகளிடம் புத்தி மாருட்டத்தை உண்டாக்கக் கூடாது; அறிவாளி ஸம புத்தியுடன் கூடினவனுய் எல்லாக் கருமங்களையும் தான் அனுஷ்டித்துப் பிறரையும் அக்கருமங்களில் கூட்டி வைக்கவேண்டும்.

**27.** பிரகிருதியின் குணங்களாலேயே எங்கும் கருமங்கள் செய்யப்படுகின்றன; அகங்காரத்தால் அறிவிழந்தவன் தான் செய்பவன் என்று நினைக்கிருன்.

**28.** ஆனல் தோள் வலி படைத்தோனே! குண கருமங்களின் பாகுபாடுகளில் உண்மையை உணர்ந்தவன் ஐம்பொறி வடிவமான குணங்கள் ஐம்புலன் வடிவமான பொருள்களில் இயங்குகின்றன என்று அறிந்து பற்றடையமாட்டான்.

**29.** பிரகிருதியின் குணத்தில் அறிவில்லாதவர்கள் குணத்தொழிலில் பற்றடைகின்றனர்; அந்த அறிவீனர்களாகிய மூடர்களை நிறைந்த அறிவுள்ளவன் நிலை கெடும்படி செய்யக் கூடாது.

மயி ஸர்வாணி கர்மாணி ஸந்ந்யஸ்யாத்த்யாத்ம-சேதஸா ।
நிராசீர்-நிர்மமோ பூத்வா யுத்த்யஸ்வ விகதஜ்வரः ॥ 30 ॥

யே மே மதமிதம் நித்ய-மனுதிஷ்ட்டந்தி மானவாः ।
ச்ரத்தாவந்தோ ऽனஸூயந்தோ முச்யந்தே தேऽபி கர்மபிः ॥ 31 ॥

யேத்வேத-தப்ப்யஸூயந்தோ நானுதிஷ்ட்டந்தி மே மதம் ।
ஸர்வஜ்ஞான-விமூடான்ஸ்-தான் வித்தி நஷ்டா-னசேதஸः ॥ 32 ॥

ஸத்ருசம் சேஷ்டதே ஸ்வஸ்யாः ப்ரக்ருதேர்-ஜ்ஞான
வானபி ।
ப்ரக்ருதிம் யாந்தி பூதானி நிக்ரஹः கிம் கரிஷ்யதி ॥ 33 ॥

30. எல்லாக் கருமங்களையும் என்னிடத்தில் ஸமர்ப்பணம் செய்து, தான் ஆன்மா என்கிற அறிவுடன், ஆசையில்லாதவனாய், என்னுடையது என்ற பற்றில்லாதவனாய் இருந்துகொண்டு, மனக்கொதிப்பு முற்றும் நீங்கியவனாய்ப் போர் புரிவாய்.

31. சிரத்தையுடையவர்களாகவும் பொறாமை யில்லாதவர்களாகவும் எந்த மனிதர்கள் என்னுடைய இந்த மதத்தை எப்போதும் அனுஷ்டிக்கின்றார்களோ அவர்களும் கருமக்கட்டினின்று விடுபடுகின்றனர்.

32. ஆனால் எவர்கள் என்னுடைய இந்த மதத்தைக் குறை கூறி நிந்திப்பவர்களாய்ப் பின்பற்றுவதில்லையோ அவர்களை நல்லறிவனைத்தும் மழுங்கியவர்களாயும் அவிவேகிகளாயும் இப்பிறவியை வீணாக்கியவர்களாயும் அறி.

33. ஞானவானுங்கூட தன்னுடைய இயற்கைக்கு ஒத்தபடியே நடந்திடுவான் ; தோன்றியவையெல்லாம் இயற்கையைப் பற்றி ஒழுகுகின்றன, அடக்கும் முயற்சி என்ன செய்ய வல்லது ?

இந்த்ரியஸ்-யேந்த்ரியஸ்-யார்த்தே ராகத்வேஷௌ வ்யவஸ்த்
[திதௌ
தயோர்-ந வசமாகச்சேத் தௌ ஹ்யஸ்ய பரிபந்திநௌ ॥ 34 ॥

ச்ரேயான் ஸ்வதர்மோ விகுணஃ பரதர்மாத் ஸ்வனுஷ்ட்டிதாத்
ஸ்வதர்மே நிதனம் ச்ரேயஃ பரதர்மோ பயாவஹஃ ॥ 35 ॥

அர்ஜுன உவாச —

அத கேன ப்ரயுக்தோऽயம் பாபஞ் சரதி பூருஷஃ।
அனிச்சன்னபி வார்ஷ்ணேய பலாதிவ நியோஜிதஃ ॥ 36 ॥

ஸ்ரீ பகவானுவாச —

காம ஏஷ க்ரோத ஏஷ ரஜோகுண-ஸமுத்பவஃ।
மஹாசனோ மஹாபாப்மா வித்த்யேந-மிஹ வைரிணம் ॥ 37 ॥

---

34. ஒவ்வொரு இந்திரியத்தினுடைய விஷயத்திலும் விருப்பு வெறுப்புக்கள் உட்புகுந்து நிற்கின்றன; அவற்றின் வசமாகச் செல்லுதல் கூடாது. அவை நிச்சயமாக இவனுக்கு நேர் விரோதிகள்.

35. நன்கு அனுஷ்டிக்கப்பட்ட பிறனுடைய தருமத்தைக் காட்டிலும், குணமற்றதாயினும் தன்னுடைய தருமம் சிறந்ததாம். தன்னுடைய தருமத்தில் சாவும் நலமாகும்; பிறனுடைய தருமம் பயத்தைத் தருவதாகும்.

அர்ஜுனன் கூறியது—

36. விருஷ்ணி குலத்தோனே—கிருஷ்ணா! —விருப்பம் இல்லாதவனாயினுங்கூட இந்தப் புருஷன் எதனால் ஏவப்பட்டு பலாத்காரமாகப் புகுத்தப்பட்டவன்போல் பாவத்தைச் செய்கிறான்?

ஸ்ரீ பகவான் கூறியது—

37. இதுவே காமம், இதுவே கோபம், ரஜோகுணத்தில் உதித்தது, பெருந்தீனி வேண்டுவது, கொடிய பாவத்தை விளைவிப்பது, இவ்வுலகில் இதைச் சத்துருவாக அறிவாய்.

தூமேனாவ்ரியதே வஹ்னிர்-யதாதர்சோ மலேன ச ।
யதோல்பே-நாவ்ருதோ கர்ப்பஸ்-ததா தேனேதமாவ்ருதம்
॥ 38 ॥

ஆவ்ருதம் ஜ்ஞானமேதேன ஜ்ஞானினோ நித்யவைரிணா ।
காமரூபேண கௌந்தேய துஷ்பூரேணானலேன ச ॥ 39 ॥

இந்த்ரியாணி மனோ புத்தி-ரஸ்யாதிஷ்ட்டான-முச்யதே ।
ஏதைர்-விமோஹயத்-யேஷ ஜ்ஞான-மாவ்ருத்ய தேஹினம்
॥ 40 ॥

தஸ்மாத்-த்வமிந்த்ரியாண்-யாதௌ நியம்ய பரதர்ஷப ।
பாப்மானம் ப்ரஜஹி ஹ்யேனம் ஜ்ஞான-விஜ்ஞான-நாச
னம் ॥ 41 ॥

38. எப்படித் தீயானது புகையால் மறைக்கப்படுகிறதோ, எப்படிக் கண்ணாடி அழுக்கால் மறைக்கப்படுகிறதோ, எப்படிக் கருவானது கருப்பையினால் மறைக்கப்படுகிறதோ, அப்படியே காமத்தால் ஞானம் மறைக்கப்பட்டிருக்கிறது.

39. குந்தீபுத்திரா! ஞானியர்க்கு என்றும் பகையாயும் காமம் என்னும் உருவம் உடையதாயும், பூர்த்தி செய்விக்க இயலாததாயும் உள்ள இந்த ஆசைத் தீயால் அறிவானது மறைக்கப்பட்டிருக்கிறது.

40. இந்திரியங்கள், மனம், புத்தி என்னும் இவை இதற்கு இருப்பிடம் என்று சொல்லப்படுகிறது. இது இவற்றால் அறிவை மறைத்து உடலில் உறையும் ஜீவனைப் பலவிதமாய் மயக்குகின்றது.

41. ஆகையால் பரத வம்சத்திற் சிறந்தோனே! நீ முதலில் இந்திரியங்களை வசப்படுத்திக் கொண்டு அறிவையும் அனுபூதியையும் நாசம் செய்வதும் பாவத்தில் சேர்ப்பதும் ஆகிய இதைத் தவறாமல் கொன்று ஒழிப்பாய்.

இந்த்ரியாணி பராண்-யாஹு-ரிந்த்ரியேப்ய: பரம் மன:।
மனஸஸ்து பரா புத்திர் யோ புத்தே: பரதஸ்து ஸ: ॥ 42 ॥

ஏவம் புத்தே: பரம் புத்த்வா ஸம்ஸ்தப்யாத்மான-மாத்மனா।
ஜஹி சத்ரும் மஹாபாஹோ காமரூபம் துராஸதம் ॥ 43 ॥

இதி ஸ்ரீமத் பகவத்கீதாஸூபநிஷத்ஸு ப்ரஹ்மவித்யாயாம்
யோகசாஸ்த்ரே ஸ்ரீக்ருஷ்ணார்ஜுன-ஸம்வாதே
கர்மயோகோ நாம த்ருதீயோऽத்யாய: ॥

---

42. இந்திரியங்கள் மேலானவை என்று கூறுவர்; இந்திரியங்களிலும் மேலானது மனம்; மனதிலும் மேலானது புத்தி; எவன் புத்திக்கும் அப்பால் உள்ளவனோ அவன் ஆத்மா.

43. தோள்வலி படைத்த அர்ஜுனா! இவ்வாறு புத்திக்கும் மேலானதை அறிந்து நிச்சய ரூபமான புத்தியால் சஞ்சல ரூபமான மனத்தையும் இந்திரியங்களையும் அடக்கி நிலை நிறுத்திக் காமத்தை உருவாக உடையதும் பிடிபடாததுமாகிய பகையை நாசம் செய்.

இங்ஙனம் பிரம்ம வித்தையாயும் யோக சாஸ்திரமாயும்
ஸ்ரீ கிருஷ்ணனுக்கும் அர்ஜுனனுக்கும் சம்பாஷணையாயும்
விளங்கும் ஸ்ரீமத் பகவத்கீதை என்னும் உபநிஷத்தில்
கரும யோகம் என்று பெயர் பெற்ற மூன்றாவது
அத்தியாயம் முற்றும்

## நான்காம் அத்தியாயம்

### (ஞான கர்ம ஸந்ந்யாஸ யோகம்)

ஸ்ரீபகவானுவாச —

இமம் விவஸ்வதே யோகம் ப்ரோக்தவா-னஹ-மவ்யயம் ।
விவஸ்வான் மனவே ப்ராஹ மனு-ரிக்ஷ்வாகவே ऽப்ரவீத் ॥ 1 ॥

ஏவம் பரம்பரா-ப்ராப்த-மிமம் ராஜர்ஷயோ விது: ।
ஸ காலேனேஹ மஹதா யோகோ நஷ்ட: பரந்தப ॥ 2 ॥

ஸ ஏவாயம் மயா தே ऽத்ய யோக: ப்ரோக்த: புராதன: ।
பக்தோ ऽஸி மே ஸகா சேதி ரஹஸ்யம் ஹ்யேத-துத்தமம் ॥ 3 ॥

அர்ஜுன உவாச —

அபரம் பவதோ ஜன்ம பரம் ஜன்ம விவஸ்வத: ।
கதமேதத்-விஜானீயாம் த்வமாதௌ ப்ரோக்தவா-னிதி ॥ 4 ॥

ஸ்ரீ பகவான் கூறியது—

1. நான் விவஸ்வானுக்கு இந்த அழிவற்ற யோகத்தை உபதேசித்தேன்; விவஸ்வான் மனுவுக்கு உரைத்தார்; மனு இக்ஷ்வாகுவுக்கு உரைத்தார்.

2. இவ்வாறு பரம்பரையாக வந்த இதை ராஜரிஷிகள் அறிந்திருந்தனர்; சத்துருக்களைத் தவிக்கச் செய்வோனே, இவ்வுலகில் அந்த யோகம் நாளடைவில் மறைந்து போயிற்று.

3. எனக்குப் பக்தனும் நண்பனுமாக நீ இருக்கிறாய் என்று அந்தப் பழமையான யோகமே இன்று என்னால் உனக்குக் கூறப்பட்டது; உண்மையில் இது உத்தமமான மறைபொருள்,

அர்ஜுனன் கூறியது—

4. உன்னுடைய பிறப்பு பின்பு: விவஸ்வானுடைய பிறப்பு முன்பு:—அங்ஙனமிருக்க—நீ ஆதியில் அவனுக்கு உபதேசித்தாய் என்னும் இதை எங்ஙனம் நான் கருத்திற் கொள்வது?

ஸ்ரீபகவானுவாச —

பஹூனி மே வ்யதீதானி ஜன்மானி தவ சார்ஜுன !
தான்யஹம் வேத ஸர்வாணி ந த்வம் வேத்த பரந்தப ॥ 5 ॥

அஜோऽபி ஸன்-னவ்யயாத்மா பூதானா-மீச்வரோऽபி ஸன்
ப்ரக்ருதிம் ஸ்வா-மதிஷ்ட்டாய ஸம்பவாம்-யாத்ம-மாயயா ॥ 6 ॥

யதா யதா ஹி தர்மஸ்ய க்லானிர்-ப்பவதி பாரத !
அப்ப்யுத்தான-மதர்மஸ்ய ததாத்மானம் ஸ்ருஜாம்யஹம் ॥ 7 ॥

பரித்ராணாய ஸாதூனாம் விநாசாய ச துஷ்க்ருதாம் ॥
தர்ம-ஸம்ஸ்த்தாபனார்த்தாய ஸம்பவாமி யுகே யுகே ॥ 8 ॥

ஜன்ம கர்ம ச மே திவ்ய-மேவம் யோ வேத்தி தத்வத: !
த்யக்த்வா தேஹம் புனர்-ஜன்ம நைதி மாமேதி ஸோऽர்ஜுன ॥ 9 ॥

---

5. எதிரிகளைத் தவிக்கச் செய்வோனே! அர்ஜுனா! எனக்கும் உனக்கும் எத்தனையோ ஜன்மங்கள் சென்று விட்டன; நான் அவை எல்லாவற்றையும் அறிவேன்; நீ அறிய மாட்டாய்.

6. பிறப்பற்றவனாகவும், மாறுபாடற்றவனாகவும் உண்டாயினவற்றிற்கெல்லாம் ஈசனாகவும் இருந்தும் என்னுடைய பிரகிருதியை வசப்படுத்திக்கொண்டு என் மாயையினால் நான் நன்கு தோன்றுகிறேன்.

7. பார்த்தா! எவ்வெப்போது தருமத்திற்குக் குறைவும் அதருமத்திற்கு எழுச்சியும் உண்டாகிறதோ அவ்வப்போது நான் என்னைப் படைத்துக் கொள்கிறேன்.

8. ஸாதுக்களைக் காத்தற்கும் துஷ்டர்களை அழித்தற்கும் தருமத்தை நிலை நாட்டுதற்கும் யுகந்தோறும் வந்துதிப்பேன்.

9. அர்ஜுனா! இவ்வண்ணம் என்னுடைய அப்பிராகிருதமான ஜன்மத்தையும் கருமத்தையும் உள்ளபடி எவன் அறிகிறானோ அவன் உடலை விட்டு மறுபடியும் பிறவியை அடைய மாட்டான்; என்னை வந்தடைவான்.

வீத-ராக-பய க்ரோதா மன்மயா மாமுபாச்ரிதா: ।
பஹவோ ஜ்ஞான-தபஸா பூதா மத்பாவ-மாகதா: ॥ 10 ॥

யே யதா மாம் ப்ரபத்யந்தே தாம்ஸ்-ததைவ பஜாம்யஹம் ।
மம வர்த்மானுவர்த்தந்தே மனுஷ்யா: பார்த்த ஸர்வச: ॥ 11 ॥

காங்க்ஷந்த: கர்மணாம் ஸித்திம் யஜந்த இஹ தேவதா: ।
க்ஷிப்ரம் ஹி மானுஷே லோகே ஸித்திர்-ப்பவதி கர்மஜா ॥ 12 ॥

சாதுர்-வர்ண்யம் மயா ஸ்ருஷ்டம் குண-கர்மவிபாகச: ।
தஸ்ய-கர்த்தாரமபி மாம் வித்த்யகர்த்தார-மவ்யயம் ॥ 13 ॥

ந மாம் கர்மாணி லிம்பந்தி ந மே கர்மபலே ஸ்ப்ருஹா ।
இதி மாம் யோऽபிஜானாதி கர்மபிர் ந ஸ பத்த்யதே ॥ 14 ॥

10. ஆசையும், பயமும் கோபமும் இல்லாதவர்களும் என் மயமானவர்களும் என்னைச் சரணமாயடைந்தவர்களும் ஆகிய பலர் ஞானமாகிய தவத்தால் பரிசுத்தர்களாய் என் தன்மையை அடைந்திருக்கிறார்கள்.

11. எவர்கள் எவ்வாறு என்னை நாடுகின்றார்களோ அவர்களை அவ்வாறே நான் அனுக்கிரஹிக்கிறேன். பார்த்தா! மனிதர்கள் எவ்வகையிலும் என்னுடைய வழியையே அனுசரிக்கின்றார்கள்.

12. கருமங்களின் பயன் கைகூடுதலை அவாவுகின்றவர்களாய் இவ்வுலகில் தேவதைகளை வழிபடுகின்றார்கள்; ஏனெனில் மனித உலகில் கருமத்தின் பயன் கைகூடுதல் சீக்கிரத்தில் உண்டாகின்றது.

13. குணங்களுக்குத் தக்கபடி கருமங்களை வகுத்து நான்கு வருண முறைப்பாடு என்னால் சிருஷ்டிக்கப்பட்டது. அதன் கர்த்தாவாக இருப்பினும் என்னை மாறுபாடில்லாத அகர்த்தாவாக அறி.

14. கருமங்கள் என்னைப் பற்றமாட்டா என்றும், எனக்குக் கரும பலனில் ஆசை யில்லை என்றும், எவன் என்னை நன்கறிகின்றானோ அவன் கருமங்களால் கட்டுப்படுவதில்லை.

ஏவம் ஜ்ஞாத்வா க்ருதம் கர்ம பூர்வை-ரபி முமுக்ஷுபிঃ ।
குரு கர்மைவ தஸ்மாத் த்வம் பூர்வைঃ பூர்வதரம் க்ருதம்
॥ 15 ॥

கிம் கர்ம கிமகர்மேதி கவயோऽப்யத்ர மோஹிதாঃ ।
தத்தே கர்ம ப்ரவக்ஷ்யாமி யத் ஜ்ஞாத்வா மோக்ஷ்யஸே
[ऽசுபாத் ॥ 16 ॥

கர்மணோ ஹ்யபி போத்தவ்யம் போத்தவ்யஞ்ச விகர்மணঃ ।
அகர்மணச்ச போத்தவ்யம் கஹனா கர்மணோ கதிঃ ॥ 17 ॥

கர்மண்-யகர்ம யঃ பச்யே-தகர்மணி ச கர்ம யঃ ।
ஸ புத்திமான் மனுஷ்யேஷு ஸ யுக்தঃ
[க்ருத்ஸ்ன-கர்ம-க்ருத் ॥ 18 ॥

**15.** இவ்வாறு உணர்ந்து மோக்ஷ இச்சையையுடைய முன்னோர்களாலும் கருமம் செய்யப்பட்டது. ஆகையால் நீ முன்னோர்களால் முன் செய்யப்பட்ட வண்ணம் கருமத்தையே செய்.

**16.** எது கருமம், எது அகருமம் என்ற இவ்விஷயத்தில் சிறந்த அறிவாளிகளும் மயங்குகின்றனர். எதை உணர்ந்து தீமையினின்று விடுபடுவாயோ அந்தக் கருமத்தை உனக்கு எடுத்துரைக்கிறேன்.

**17.** விதிக்கப்பட்ட கருமத்தைப் பற்றியும் அறிய வேண்டியதுண்டு; விலக்கப்பட்ட கருமத்தைப் பற்றியும் அறிய வேண்டியதுண்டு; கருமமின்மையைப் பற்றியும் அறியவேண்டியதுண்டு; கருமத்தின் போக்கானது உணர்தற்கெளிதன்று.

**18.** கருமஞ் செய்தலில் கருமஞ்செய்யாத நிலையையும் கருமஞ்செய்யாத நிலையில் கருமம் நிகழ்தலையும் எவன் காண்கிறானோ அவன் மனிதர்களுக்குள் புத்தியிற் சிறந்தவன்; அவன் யோகி; செய்யவேண்டுவன அனைத்தும் செய்து முடித்தவன்.

யஸ்ய ஸர்வே ஸமாரம்பா: காம-ஸங்கல்ப-வர்ஜிதா: ।
ஜ்ஞானாக்னி-தக்த-கர்மாணம் தமாஹு: பண்டிதம் புதா: ॥ 19 ॥

த்யக்த்வா கர்ம-பலாஸங்கம் நித்யத்ருப்தோ நிராச்ரய: ।
கர்மண்-யபிப்ரவ்ருத்தோऽபி நைவ கிஞ்சித் கரோதி ஸ: ॥ 20 ॥

நிராசீர்-யதசித்தாத்மா த்யக்த-ஸர்வ-பரிக்ரஹ: ।
சாரீரம் கேவலம் கர்ம குர்வன்-னாப்னோதி கில்பிஷம் ॥ 21 ॥

யத்ருச்சா-லாப-ஸந்துஷ்டோ த்வந்த்வாதீதோ விமத்ஸர: ।
ஸம: ஸித்தாவஸித்தௌ ச க்ருத்வாபி ந நிபத்யதே ॥ 22 ॥

கதஸங்கஸ்ய முக்தஸ்ய ஜ்ஞானாவஸ்த்தித-சேதஸ: ।
யஜ்ஞாயாசரத: கர்ம ஸமக்ரம் ப்ரவிலீயதே ॥ 23 ॥

**19.** எவனுடைய எல்லாக் கருமங்களும், ஆசையும் அதற்குக் காரணமான ஸங்கல்பமும் அற்றனவோ, ஞானத் தீயில் பொசுங்கிய வினைகளையுடைய அவனை அறிவாளிகள் பண்டிதன் என்று கூறுவர்.

**20.** அவன் கரும பலனில் பற்றைவிட்டு எப்போதும் திருப்தியுள்ள மனத்தினனாய், வேறொன்றையும் சாராதவனாய் கருமாவில் ஊன்றியிருப்பினுங்கூட ஒன்றையும் செய்யாத வனாகவே ஆவான்.

**21.** ஆசையற்றவனும், உள்ளத்தையும் உடலையும் அடக் கியவனும், உடமைகளை எல்லாம் உதறித் தள்ளியவனும் ஆகி யவன் உடலுக்கு இன்றியமையாத கருமாவை மட்டும் செய்து தீமையை அடைவதில்லை.

**22.** தானாகக் கிடைத்ததைக் கொண்டு சந்தோஷமடை பவனும், இரட்டைகளைக் கடந்தவனும், பொறாமையில்லாத வனும், வெற்றியிலும் தோல்வியிலும் சமமாக இருப்பவனும், கருமம் செய்யினும் கட்டுப்படுவதில்லை.

**23.** பற்றற்றவனாய், முக்தனாய், ஞானத்தில் நிலைபெற்ற மனத்தினனாய் உள்ளவனுடைய கருமம் யஜ்ஞத்தின் பொருட் டுச் செய்யப்பட்டு முழுதும் கரைந்து போகின்றது.

ப்ரமார்ஹ்ப்பணம் ப்ரஹ்ம-ஹவிர் ப்ரஹ்மாக்னௌ
ப்ரஹ்மணா ஹுதம் ।
ப்ரஹ்மைவ தேன கந்தவ்யம் ப்ரஹ்மகர்ம-ஸமாதினா ॥ 24 ॥

தைவமேவாபரே யஜ்ஞம் யோகின: பர்யுபாஸதே ।
ப்ரஹ்மாக்னாவபரே யஜ்ஞம் யஜ்ஞேனைவோபஜுஹ்வதி॥ 25 ॥

ச்ரோத்ராதீ-னிந்த்ரியாண்-யன்யே ஸம்யமாக்னிஷு
ஜுஹ்வதி ।
சப்தாதீன் விஷயோனன்ய இந்த்ரியாக்னிஷு ஜுஹ்வதி ॥ 26॥

ஸர்வாணீந்த்ரிய கர்மாணி ப்ராண-கர்மாணி சாபரே ।
ஆத்ம-ஸம்யம-யோகாக்னௌ ஜுஹ்வதி ஜ்ஞானதீபிதே ।
॥ 27 ॥

24. அர்ப்பணம் பிரம்மம், அர்ப்பிக்கப்படும் பொருளும் பிரம்மம், அக்கினியாகிற பிரம்மத்தில் பிரம்மத்தாலேயே ஹோமம் செய்யப்படுகிறது; கருமமாகிய பிரம்மத்தில் ஸமாதி எய்தும் அவனால் பிரம்மமே அடையப்படும் பொருள்.

25. வேறு யோகிகள் தேவதைகட்குரியதான யஜ்ஞத்தையே பரிவுடன் செய்கின்றனர்; மற்றும் சிலர் பிரம்மமாகிய அக்கினியில் ஆன்மாவாகிற அவியை, ஆன்மாவைக் கொண்டே ஹோமம் செய்கின்றனர்.

26. இன்னொரு சாரார் அடங்குதலெனும் அக்கினியில் செவி முதலிய பொறிகளை ஹோமம் செய்கின்றனர்; பிறர் சப்தம் முதலிய விஷயங்களைப் பொறிகளாகிற அக்கினியில் ஹோமம் செய்கின்றனர்.

27. சிலர் ஞானத்தால் மூண்டெரியும் ஆன்மாவிடம் ஒடுங்கும் யோக முயற்சியாகிற அக்கினியில் எல்லா இந்திரியத் தொழில்களையும் பிராணனின் தொழில்களையும் ஹோமம் செய்கின்றனர்.

த்ரவ்யயஜ்ஞாஸ்-தபோயஜ்ஞா யோகயஜ்ஞாஸ்-ததாபரே ।
ஸ்வாத்த்யாய-ஜ்ஞானயஜ்ஞாச்ச யதய: ஸம்சிதவ்ரதா: ॥ 28 ॥

அபானே ஜுஹ்வதி ப்ராணம் ப்ராணேऽபானம் ததாபரே ।
ப்ராணாபான-கதீ ருத்த்வா ப்ராணாயாம-பராயணா: ॥ 29 ॥

அபரே நியதாஹாரா: ப்ராணான் ப்ராணேஷு ஜுஹ்வதி ।
ஸர்வேப்-யேதே யஜ்ஞவிதோ யஜ்ஞக்ஷபித-கல்மஷா: ॥ 30 ॥

யஜ்ஞசிஷ்டாம்ருத-புஜோ யாந்தி ப்ரஹ்ம-ஸநாதனம் ।
நாயம் லோகோऽஸ்த்-யயஜ்ஞஸ்ய குதோऽன்ய: குருஸத்தம ॥ 31 ॥

28. அவ்வாறே தானமாகிய யஜ்ஞத்தைச் செய்வோர், யோகமாகிய யஜ்ஞத்தைச் செய்வோர், வேதமோதுதலும் உணர்தலுமாகிய யஜ்ஞத்தைச் செய்வோர், விடாமுயற்சியுடையோர், கடுந்தவம் புரிவோர் இதுபோன்ற ஏனையோர்.

29. அவ்வாறே இன்னும் சிலர் உள்மூச்சுக் காற்றில் வெளிக்காற்றையும் வெளிக் காற்றில் உள்மூச்சுக் காற்றையும் ஹோமம் செய்கின்றனர். அன்றி மூச்சுக் காற்றின் உட்போக்கையும் வெளிப்போக்கையும் தடுத்துப் பிராணனைக் கட்டி நிறுத்துவதை மேலாகக்கொள்வோர் சிலர்.

30. வேறுசிலர் அளவான உணவு வுடையவர்களாய் பிராணவாயுக்களை பிராண வாயுக்களில் ஹோமம் செய்கின்றனர். இவர்கள் எல்லோருமே யஜ்ஞத்தை உணர்ந்தவர்கள யஜ்ஞத்தால் பாவந்தேயப் பெற்றவர்கள்.

31. குரு வம்சத்திற் சிறந்தவனே! யஜ்ஞம் செய்து எஞ்சிய இன்னமுதை உண்ணுவோர் அழிவற்ற பிரம்மத்தை அடைகின்றனர். யஜ்ஞம் இல்லாதவர்க்கு இவ்வுலகே இல்லை; அவ்வுலகு எங்ஙனம்?

ஏவம் பஹுவிதா யஜ்ஞா விததா ப்ரஹ்மணோ முகே।
கர்மஜான் வித்தி தான் ஸர்வான் ஏவம் ஜ்ஞாத்வா।
[விமோக்ஷ்யஸே ॥ 32 ॥

ச்ரேயான் த்ரவ்யமயாத்-யஜ்ஞாத் ஜ்ஞானயஜ்ஞ: பரந்தப।
ஸர்வம் கர்மாகிலம் பார்த்த ஜ்ஞானே பரிஸமாப்யதே ॥ 33 ॥

தத்வித்தி ப்ரணிபாதேன பரிப்ரச்னேன ஸேவயா।
உபதேக்ஷ்யந்தி தே ஜ்ஞானம் ஜ்ஞானினஸ்-தத்வதர்சின:
॥ 34 ॥

யத் ஜ்ஞாத்வா ந புனர்மோஹ-மேவம் யாஸ்யஸி பாண்டவ।
யேன பூதான்-யசேஷேண த்ரக்ஷ்யஸ்-யாத்மன்யதோ மயி
॥ 35 ॥

அபி சேதஸி பாபேப்ய: ஸர்வேப்ய: பாபக்ருத்தம:।
ஸர்வம் ஜ்ஞான-ப்லவேனைவ வ்ருஜினம் ஸந்தரிஷ்யஸி ॥ 36 ॥

32. வேதத்தின் வாயிலாக இவ்வாறு பலவிதமான யஜ்ஞங்கள் விரிந்துள்ளன. அவை எல்லாவற்றையும் கர்மத்திலுதித்தவை என்று உணர்வாய்; இவ்வாறு உணர்ந்து விடுபடுவாய்.

33. எதிரிகளைத் தவிக்கச் செய்வோனே! பொருள் மயமான யஜ்ஞத்தைக் காட்டிலும் ஞான யஜ்ஞமே சிறந்ததாம். பார்த்தா! மிச்சமின்றி எல்லாக் கருமமும் ஞானத்தில் பூர்த்தியடைகின்றது.

34. பணிவாலும் பரிவு மிகுந்த கேள்வியாலும் சேவையாலும் அதை அறிக. மெய்ப்பொருள் கண்ட ஞானிகள் உனக்கு ஞானத்தை உபதேசிப்பார்கள்.

35. பாண்டவா! இந்த ஞானத்தை அறிந்து மறுபடியும் இவ்வாறு மோகத்தை அடையமாட்டாய். இதனால் மிச்சமின்றி எல்லா உயிர்களையும் உன்னிடத்தும் என்னிடத்தும் காண்பாய்.

36 எல்லாப் பாவிகளுள்ளும் நீ மிக்க கொடும் பாவியாயிருப்பினும், எல்லாப் பாவத்தையும் ஞானமெனும் படகு ஒன்றினாலேயே நன்கு கடந்திடுவாய்.

யதைதாம்ஸி ஸமித்தோக்னிர்-பஸ்மஸாத் குருதேऽர்ஜுன ।
ஜ்ஞானாக்னிஃ ஸர்வகர்மாணி பஸ்மஸாத் குருதே ததா ॥ 37 ॥

ந ஹி ஜ்ஞானேன ஸத்ருசம் பவித்ர-மிஹ வித்யதே ।
தத் ஸ்வயம் யோகஸம்ஸித்தஃ காலேனாத்மனி விந்ததி ॥ 38 ॥

ச்ரத்தாவான் லபதே ஜ்ஞானம் தத்பரஃ ஸம்யதேந்த்ரியஃ ।
ஜ்ஞானம் லப்த்வா பராம் சாந்திம் அசிரேணாதிகச்சதி ॥ 39 ॥

அஜ்ஞச்-சாச்ரத்ததானச்ச ஸம்சயாத்மா விநச்யதி ।
நாயம் லோகோऽஸ்தி ந பரோ ந ஸுகம் ஸம்சயாத்மனஃ ॥ 40 ॥

யோக-ஸந்ந்யஸ்த-கர்மாணம் ஜ்ஞான-ஸஞ்ச்சின்ன-
[ஸம்சயம் ।
ஆத்மவந்தம் ந கர்மாணி நிபத்னந்தி தனஞ்ஜய ॥ 41 ॥

37. அர்ஜுனா! எவ்வாறு மண்டியெரிகின்ற தீ விறகைச் சாம்பலாகச் செய்யுமோ அவ்வாறே ஞானத்தீ எல்லா கருமத்தையும் சாம்பலாகச் செய்துவிடும்.

38. இவ்வுலகில் ஞானத்துக்குச் சமமாகப் பரிசுத்தம் செய்யும் பொருள் இல்லவே யில்லை. நாளடைவில் யோகத்தில் சித்தி எய்திப் பக்குவமடைந்தவன் தன்னிடத்தில் தானாகவே அதைப் பெறுகிறான்.

39. அதையே மேலாகக் கருத்திற் கொண்டவனும் இந்திரியங்களை நன்கடக்கியவனும் ஆகிச் சிரத்தை பொருந்தினவன் ஞானத்தை அடைகிறான். ஞானத்தை அடைந்து தாமதமின்றிச் சாந்தியாகிற பரமபதத்தை அடைகிறான்.

40. ஞானமில்லாதவனும் சிரத்தையில்லாதவனும் நம்பிக்கை யற்ற மனமுடையவனும் நாசமடைகிறான். நம்பிக்கை யற்ற மனமுடையவனுக்கு இவ்வுலகு இல்லை, வேறு உலகும் இல்லை, சுகமும் இல்லை.

41. தனஞ்ஜயா! யோகத்தால் கருமத்தை ஒழித்தவனும் ஞானத்தால் ஸம்சயத்தைப் பிளந்தவனும் ஆத்மாவிடம் நிலை பெற்றவனுமாகியவனைக் கருமங்கள் கட்டுப்படுத்தமாட்டா.

தஸ்மா-தஜ்ஞான-ஸம்பூதம் ஹ்ருத்ஸ்த்தம் ஜ்ஞானஸி-
[ஞத்மன: ।
ச்சித்த்வைனம் ஸம்சயம் யோக-மாதிஷ்ட்டோத்திஷ்ட்ட
[பாரத ॥ 42 ॥

இதி ஸ்ரீமத் பகவத்கீதாஸூபநிஷத்ஸு ப்ரஹ்மவித்யாயாம்
யோகசாஸ்த்ரே ஸ்ரீக்ருஷ்ணார்ஜுனஸம்வாதே
ஜ்ஞானகர்மஸந்ந்யாஸ யோகோ நாம
சதுர்த்தோऽத்யாய: ॥

---

42. ஆகையால் அஞ்ஞானத்திலிருந்து பிறந்ததும் உள்ளத்தில் உறைவதும் ஆகிய இந்த ஸம்சயத்தை ஞான மெனும் வாளால் வெட்டி யோகத்தில் நிலை பெறுதி. பாரதா! எழுந்திரு.

இங்ஙனம் பிரம்ம வித்தையாயும் யோக சாஸ்திரமாயும்
ஸ்ரீ கிருஷ்ணனுக்கும் அர்ஜுனனுக்கும் சம்பாஷணையாயும்
விளங்கும் ஸ்ரீமத் பகவத்கீதை என்னும் உபநிஷத்தில்
ஞானகர்மயோகம் என்று பெயர் பெற்ற நான்காவது
அத்தியாயம் முற்றும்

## ஐந்தாம் அத்தியாயம்

### (ஸந்ந்யாஸ யோகம்)

**அர்ஜுன உவாச—**

ஸந்ந்யாஸம் கர்மணாம் க்ருஷ்ண புனர்-யோகஞ்ச சம்ஸஸி ।
யச்ச்ரேய ஏதயோ-ரேகம் தன்மே ப்ரூஹி ஸுநிச்சிதம் ॥ 1 ॥

**ஸ்ரீ பகவானுவாச—**

ஸந்ந்யாஸ: கர்மயோகச்ச நி:ச்ரேயஸ-கரா-வுபௌ ।
தயோஸ்து கர்மஸந்ந்யாஸாத் கர்மயோகோ விசிஷ்யதே ॥ 2 ॥

ஜ்ஞேய: ஸ நித்ய-ஸந்ந்யாஸீ யோ ந த்வேஷ்டி ந காங்க்ஷதி ।
நிர்த்வந்த்வோ ஹி மஹாபாஹோ ஸுகம் பந்தாத் ப்ரமுச்ய
[தே ॥ 3 ॥

ஸாங்க்யயோகௌ ப்ருதக்-பாலா: ப்ரவதந்தி ந பண்டிதா:
ஏக-மப்-யாஸ்த்தித: ஸம்ய-குபயோர் விந்ததே பலம் ॥ 4 ॥

---

**அர்ஜுனன் கூறியது—**

1. கிருஷ்ணா! கருமத்தைக் கைவிடுதலையும் மேலும் கூடுதலையும் புகழ்கின்றாய்; இவ்விரண்டுள் எது சிறந்ததோ அந்த ஒன்றை நன்கு நிச்சயித்து எனக்குக் கூறு.

**ஸ்ரீ பகவான் கூறியது—**

2. விடுதலும் கருமத்தைக் கூடுதலும், இரண்டும் உயர் நலனை யளிப்பனவே; அதற்றுள் கருமத்தைக் கூடுதலே சிறந்தது.

3. எவன் வெறுப்பதில்லையோ விரும்புவதில்லையோ அவன் என்றுந் துறவியே என அறிதற்குரியவன். பெருந் தோள் படைத்தோனே! நிச்சயமாக இரட்டைகளினின்று விடுபட்டவன் கருமக்கட்டினின்று எளிதில் விடுபடுகிறான்.

4. அறிவிற் சிறுவர் ஸாங்கியமும் யோகமும் வெவ்வே றெனக் கூறுவர்: பண்டிதர் கூறார்; ஒன்றிலேனும் நன்றாக நிலை பெற்றோன் இரண்டினுடைய பயனையும் பெறுகிறான்.

யத்ஸாங்க்யைః ப்ராப்யதே ஸ்த்தானம் தத்-யோகைரபி
[கம்யதே ।
ஏகம் ஸாங்க்யஞ்ச யோகஞ்ச யః பச்யதி ஸ பச்யதி ॥ 5 ॥

ஸந்ந்யாஸஸ்து மஹாபாஹோ துःக்கமாப்து-மயோகதः ।
யோகயுக்தோ முனிர்-ப்ரஹ்ம ந சிரேணாதிகச்சதி ॥ 6 ॥

யோகயுக்தோ விசுத்தாத்மா விஜிதாத்மா ஜிதேந்த்ரியः ।
ஸர்வபூதாத்ம-பூதாத்மா குர்வந்நபி ந லிப்யதே ॥ 7 ॥

நைவ கிஞ்சித் கரோமீதி யுக்தோ மன்யேத தத்வவித் ।
பச்யன் ச்ருண்வன் ஸ்ப்ருசன் ஜிக்க்ரன்-னச்னன் கச்சன்
[ஸ்வபன் ச்வஸன் ॥ 8 ॥

ப்ரலபன் விஸ்ருஜன் க்ருஹ்ணன்-னுந்மிஷந்-நிமிஷன்னபி ।
இந்த்ரியாணீந்த்ரியார்த்தேஷு வர்த்தந்த இதி தாரயன் ॥ 9 ॥

5. ஸாங்கியர்களால் எந்த நிலை அடையப்படுகிறதோ அந்நிலையே யோகிகளாலும் அடையப்படுகிறது. ஸாங்கியமும் யோகமும் ஒன்று என எவன் பார்க்கிறானோ அவன் தான் (உண்மையைப்) பார்க்கிறான்.

6. பெருந்தோள் படைத்தோனே! யோகத்தாலன்றி ஸந்நியாஸம் அடைதற்கு அரிது; யோகத்தைக் கூடிய முனிவனே விரைவில் பிரம்மத்தை அடைகிறான்.

7. யோகத்தைக் கூடியவனும் உள்ளத் தூய்மையை எய்தியவனும் உடலை ஜெயித்தவனும் இந்திரியங்களை அடக்கியவனும் எவ்வுயிரிலும் தன்னையே காண்பவனும் ஆகியவன் கருமத்தைச் செய்தபோதிலும் அதனால் தொடரப்படுவதில்லை.

8. கண்டாலும், கேட்டாலும், தொட்டாலும், முகர்ந்தாலும், உண்டாலும், சென்றாலும், தூங்கினாலும், மூச்சுவிட்டாலும், மெய்யறிவுடைய யோகி ஒன்றையும் தான் செய்யவில்லை என்று எண்ண வேண்டும்.

9. பேசினாலும், விட்டாலும், பற்றிக்கொண்டாலும், கண் விழித்தாலும், கண் மூடினாலுங்கூட, இந்திரியங்கள் இந்திரிய விஷயங்களில் செல்லுகின்றன என்று நிச்சயமுடையவனாய்—(ஒன்றையும் தான் செய்யவில்லை என்று எண்ணவேண்டும்.)

ப்ரஹ்மண்-யாதாய கர்மாணி ஸங்கம் த்யக்த்வா கரோதி யஃ
லிப்யதே ந ஸ பாபேன பத்மபத்ர-மிவாம்பஸா ॥ 10 ॥

காயேன மனஸா புத்த்யா கேவலை-ரிந்த்ரியை-ரபி ।
யோகினஃ கர்ம குர்வந்தி ஸங்கம் த்யக்த்வாத்ம-சுத்தயே ॥ 11 ॥

யுக்தஃ கர்மபலந் த்யக்த்வா சாந்தி-மாப்னோதி நைஷ்டிகீம் ।
அயுக்தஃ காமகாரேண பலே ஸக்தோ நிபத்த்யதே ॥ 12 ॥

ஸர்வகர்மாணி மனஸா ஸந்ந்யஸ்யாஸ்தே ஸுகம் வசீ ।
நவத்வாரே புரே தேஹீ நைவ குர்வந் ந காரயன் ॥ 13 ॥

ந கர்த்ருத்வம் ந கர்மாணி லோகஸ்ய ஸ்ருஜதி ப்ரபுஃ ।
ந கர்மபல-ஸம்யோகம் ஸ்வபாவஸ்து ப்ரவர்த்ததே ॥ 14 ॥

**10.** எவன் கருமங்களை பிரம்மத்தினிடத்தில் வைத்துப் பற்றை விட்டுச் செய்கின்றானோ அவன் நீரில் தாமரை இலை போல் பாவத்தால் பற்றப் படுவதில்லை.

**11.** யோகிகள் பற்றைவிட்டு உள்ளத்தைப் பரிசுத்தமாக்கும் பொருட்டுத் தான் என்ற பாவனை இல்லாது உடலாலோ மனத்தாலோ புத்தியாலோ இந்திரியங்களாலோ கருமம் செய்கின்றனர்.

**12.** யோகத்தைக் கூடியவன் கருமத்தின் பயனை விட்டு நிஷ்டையினால் உண்டாகும் மனவமைதியை அடைகிறான்; யோகத்தைக் கூடாதவன் ஆசையின் தூண்டுதலால் பயனில் பற்றுக்கொண்டு கட்டுப்படுகிறான்.

**13.** இந்திரியங்களை வசப்படுத்திய புருஷன் மனத்தால் எல்லாக் கருமங்களையும் துறந்து சுகமாக ஒன்பது வாயிலுடைய புரியில் ஒன்றும் செய்யாமலும் செய்விக்காமலும் இருக்கிறான்.

**14.** கர்த்தாவாயிருத்தலை உலகத்தார்க்கு இறைவன் சிருஷ்டிக்கவில்லை; கருமங்களையும் சிருஷ்டிக்க வில்லை; கருமத்தின் பயன் கூடுதலையும் சிருஷ்டிக்கவில்லை; இயற்கையே

நாதத்தே கஸ்யசித் பாபம் ந சைவ ஸுக்ருதம் விபுः ।
அஜ்ஞானே-னாவ்ருதம் ஜ்ஞானம் தேன முஹ்யந்தி ஜந்தவः
॥ 15 ॥

ஜ்ஞானேன து ததஜ்ஞானம் யேஷாம் நாசித-மாத்மனः ।
தேஷா-மாதித்யவத் ஜ்ஞானம் ப்ரகாசயதி தத்பரம் ॥ 16 ॥

தத்புத்தயஸ்-ததாத்மானஸ்-தந்நிஷ்ட்டாஸ்-தத்பராயணாः ।
கச்சந்த்-யபுனராவ்ருத்திம் ஜ்ஞான-நிர்த்தூத-கல்மஷாः
॥ 17 ॥

வித்யா-விநய-ஸம்பன்னே ப்ராஹ்மணே கவி ஹஸ்தினி ।
சுனிசைவ ச்வபாகே ச பண்டிதாः ஸமதர்சினः ॥ 18 ॥

15. கடவுள் எவருடைய பாவத்தையும் ஏற்றுக் கொள்வதில்லை; புண்ணியத்தையும் அவ்வாறே ஏற்றுக்கொள்வதில்லை; அஞ்ஞானத்தினால் ஞானமானது மறைக்கப்பட்டுள்ளது; அதனால் தான் பிராணிகள் மோகத்தை யடைகின்றனர்.

16. ஆனால் ஆத்மஞானத்தால் எவர்களுடைய அஞ்ஞானம் அழிவுற்றதோ அவர்களுக்கு ஞானமானது சூரியனைப் போல் பரம்பொருளை விளங்கச் செய்கிறது.

17. அதிலேயே புத்தியுடையவராய் அதையே ஆன்மாவாயும் கொண்டவராய் அதிலேயே நிலைபெற்றவராய் அதையே சிறந்த புகலிடமாய்க் கருதுபவராய் ஞானத்தால் பாவத்தை உதறித் தள்ளி அவர்கள் மீண்டுந் திரும்பி வராத நிலையை எய்துகின்றனர்.

18. கல்வியும் அடக்கமும் நிறைந்த பிராம்மணனிடத்தும் பசுவினிடத்தும் யானையினிடத்தும் நாயினிடத்தும் புலையனிடத்தும் ஆத்மஞானிகள் ஸமதர்சனம் உடையவர்கள்.

இஹைவ தைர்-ஜிதঃ ஸர்கோ யேஷாம் ஸாம்யே ஸ்த்திதம்
[மனঃ ।
நிர்தோஷம் ஹி ஸமம் ப்ரஹ்ம தஸ்மாத் ப்ரஹ்மணி தே
[ஸ்த்திதாঃ ॥ 19 ॥

ந ப்ரஹ்ருஷ்யேத் ப்ரியம் ப்ராப்ய நோத்விஜேத் ப்ராப்யசாப்
[ரியம் ।
ஸ்த்திரபுத்தி-ரஸம்மூடோ ப்ரஹ்மவித் ப்ரஹ்மணி ஸ்த்திதঃ
॥ 20 ॥

பாஹ்ய-ஸ்பர்சேஷ்-வஸக்தாத்மா விந்தத்-யாத்மனி
[யத் ஸுகம் ।
ஸ ப்ரஹ்மயோக-யுக்தாத்மா ஸுகமக்ஷய்ய-மச்னுதே ॥ 21 ॥

யே ஹி ஸம்ஸ்பர்சஜா போகா துঃக்க-யோனய ஏவ தே ।
ஆத்யந்தவந்தঃ கௌந்தேய ந தேஷு ரமதே புதঃ ॥ 22 ॥

**19.** எவர்களுடைய மனது ஸமநிலையில் நிறுத்தப் பட்டதோ அவர்களால் இங்கேயே பிறவி ஜயிக்கப்பட்டது; பிரம்மம் ஸமமானதும் தோஷமற்றதும் அன்றோ? அதனால் அவர்கள் பிரம்மத்தினிடம் நிலைபெறுகின்றனர்.

**20.** பிரம்மஞானி பிரம்மத்தினிடம் நிற்பவனாய் நிலை யான புத்தி யுடையவனாய் மோகமில்லாதவனாய்ப் பிரியமானதை அடைந்து மகிழ்வால் கிளர்ச்சியடையமாட்டான். பிரியமில்லா ததை அடைந்து வருத்தத்தால் மனம் தளரமாட்டான்.

**21.** வெளிப்பொருள்களின் உணர்ச்சியில் பற்றில்லாத அந்தக்கரணமுடையவன் ஆத்மாவினிடத்தில் எந்தச் சுகம் உண்டோ அதை அடைகிறான். பிரம்மத்தினிடத்தில் கூடி நிற்கும் அந்தக்கரணமுடைய அவன் அழிவில்லாத சுகத்தை அனுபவிக்கிறான்.

**22.** குந்தியின் மகனே! எந்த இன்பங்கள் வெளிப் பொருள்களின் பரிசத்தால் உண்டானவையோ அவை துன் பத்துக்குப் பிறப்பிடமாயுள்ளவைகளே; அறிவாளி அவை களில் களிப்புறமாட்டான்.

சக்னோதீஹைவ ய: ஸோடும் ப்ராக் சரீர-விமோக்ஷணாத் ।
காமக்ரோதோத்பவம் வேகம் ஸ யுக்த: ஸ ஸுகீ நர: ॥ 23 ॥

யோऽந்த: ஸுகோऽந்தராராமஸ்-ததாந்தர்-ஜ்யோதிரேவ ய:
ஸ யோகீ ப்ரஹ்மநிர்வாணம் ப்ரஹ்மபூதோऽதிகச்சதி ॥ 24 ॥

லபந்தே ப்ரஹ்மநிர்வாணம் ருஷய: க்ஷீணகல்மஷா: ।
ச்சின்னத்வைதா யதாத்மான: ஸர்வபூதஹிதே ரதா: ॥ 25 ॥

காம-க்ரோத-வியுக்தானாம் யதீனாம் யதசேதஸாம் ।
அபிதோ ப்ரஹ்மநிர்வாணம் வர்த்ததே விதிதாத்மனாம் ॥ 26 ॥

ஸ்பர்சான் க்ருத்வா பஹிர்-பாஹ்யான்ச்-
சக்ஷுச்சைவாந்தரே ப்ருவோ: ।
ப்ராணாபானௌ ஸமௌ க்ருத்வா
நாஸாப்ப்யந்தர-சாரிணௌ ॥ 27 ॥

23. எவன் உடல் நீங்குவதற்கு முன்பாக ஆசையாலும் கோபத்தாலும் எழும் மனக் கிளர்ச்சியை இங்கிருக்கும்போதே தாங்குவதற்கு வலிமை பெற்றவனோ அவன் யோகத்தில் நிலைத்தவன். அவனே சுகபுருஷன்.

24. எவன் உள்ளே சுகமுடையவனோ, உள்ளே களியாட்டமுடையவனோ உள்ளே ஒளி உள்ளவனோ அந்த யோகி உயிர் வாழும்போதே பிரம்மமாய், பிரம்மத்தில் முக்தியை அடைகிறான்.

25. எவருடைய தீவினைகள் ஒழிந்தனவோ, எவருடைய சந்தேகங்கள் தவிர்த்தனவோ, எவருடைய இந்திரியங்கள் நன்கு அடங்கியவையோ, எவர்கள் எவ்வுயிர்க்கும் நன்மையையே நாடுபவரோ அந்த ரிஷிகள் பிரம்மத்தினிடம் முக்தியை அடைகிறார்கள்.

26. காமத்தினின்றும் கோபத்தினின்றும் விடுபட்டவர்களும், அடங்கிய சித்தம் உடையவர்களும், ஆன்ம தரிசனம் பெற்றவர்களும், ஆகிய ஸந்நியாஸிகளுக்கு இகத்திலும் பரத்திலும் பிரம்ம ஸாயுஜ்ய முக்தி கிட்டுகின்றது.

27–28. புறம்பேயுள்ளே விஷய நுகர்ச்சிகளைப் புறம்பே வைத்துக் கண்ணைப் புருவங்களின் மத்தியிலே வைத்து நாசி

யதேந்த்ரிய-மனோ-புத்திர்-முனிர்-மோக்ஷபராயண: ।
விகதேச்சா-பய-க்ரோதோ ய: ஸதா முக்த ஏவ ஸ: ॥ 28 ॥

போக்தாரம் யஜ்ஞ-தபஸாம் ஸர்வலோக-மஹேச்வரம் ।
ஸுஹ்ருதம் ஸர்வபூதானாம் ஜ்ஞாத்வா மாம் சாந்திம் ருச்
[சதி ॥ 29 ॥

இதி ஸ்ரீமத் பகவத்கீதாஸூபநிஷத்ஸு ப்ரஹ்மவித்யாயாம்
யோகசாஸ்த்ரே ஸ்ரீக்ருஷ்ணார்ஜுனஸம்வாதே
ஸந்ந்யாஸயோகோ நாம
பஞ்சமோऽத்யாய: ॥

...பினுள் சஞ்சரிக்கும் பிராண அபான வாயுக்களைச் சமமாகச் செய்து இந்திரியம் மனம் புத்தி இவற்றை அடக்கியவனாய், மோக்ஷத்தையே உயர்வாக நாடுபவனாய், ஆசை, பயம், கோபம் இவையற்றவனாய், தியானத்தில் முயல்பவனாய் உள்ளவன் எவனோ அவன் எப்போதும் முக்தனே.

29. யாகத்துக்கும் தவத்துக்கும் போக்தாவாயும். உலகுக்கெல்லாம் ஈசனாயும், எல்லா உயிர்க்கும் நண்பனாயும் உள்ள என்னை அறிந்தவன் மோக்ஷ இன்பத்தை அடைகிறான்.

இங்ஙனம் பிரம்ம வித்தையாயும் யோக சாஸ்திரமாயும்
ஸ்ரீ கிருஷ்ணனுக்கும் அர்ஜுனனுக்கும் ஸம்பாஷணையாயும்
விளங்கும் ஸ்ரீமத் பகவத் கீதை எனும் உபநிஷத்தில்
ஸந்ந்யாஸயோகம் என்று பெயர் பெற்ற
ஐந்தாவது அத்தியாயம் முற்றும்.

## ஆறும் அத்தியாயம்

### (தியான யோகம்)

**ஸ்ரீ பகவானுவாச—**

அனாச்ரித꞉ கர்மபலம் கார்யம் கர்ம கரோதி ய꞉ ।
ஸ ஸந்ந்யாஸீ ச யோகீ ச ந நிரக்னிர்-ந சாக்ரிய꞉ ॥ 1 ॥

யம் ஸந்ந்யாஸமிதி ப்ராஹுர் யோகம் தம் வித்தி பாண்டவ
நஹ்-யஸந்ந்யஸ்த-ஸங்கல்போ யோகீ பவதி கச்சன ॥ 2 ॥

ஆருருக்ஷோர்-முனேர்-யோகம் கர்மகாரண-முச்யதே ।
யோகாரூடஸ்ய தஸ்யைவ சம꞉ காரண-முச்யதே ॥ 3 ॥

யதா ஹி நேந்த்ரியார்த்தேஷு ந கர்மஸ்வனுஷஜ்ஜதே ।
ஸர்வஸங்கல்ப-ஸந்ந்யாஸீ யோகாரூடஸ்-ததோச்யதே ॥ 4 ॥

---

**ஸ்ரீ பகவான் கூறியது—**

1. எவன் கருமத்தின் பயனைச் சாராது செய்யவேண்டிய கருமத்தைச் செய்கின்றானோ அவன் சிறந்த துறவியும் யோகியும் ஆவான். அக்கினியை விட்டவன் அன்று. கருமம் செய்யாதவனும் அன்று.

2. பாண்டவா! எதை ஸந்நியாஸம் என்று கூறினர்களோ அதை யோகம் என்று அறிந்துகொள். ஏனெனில் ஸங்கல்பத்தைத் துறவாதவன் எவனும் யோகி ஆகமாட்டான்.

3. யோகத்தில் உயர ஏற விரும்பும் முனிவனுக்குக் கருமம் ஸாதனமாகச் சொல்லப்படுகிறது; யோகத்தில் உயர் நிலை எய்திய பின் அவனுக்கே ஒழிவு ஸாதனமாகச் சொல்லப்படுகிறது.

4. எப்போது நிச்சயமாக இந்திரியங்கள் நாடும் பொருள்களில் ஒருவன் பற்றுக்கொள்வதில்லையோ, கருமங்களிலும் பற்றுக்கொள்வதில்லையோ அப்போது எல்லா ஸங்கல்பங்களையும் துறந்த அவன் யோகாரூடன் என்று சொல்லப்படுகிறான்.

உத்தரே-தாத்மனாத்மானம் நாத்மான-மவஸாதயேத் ।
ஆத்மைவ ஹ்யாத்மனோ பந்து-ராத்மைவ ரிபு-ராத்மன: ॥ 5 ॥

பந்து-ராத்மாத்மனஸ்-தஸ்ய யேனாத்மைவாத்மனா ஜித: ।
அனாத்மனஸ்து சத்ருத்வே வர்த்தேதாத்மைவ சத்ருவத் ॥ 6 ॥

ஜிதாத்மன: ப்ரசாந்தஸ்ய பரமாத்மா ஸமாஹித: ।
சீதோஷ்ண-ஸுகது:க்கேஷு ததா மானாபமானயோ: ॥ 7 ॥

ஜ்ஞான-விஜ்ஞான-த்ருப்தாத்மா கூடஸ்த்தோ
[விஜிதேந்த்ரிய:
யுக்த இத்-யுச்யதே யோகீ ஸம-லோஷ்டாச்ம-காஞ்சன: ॥ 8 ॥

ஸுஹ்ருன்-மித்ரார்-யுதாஸீந-மத்த்யஸ்த்த-த்வேஷ்ய-
[பந்துஷு ।
ஸாதுஷ்வபி ச பாபேஷு ஸமபுத்திர்-விசிஷ்யதே ॥ 9 ॥

5. தன்னாலே தன்னை உயர்த்திக்கொள்ளவேண்டும்; தன்னைத் தாழ்த்திக்கொள்ளக் கூடாது; நிச்சயமாகத் தானே தனக்கு உறவினன், தானே தனக்குப் பகைவன்.

6. எவன் தன்னைத்தானே ஜயித்தவனோ அவன் தனக்குத் தானே உறவினன்; ஆனால் தன்னை ஜயிக்காதவனுக்குத் தானே பகைவனைப்போல் பகைமை நிலையில் உள்ளவனாவான்.

7. குளிர் வெப்பத்திலும், இன்ப துன்பங்களிலும் மான அவமானங்களிலும் தன்னை ஜயித்த அமைதியான உள்ளம் உடையவனுக்குப் பரமாத்ம ஞானம் நிலைபிறழாது நிற்கும்.

8. அறிவாலும் அனுபவத்தாலும் திருப்தியடைந்தவனாய், அசையாதவனாய், இந்திரியங்களை முற்றும் ஜயித்தவனாய், மண்ணையும் கல்லையும் பொன்னையும் ஸமமாய்க் கருதுபவனாய் உள்ள யோகியானவன் யுக்தன் எனக் கூறப்படுகிறான்.

9. நன்மனத்தார், நட்பாளர், சத்துரு, உதாஸீனர், மத்தியஸ்தர், வெறுப்பவர், உறவினர், நல்லவர்கள், கெட்டவர்கள் அனைவரிடத்தும் சமபுத்தியுடையவன் சிறந்தவனாகிறான்.

யோகீ யுஞ்ஜீத ஸதத-மாத்மானம் ரஹஸி ஸ்த்திதః ।
ஏகாகீ யத-சித்தாத்மா நிராசீ-ரபரிக்ரஹః ॥ 10 ॥

சுசௌ தேசே ப்ரதிஷ்ட்டாப்ய ஸ்த்திர-மாஸன-மாத்மனః ।
நாத்யுச்ச்ரிதம் நாதிநீசம் சைலாஜின-குசோத்தரம் ॥ 11 ॥

தத்ரைகாக்ரம் மனః க்ருத்வா யத-சித்தேந்த்ரிய-க்ரியః ।
உபவிச்யாஸனே யுஞ்ஜ்யாத் யோக-மாத்ம-விசுத்தயே ॥ 12 ॥

ஸமம் காய-சிரோ-க்ரீவம் தாரயன்-னசலம்ஸ்த்திரः ।
ஸம்ப்ரேக்ஷ்ய நாஸிகாக்ரம் ஸ்வம் திசச்-சானவலோகயன்
॥ 13 ॥

ப்ரசாந்தாத்மா விகதபீர்-ப்ரஹ்மசாரிவ்ரதே ஸ்த்திதః ।
மனஸ்-ஸம்யம்ய மச்சித்தோ யுக்த ஆஸீத மத்பரः ॥ 14 ॥

10. எப்போதும் ஏகாந்தத்தில் இருந்துகொண்டு தன்னந் தனியனும் உள்ளத்தையும் உடலையும் அடக்கியவனும் ஆசை யற்றவனும் எதையும் ஏலாதவனும் யோகியானவன் தியா னத்தில் முயலவேண்டும்.

11. சுத்தமான இடத்தில், அசையாததும், அதிக உயர் வில்லாததும், அதிகத் தாழ்வில்லாததும் தருப்பையின்மேல் தோலும் வஸ்திரமும் விரிக்கப்பெற்றதும் ஆகிய ஆசனத்தைத் தனக்கு ஏற்படுத்திக்கொண்டு;

12. அந்த ஆசனத்தில் அமர்ந்து மனத்தை ஒருமுனைப் படுத்தி மனத்தின் செயல்களையும் இந்திரியங்களின் செயல் களையும் அடக்கிச் சித்த சுத்திக்காக யோகத்தை அப்பியசிக்க வேண்டும்.

13. உடல், தலை, கழுத்து இவற்றை ஒரே ஒழுங்காகவும் அசையாமலும் நிறுத்தி ஸ்திரமாய் இருந்து தன்னுடைய மூக்கு நுனியை உற்று நோக்கி, ஒரு திசையும் பாராமல்;

14. அலையாத மனத்தினனும் அச்சம் ஒழிந்தவனும் பிரம்மச்சர்ய விரதத்தில் நிலைபெற்றவனும் மனத்தை அடக்கி என்னையே சிந்தித்து என்னையே பரமாய்க்கொண்டு யுக்தனாக இருக்கக்கடவன்.

யுஞ்ஜன்-னேவம் ஸதாத்மானம் யோகீ நியத-மானஸ: ।
சாந்திம் நிர்வாண-பரமாம் மத்-ஸம்ஸ்த்தா-மதிகச்சதி ॥ 15 ॥

நாத்யச்னதஸ்து யோகோऽஸ்தி ந சைகாந்த-மனச்னத: ।
ந சாதி-ஸ்வப்னசீலஸ்ய ஜாக்ரதோ நைவ சார்ஜுன ॥ 16 ॥

யுக்தாஹார-விஹாரஸ்ய யுக்தசேஷ்டஸ்ய கர்மஸு ।
யுக்த-ஸ்வப்னாவபோதஸ்ய யோகோ பவதி துக்கஹா ॥ 17 ॥

யதா விநியதம் சித்த-மாத்மன்யே-வாவதிஷ்ட்டதே ।
நி:ஸ்ப்ருஹஸ் ஸர்வகாமேப்யோ யுக்த இத்யுச்யதே ததா ॥ 18 ॥

யதா தீபோ நிவாதஸ்த்தோ நேங்கதே ஸோபமா ஸ்ம்ருதா ।
யோகினோ யத-சித்தஸ்ய யுஞ்ஜதோ யோகமாத்மன: ॥ 19 ॥

---

15. இவ்வாறு எப்போதும் தன்னை ஒருமுகப்படுத்தி அடங்கிய மனமுடைய யோகியானவன் முக்தியை முடிவாயுடையதும் என்னிடத்து நிறுவுவதும் ஆன சாந்தியை அடைகின்றான்.

16. அர்ஜுனா! அதிகமாய் உண்பவனுக்கு யோகம் இல்லை; ஒன்றும் உண்ணாதவனுக்கும் இல்லை; மேலும் தூக்கத்தில் அதிக விருப்புடையவனுக்கும் இல்லை; தூங்காமல் விழிப்பவனுக்கும் இல்லை.

17. மிதமான ஊணும் உலாவுதலும் உடையவனுக்கும், கருமங்களில் மிதமான உழைப்புடையவனுக்கும், மிதமான உறக்கமும் விழிப்பும் உடையவனுக்கும் யோகமானது துன்பத்தைத் துடைப்பதாக ஆகிறது.

18. எப்போது நன்கு அடங்கிய சித்தமானது ஆத்மாவிலேயே ஊன்றி நிற்கிறதோ அப்போது எல்லா ஆசைகளினின்றும் பற்று நீங்கிய அவன் யுக்தன் என்று சொல்லப்படுகிறான்.

19. எவ்வாறு காற்றில்லாத இடத்தில் வைக்கப்பட்ட விளக்குச் சுடர் அசைவதில்லையோ, அது ஆத்மாவினிடத்தில் யோகத்தை அப்பியசிக்கும் யோகியின் அடங்கிய சித்தத்துக்கு உவமையாக அறிஞர்களால் சிந்திக்கப்பட்டுள்ளது.

யத்ரோபரமதே சித்தம் நிருத்தம் யோக-ஸேவயா ।
யத்ர சைவாத்ம-ஞாத்மானம் பச்யன்-ஞாத்மனி துஷ்யதி ॥20॥

ஸுக-மாத்யந்திகம் யத்தத் புத்தி-க்ராஹ்ய-மதீந்த்ரியம் ।
வேத்தி யத்ர ந சைவாயம் ஸ்த்திதச் சலதி தத்வதஃ ॥ 21 ॥

யம் லப்த்வா சாபரம் லாபம் மன்யதே நாதிகம் ததஃ ।
யஸ்மின் ஸ்த்திதோ ந துஃக்கேன குருணாபி விசால்யதே ॥22॥

தம் வித்யாத் துஃக்க - ஸம்யோக - வியோகம் யோகஸம்

ஸ நிச்சயேன யோக்தவ்யோ யோகோ ऽநிர்விண்ண-சேதஸா ॥ 23 ॥

ஸங்கல்ப-ப்ரபவான் காமான்ஸ்-த்யக்த்வா ஸர்வா-னசேஷதஃ ।
மனஸை-வேந்த்ரிய-க்ராமம் விநியம்ய ஸமந்ததஃ ॥ 24 ॥

20. எந்நிலையில் யோகாப்பியாசத்தால் நன்கு அடக்கப் பெற்ற சித்தமானது ஒழிவடையுமோ; எந்நிலையில் ஆத்மாவால் ஆத்மாவைக் கண்டு ஆத்மாவினிடத்திலேயே ஒருவன் ஸந்தோஷம் எய்துவனே;

21. எல்லையில்லாததும் புத்தியினால் மட்டும் அறியக் கூடியதும் இந்திரியங்களுக் கெட்டாததும் ஆகிய இன்பம் எதுவோ அதை எந்நிலையில் இவன் அறிகிறானே; எதில் நிலை பெற்று ஒருபோதும் நழுவுவதில்லையோ;

22. அன்றியும் எதை அடைந்தபின் வேறு லாபத்தை அதைக் காட்டிலும் பெரிதாக மதிக்கமாட்டானே; எதில் நிலைத்தபின் மிகப் பெரிதான துக்கத்தாலுங்கூடச் சலிக்க மாட்டானே;

23. அங்ஙனம் துக்கத்தின் கூட்டுறவு நீங்குதலையே யோகம் என்று குறிப்பிட்டதாக அறிவாயாக! தளராத நெஞ்சுடனும் விடா முயற்சியுடனும் அந்த யோகமானது அப்பிய சித்தற்குறியது.

24. ஸங்கல்பத்தினின்று பிறக்கும் காமங்கள் எல்லாவற்றையும் மிச்சமின்றி ஒழித்து மனத்தாலேயே எப்புறத்தும் இந்திரியக் கூட்டத்தை ஓடவொட்டாமல் தடுத்து;

சனை: சனை-ருபரமேத்-புத்த்யா த்ருதி-க்ருஹீதயா ।
ஆத்ம-ஸம்ஸ்த்தம் மன: க்ருத்வா ந கிஞ்சிதபி சிந்தயேத் ॥25॥

யதோ யதோ நிச்சரதி மனஸ்-சஞ்சல-மஸ்த்திரம் ।
ததஸ்-ததோ நியம்யைத-தாத்மன்யேவ வசம் நயேத் ॥ 26 ॥

ப்ரசாந்த-மனஸம் ஹ்யேனம் யோகினம் ஸுகமுத்தமம் ।
உபைதி சாந்தரஜஸம் ப்ரஹ்மபூத-மகல்மஷம் ॥ 27 ॥

யுஞ்ஜன்-னேவம் ஸதாத்மானம் யோகீ விகதகல்மஷ: ।
ஸுகேன ப்ரஹ்ம-ஸம்ஸ்பர்ச-மத்யந்தம் ஸுகமச்னுதே ॥28॥

ஸர்வபூதஸ்த்த-மாத்மானம் ஸர்வபூதானி சாத்மனி ।
ஈக்ஷதே யோகயுக்தாத்மா ஸர்வத்ர ஸமதர்சன: ॥ 29 ॥

**25.** தைரியத்துடன் கூடிய புத்தியினுல் மெல்ல மெல்லச் சாந்தியைக் கூட வேண்டும். மனத்தை ஆத்மாவில் நிலை பெற்றதாய்ச் செய்து பின் யாதொன்றையும் நினைக்கக்கூடாது.

**26.** சஞ்சலமானதும் ஒரு நிலையற்றதுமான மனம் எந்தெந்தக் காரணத்தைப் பற்றி வெளிப்போந்து திரியுமோ அந்தந்தக் காரணத்தினின்று இதை மீட்டு அடக்கி, ஆத்மாவினிடத்திலேயே வசமாக வைக்க வேண்டும்.

**27.** சாந்தியில் நிலைத்த மனத்தினனும் ரஜோகுணம் ஒழிந்தவனும் பாவமற்றவனும் பிரம்மமாகவே ஆகிவிட்டவனுமாகிய அந்த யோகியை நிச்சயமாக உத்தமமான ஆனந்தம் வந்தடைகிறது.

**28.** இவ்வாறு எப்போதும் தன்னை ஒருமுகப்படுத்திப் பாவந்தேய்ந்த யோகியானவன் எளிதில் பிரம்மத்துடன் ஒன்றியதால் உண்டாகும் எல்லையில்லாத ஆனந்தத்தை அனுபவிக்கிறுன்.

**29.** யோகத்தில் ஊன்றிய உள்ளமுடையவன் எங்கும் சம நோக்குடையவனுய் ஆத்மாவை எல்லாப் பொருளிலும் உறைவதாகவும் எல்லாப் பொருள்களும் ஆத்மாவினிடத்து உறைவதாகவும் காண்கின்றுன்.

யோ மாம் பச்யதி ஸர்வத்ர ஸர்வஞ்ச மயி பச்யதி ।
தஸ்யாஹம் ந ப்ரணச்யாமி ஸ ச மே நப்ரணச்யதி ‖ 30 ‖

ஸர்வபூத-ஸ்த்திதம் யோ மாம் பஜத்-யேகத்வ-மாஸ்த்திதஃ ।
ஸர்வதா வர்த்தமானோऽபி ஸ யோகீ மயி வர்த்ததே ‖ 31 ‖

ஆத்மௌபம்யேன ஸர்வத்ர ஸமம் பச்யதி யோऽர்ஜுன ।
ஸுகம் வா யதி வா துஃக்கம் ஸ யோகீ பரமோ மதஃ ‖ 32 ‖

**அர்ஜுன உவாச—**

யோऽயம் யோகஸ்-த்வயா ப்ரோக்தஃஸாம்யேன மதுஸூதன ।
ஏதஸ்யாஹம் ந பச்யாமி சஞ்சலத்வாத் ஸத்திதிம் ஸ்த்திராம் ‖ 33 ‖

சஞ்சலம் ஹி மனஃ க்ருஷ்ண ப்ரமாதி பலவத்-த்ருடம் ।
தஸ்யாஹம் நிக்ரஹம் மன்யே வாயோரிவ ஸுதுஷ்கரம் ‖ 34 ‖

**30.** எவன் என்னை எங்கும் பார்க்கிறானோ, என்னிடத்தில் எல்லாவற்றையும் பார்க்கிறானோ, அவனுக்கு நான் காணாமற் போவதில்லை. அவனும் எனக்குக் காணாமற் போவதில்லை.

**31.** எவன் எல்லா உயிர்களிலும் உறையும் என்னை ஒற்றுமையில் நிலைபெற்றுத் தொழுகின்றானோ, அந்த யோகி எந்நிலையில் இருந்தாலும் எத்தொழில் புரிந்தாலும் என்னிடத்திலேயே இருக்கின்றான்.

**32.** அர்ஜுனா! எவன் எங்கும், சுகமாயினும் துக்கமாயினும், தன்னை உபமானமாகக் கொண்டு சமமாகப் பார்க்கிறானோ, அந்த யோகிதான் சிறந்தவன் என்பது துணிபு.

**அர்ஜுனன் கூறியது—**

**33.** மதுசூதனா! உன்னால் சம நோக்கத்துடன் கூடிய எந்த யோகம் கூறப்பட்டதோ இதன் ஸ்திரமான நிலையை, மனது சஞ்சலமுடையதாதலால், நான் உணர முடியவில்லை.

**34.** கிருஷ்ணா! மனம் சஞ்சலமுடையதும் கலக்கத்தைச் செய்வதும், வலியுடையதும் அடக்க முடியாததும் அன்றோ? நான் அதன் அடக்கத்தைக் காற்றை அடக்குதல் போல மிகவும் கடினம் என்று கருதுகிறேன்.

ஸ்ரீ பகவானுவாச—

அஸம்சயம் மஹாபாஹோ மநோ துர்நிக்ரஹம் சலம் ।
அப்யாஸேன து கௌந்தேய வைராக்யேண ச க்ருஹ்யதே
॥ 35 ॥

அஸம்யதாத்மனா யோகோ துஷ்ப்ராப இதி மே மதி: ।
வச்யாத்மனா து யததா சக்யோ ऽவாப்து-முபாயத: ॥ 36 ॥

அர்ஜுன உவாச—

அயதி: ச்ரத்தயோபேதோ யோகாச்-சலித-மானஸ: ।
அப்ராப்ய யோக-ஸம்ஸித்திம் காம் கதிம் க்ருஷ்ண கச்சதி
॥ 37 ॥

கச்சின்னோபய-விப்ரஷ்டச் சின்னாப்ப்ர-மிவ நச்யதி ।
அப்ரதிஷ்டோ மஹாபாஹோ விமூடோ ப்ரஹ்மண: பதி ॥ 38 ॥

ஸ்ரீ பகவான் கூறியது—

35. தோள்வலி படைத்த அர்ஜுனா! மனம் அடக்குதற்கரிதுதான், நிலையற்றதுதான், இதில் சந்தேகமில்லை; ஆனால் குந்தியின் மகனே! பழக்கத்தாலும் வைராக்கியத்தாலும் அடக்க முடியும்.

36. உள்ளம் அடங்காதவனுக்கு யோகம் அடைதற்கரிது என்பது என்னுடைய துணிபு; ஆனால் உள்ளம் அடங்கியவனுக்கு முயற்சியாலும் தக்க உபாயத்தாலும் அடைவதற்கு முடியும்.

அர்ஜுனன் கூறியது—

37. கிருஷ்ணா! சிரத்தையுடன் கூடியவனாயினும் முயற்சிக்குறைவால் யோகத்தினின்று நழுவிய மனத்தையுடையவன் யோகத்தில் சித்தியை அடையாதவனாய் எக்கதியை அடைகிறான்?

38. தோள்வலியுடைய கிருஷ்ணா! பிரம்மத்தைச் சாரும் வழியில் மயங்கியவன் நிலைபெறாமல் இரண்டு மார்க்கத்தையும் இழந்து சிதறுண்ட மேகம் போல் அழிந்து விடானோ?

ஏதன்மே ஸம்சயம் க்ருஷ்ண ச்சேத்து-மர்ஹஸ்-யசேஷதஃ ।
த்வதன்யஃ ஸம்சயஸ்யாஸ்ய ச்சேத்தா ந ஹ்யுபபத்யதே ॥39॥

ஸ்ரீ பகவானுவாச—

பார்த்த நைவேஹ நாமுத்ர விநாசஸ்-தஸ்ய வித்யதே ।
ந ஹி கல்யாணக்ருத் கச்சித் துர்க்கதிம் தாத கச்சதி ॥ 40 ॥

ப்ராப்ய புண்யக்ருதாம் லோகா-னுஷித்வா சாச்வதீஃ ஸமாஃ ।
சுசீனும் ஸ்ரீமதாம் கேஹே யோகப்ரஷ்டோऽபிஜாயதே ॥41॥

அதவா யோகினு-மேவ குலே பவதி தீமதாம் ।
ஏதத்தி துர்லபதரம் லோகே ஜன்ம யதீத்ருசம் ॥ 42 ॥

39. கிருஷ்ணு! என்னுடைய இந்த சந்தேகத்தை முற்றும் ஒழித்தற்கு நீயே உரியவன்; உன்னை விட்டால் இந்தச் சந்தேகத்தை ஒழிக்கக்கூடியவர் கிடைத்தற்கரிது.

ஸ்ரீ பகவான் கூறியது—

40. பார்த்தா ! அவனுக்கு அழிவு இம்மையிலும் இல்லை, மறுமையிலும் இல்லை. மகனே ! நிச்சயமாக நல்லதைச் செய்பவன் ஒருபோதும் தீய நிலையை அடையவே மாட்டான்.

41. யோகத்திலிருந்து நழுவியவன் புண்ணியம் செய்தவர்களுக்குரிய உலகங்களை அடைந்து நெடிய பல ஆண்டுகள் வசித்து பரிசுத்தர்களும் செல்வந்தர்களும் ஆகியவர்களின் வீட்டில் மறுபடி பிறக்கிருன்.

42. அல்லது புத்திமான்களான யோகிகளின் குலத்திலேயே பிறக்கிருன்; இது போன்ற பிறவி எதுவோ அது நிச்சயமாக உலகில் அடைதற்கு அரிது.

தத்ர தம் புத்தி-ஸம்யோகம் லபதே பௌர்வ-தேஹிகம் ।
யததே ச ததோ பூயஃ ஸம்ஸித்தௌ குருநந்தன ॥ 43 ॥

பூர்வாப்யாஸேன தேனைவ ஹ்ரியதே ஹ்யவசோऽபி ஸஃ ।
ஜிஜ்ஞாஸுரபி யோகஸ்ய சப்தப்ரஹ்மாதிவர்த்ததே ॥ 44 ॥

ப்ரயத்னாத்-யதமானஸ்து யோகீ ஸம்சுத்த-கில்பிஷஃ ।
அனேக-ஜன்ம-ஸம்ஸித்தஸ்-ததோ யாதி பராங்கதிம் ॥ 45 ॥

தபஸ்விப்யோऽதிகோ யோகீ ஜ்ஞானிப்யோऽபி மதோऽ[திகஃ
கர்மிப்யச்-சாதிகோ யோகீ தஸ்மாத் யோகீ பவார்ஜுன॥46॥

43. அங்கு முன் உடலில் உண்டாகிய புத்தியின் கூட்டுறவை அடைகிறான்; குருநந்தன! மீண்டும் அதைவிட மேலான சித்தி எய்துவதற்காக முயல்கின்றான்.

44. முன்பழக்கத்தாலேயே, தான் உணராவிடினுங்கூடக் கவரப்படுகிறான்; யோகத்தின் தத்துவத்தை ஆராய விரும்பியவன்கூட சப்தப் பிரம்மமாகிய வேதம் கூறும் கரும பலனைக் கடந்து செல்கிறான்.

45. ஆனால் விடா முயற்சியுடன் அப்பியசிக்கும் யோகியானவன் பாவம் தேய்ந்து பரிசுத்தனாய்ப் பல பிறப்பில் படிப்படியாகச சித்தி பெற்றுப் பின் எல்லாவற்றினும் உயர்ந்த கதியை அடைகிறான்.

46. யோகியானவன் தவசிகளைவிட உயந்தவன்; கற்றோரைவிடவும் உயர்ந்தவன்; கருமம் செய்வோரை விடவும் யோகியானவன் உயர்ந்தவன் என்பது துணிபு. ஆகையால் அர்ஜுனா! யோகி ஆவாய்.

யோகினாமபி ஸர்வேஷாம் மத்கதேனாந்தராத்மனா ।
ச்ரத்தாவான் பஜதே யோ மாம் ஸ மே யுக்த-தமோ மதஃ ॥47॥

இதி ஸ்ரீமத் பகவத்கீதாஸூபநிஷத்ஸு-ப்ரஹ்மவித்யாயா
யோகசாஸ்த்ரே ஸ்ரீக்ருஷ்ணார்ஜுனஸம்வாதே
த்யானயோகோ நாம
ஷஷ்டோऽத்தியாயஃ ॥

47. எவன் சிரத்தை உடையவனாக என்னிடத்தில் ஊன்றிய உள்ளத்தால் என்னைத் தொழுகின்றானோ அவன் எல்லா யோகிகளுக்குள்ளும் சிறந்த யுக்தன் என்பது என்னுடைய முடிவான அபிப்பிராயம்.

இங்ஙனம் பிரம்ம வித்தையாயும் யோக சாஸ்திரமாயும்
ஸ்ரீகிருஷ்ணனுக்கும் அர்ஜுனனுக்கும் ஸம்பாஷணையாயும்
விளங்கும் ஸ்ரீமத் பகவத்கீதை என்னும் உபநிஷத்தில்
தியானயோகம் என்று பெயர் பெற்ற
ஆறுவது அத்தியாயம் முற்றும்

# ஏழாம் அத்தியாயம்

## (ஜ்ஞான விஜ்ஞான யோகம்)

**ஸ்ரீ பகவானுவாச—**

மய்யாஸக்தமனாः பார்த்த யோகம் யுஞ்ஜன் மதாச்ரயः ।
அஸம்சயம் ஸமக்ரம் மாம் யதா ஜ்ஞாஸ்யஸி தச் ச்ருணு ॥ 1 ॥

ஜ்ஞானம் தேऽஹம் ஸவிஜ்ஞானம் இதம் வக்ஷ்யாம்யசேஷதः ।
யஜ்ஜ்ஞாத்வா நேஹ பூயோऽந்யஜ்-ஜ்ஞாதவ்ய-மவசிஷ்யதே ॥ 2 ॥

மனுஷ்யாணாம் ஸஹஸ்ரேஷு கச்சித்-யததி ஸித்தயே ।
யததாமபி ஸித்தானாம் கச்சின்-மாம் வேத்தி தத்வதः ॥ 3 ॥

பூமி-ராபோऽநலோ-வாயுः க்கம் மனோ புத்தி-ரேவ ச ।
அஹங்கார இதீயம் மே பின்னா ப்ரக்ருதி-ரஷ்டதா । 4 ॥

**ஸ்ரீ பகவான் கூறியது—**

1. பார்த்தா! என்னிடத்தில் பற்றிய மனத்தினனாய் என்னையே சார்ந்து யோகத்தை அப்பியசித்துச் சந்தேகமின்றி முற்றும் என்னை எப்படி அறிவாயோ அதைக் கேள்.

2. எதை உணர்ந்த பின்னர் இங்கு மறுபடியும் வேறொன்று உணரவேண்டியது மிகுதியிராதோ, அந்த அனுபவத்தோடு கூடிய ஞானத்தை முழுதும் நான் உனக்கு உரைக்கிறேன்.

3. மனிதர்களில் ஆயிரவர்களுக்குள் ஒருவன் சித்திபெற முயற்சி செய்கின்றான். முயற்சி செய்யும் சித்தர்களுள் யாரோ ஒருவன்தான் என்னை உண்மையில் உணர்கின்றான்.

4. மண், நீர், தீ, காற்று, ஆகாயம், மனம், புத்தி, அஹங்காரம் என்று எட்டு விதமாகப் பிரிந்தது என்னுடைய பிரகிருதி.

அபரேய-மிதஸ்த்-வன்யாம் ப்ரக்ருதிம் வித்தி மே பராம் ।
ஜீவபூதாம் மஹாபாஹோ யயேதம் தார்யதே ஜகத் ‖ 5 ‖

ஏதத்-யோனீனி பூதானி ஸர்வாணீத்-யுபதாரய ।
அஹம் க்ருத்ஸ்னஸ்ய ஜகதः ப்ரபவः ப்ரலயஸ்-ததா 6

மத்தः பரதரம் நான்யத் கிஞ்சிதஸ்தி தனஞ்ஜய ।
மயி ஸர்வ-மிதம் ப்ரோதம் ஸூத்ரே மணிகணா இவ ‖ 7 ‖

ரஸோऽஹ-மப்ஸு கௌந்தேய ப்ரபாஸ்மி சசிஸூர்யயோः ।
ப்ரணவः ஸர்வவேதேஷு சப்தः க்கே பௌருஷம் ந்ருஷு ‖ 8 ‖

புண்யோ கந்தः ப்ருதிவ்யாஞ்ச தேஜச்சாஸ்மி விபாவஸௌ ।
ஜீவனம் ஸர்வபூதேஷு தபச்சாஸ்மி தபஸ்விஷு ‖ 9 ‖

5. மஹாபாஹோ! ஆனல் இது கீழ்ப்பட்டது ; இதனில் வேருயுள்ளதும் ஜீவ வடிவாயுள்ளதும், எதனுல் இந்த உலகம் தாங்கப்படுகின்றதோ அதுவுமாக எனது உயர்ந்த பிரகிருதியை அறிவாய்.

6. எல்லாப் பொருள்களும் இவ்விரண்டையும் பிறப்பிடமாய் உடையன என்று அறிந்துகொள் ; நான் எல்லா உலகிற்கும் உற்பத்தியும் அவ்வாறே அழிவும் ஆகின்றேன்.

7. தனஞ்ஜயா ! என்னைக்காட்டிலும் உயர்ந்தது வேறு ஒரு சிறிதும் இல்லை ; சரட்டில் மணி நிறைகள் போல ஈதெல்லாம் என்னிடத்தில் கோக்கப்பட்டுள்ளது.

8. குந்திபுத்திரனே ! நான் நீரில் சுவையும், சந்திர சூரியர்களிடத்தில் ஒளியும், வேதங்களனைத்துள்ளும் ஓங்காரமும், ஆகாயத்தில் சப்தமும், மனிதர்களுள் ஆண்மையும் ஆகின்றேன்.

9. மண்ணில் நல்ல மணமும், தீயில் ஒளியும் ஆகின்றேன். எல்லாப் பிராணிகளிடத்தும் உயிரும், தவஞ்செய்வோருள் தவமும் ஆகின்றேன்.

பீஜம் மாம் ஸர்வபூதாநாம் வித்தி பார்த்த ஸநாதனம் ।
புத்திர்ப்புத்திமதா-மஸ்மி தேஜஸ்-தேஜஸ்விநா-மஹம் ॥ 10 ॥

பலம் பலவதா-மஸ்மி காமராக-விவர்ஜிதம் ।
தர்மாவிருத்தோ பூதேஷு காமோऽஸ்மி பரதர்ஷப ॥ 11 ॥

யே சைவ ஸாத்விகா-பாவா ராஜஸாஸ்-தாமஸாச்ச யே ।
மத்த ஏவேதி தான் வித்தி ந த்வஹம் தேஷு தே மயி ॥ 12 ॥

த்ரிபிர்-குணமயைர்-ப்பாவை-ரேபிঃ ஸர்வமிதம் ஜகத் ।
மோஹிதம் நாபிஜாநாதி மாமேப்ய: பர-மவ்யயம் ॥ 13 ॥

தைவீ ஹ்யேஷா குணமயீ மம மாயா துரத்யயா ।
மாமேவ யே ப்ரபத்யந்தே மாயா-மேதாம் தரந்தி தே ॥ 14 ॥

10. பார்த்தா! என்னை எல்லாப் பொருள்களுக்கும் அநாதியான வித்து என்று அறி; புத்திமான்களின் புத்தியும் வீரமுடையவர்களின் வீரமும் நானே ஆகின்றேன்.

11. பரதவம்சத்திற் சிறந்தோனே! ஆசையும் பற்றுமில்லாத வலிமையாக பலவான்களிடம் இருக்கின்றேன்; பிராணிகளிடம் தருமந் தவறாத ஆசையாகவும் இருக்கிறேன்.

12. மேலும் எவை சத்துவமான நிலையுள்ளவைகளோ அவைகளும் எவை ரஜோகுண தமோகுண சம்பந்தமானவைகளோ அவைகளும் என்னிடமிருந்தே உண்டாகின்றன என்று அறிவாய். ஆனால் நான் அவைகளிடம் இல்லை; அவைகள் என்னிடம் இருக்கின்றன.

13. இந்த மூன்று குணமயமான நிலைகளால் இந்த உலகெல்லாம் மோகத்தை அடைந்திருக்கிறது; இவைகட்கு அப்பாலுள்ள, மாறுபாடில்லாத என்னை அறிவதில்லை.

14. இந்த மூன்று குண வடிவான என்னுடைய மாயை தெய்வ சக்தி வாய்ந்தது, தாண்டுதற்கரியது; எவர்கள் என்னையே சரணடைகின்றார்களோ அவர்கள் இந்த மாயையைத் தாண்டுகிறார்கள்.

11. 'பலம் பலவதாஞ்சாஹம்' என்றும் பாடம்.

ந மாம் துஷ்க்ருதினோ மூடா: ப்ரபத்யந்தே நராதமா: ।
மாயயாபஹ்ருத-ஜ்ஞானா ஆஸுரம் பாவமாச்ரிதா: ॥ 15 ॥

சதுர்விதா பஜந்தே மாம் ஜனா: ஸுக்ருதினோऽர்ஜுன ।
ஆர்த்தோ ஜிஜ்ஞாஸு-ரர்த்தார்த்தீ ஜ்ஞானீ ச பரதர்ஷப
॥ 16 ॥

தேஷாம் ஜ்ஞானீ நித்யயுக்த ஏகபக்திர்-விசிஷ்யதே ।
ப்ரியோ ஹி ஜ்ஞானினோऽத்யர்த்த-மஹம் ஸ ச மம ப்ரிய: ॥ 17 ॥

உதாரா: ஸர்வ ஏவைதே ஜ்ஞானீத்-வாத்மைவ மே மதம் ।
ஆஸ்த்தித: ஸ ஹி யுக்தாத்மா மாமேவானுத்தமாம் கதிம் ॥ 18 ॥

பஹூனாம் ஜன்மனா-மந்தே ஜ்ஞானவான் மாம் ப்ரபத்யதே ।
வாஸுதேவ: ஸர்வமிதி ஸ மஹாத்மா ஸுதுர்லப: ॥ 19 ॥

---

**15.** பாவச் செயலுடையவராகிய அறிவீனரும், பயனற்ற மனிதப் பதர்களும் மாயையினால் ஞானத்தை யிழந்தவர்களும் அசுர சுபாவத்தில் நிலைபெற்றவர்களும் என்னை பூஜிப்பதில்லை.

**16.** பரதர்ஷப ! அர்ஜுனா ! துன்புற்றோன், ஞானத்தைத் தேடுவோன், செல்வத்தை நாடுவோன், ஞானி இந்நால்வகையான புண்ணியவான்களும் என்னை பூஜிக்கின்றார்கள்.

**17.** அவர்களுள் என்றும் வழுவாத யோகமுடையவனும் ஒன்றுபட்ட பக்தியுடையவனும் ஆகிய ஞானி சிறந்தவனாகிறான். நிச்சயமாக நான் ஞானிகளுக்கு மிக உயர்ந்த பிரியன் ; ஞானியும் எனக்குப் பிரியன்.

**18.** இவர்கள் எல்லோரும் சிறந்தவரே ; ஆனால் ஞானி நானே என்பது என் மதம் ; நிச்சயமாக யோகத்தில் நிலைத்த அவன் அதற்கு மேல் உயர்ந்ததொன்றில்லாத கதியாகிய என்னையே நாடி நிற்கின்றான்.

**19.** பல ஜன்மங்களின் முடிவில் ஞானி 'எல்லாம் வாசுதேவனே' என்று என்னை வந்தடைகின்றான். அவன் மஹாத்மா. அத்தகையவன் காணுதற்கரியவன்.

காமைஸ்-தைஸ்தைர்-ஹ்ருதஜ்ஞாநா: ப்ரபத்யந்தேऽன்ய
தேவதா: ।
தம் தம் நியம-மாஸ்த்தாய ப்ரக்ருத்யா நியதா: ஸ்வயா ॥ 20 ॥

யோ யோ யாம் தனும் பக்த: ச்ரத்தயார்ச்சிது-மிச்சதி ।
தஸ்ய தஸ்யாசலாம் ச்ரத்தாம் தாமேவ விததாம்யஹம் ॥ 21 ॥

ஸ தயா ச்ரத்தயா யுக்தஸ்-தஸ்யாராதன-மீஹதே ।
லபதே ச தத: காமான் மயைவ விஹிதான் ஹி தான் ॥ 22 ॥

அந்தவத்து பலம் தேஷாம் தத்-பவத்-யல்ப-மேதஸாம் ।
தேவான் தேவயஜோ யாந்தி மத்பக்தா யாந்தி மாமபி ॥ 23 ॥

அவ்யக்தம் வ்யக்தி-மாபன்னம் மன்யந்தே மா-மபுத்தய: ।
பரம் பாவ-மஜானந்தோ மமாவ்யய-மனுத்தமம் ॥ 24 ॥

20. அந்தந்த ஆசைகளால் அறிவிழந்தவர்கள் அந்தந்த நியமத்தைக் கைக்கொண்டு தம்முடைய ஸ்வபாவத்தால் கட்டுண்டு மனங்கவரப்பட்டவர்களாய் வேறு தெய்வங்களை வழிபடுகின்றனர்.

21. எவனெவன் எந்தெந்த மூர்த்தியைச் சிரத்தையுடன் பக்தனாகப் பூஜிப்பதற்கு விரும்புகிறானோ, அவனுக்கு அந்தந்த சிரத்தையை நான் அசையாததாகச் செய்கின்றேன்.

22. அவன் அவ்வாறான சிரத்தையுடன் கூடியவனாய் அம் மூர்த்தியின் வழிபாட்டை விரும்பிச் செய்கிறான்; மேலும் அதனின்று என்னாலேயே அளிக்கப்பட்ட அந்த ஆசைகளையும் நிச்சயமாக அடைகிறான்.

23. ஆனால் அற்பமதியுடைய அவர்கட்கு அந்தப் பயன் அழிவுடையதாகவே இருக்கும்; தேவர்களைப் பூஜிப்பவர்கள் தேவர்களை அடைகிறார்கள்; என் பக்தர்களோ என்னை அடைகிறார்கள்.

24. மதியீனர் மாறுபாடில்லாததும் மேம்பட்ட வேறொன்றில்லாததும் ஆன என்னுடைய பரமாத்மஸ்வரூபத்தை அறிய மாட்டாதவர்களாய்த் தோன்றுதலில்லாத என்னைத் தோற்றத்தை அடைந்தவனாகக் கருதுகின்றனர்.

நாஹம் ப்ரகாசஃ ஸர்வஸ்ய யோகமாயா-ஸமாவ்ருதஃ ।
மூடோऽயம் நாபிஜாநாதி லோகோ மா-மஜ-மவ்யயம் ॥ 25 ॥

வேதாஹம் ஸமதீதானி வர்த்தமானானி சார்ஜுன ।
பவிஷ்யாணி ச பூதானி மாந்து வேத ந கச்சன ॥ 26 ॥

இச்சா-த்வேஷ-ஸமுத்தேன த்வந்த்வ மோஹேன பாரத ।
ஸர்வபூதானி ஸம்மோஹம் ஸர்க்கே யாந்தி பரந்தப ॥ 27 ॥

யேஷாந்-த்வந்தகதம் பாபம் ஜனானாம் புண்யகர்மணாம் ।
தே த்வந்த்வ-மோஹ-நிர்முக்தா பஜந்தே மாம் த்ருடவ்ரதாஃ ॥ 28 ॥

ஜரா-மரண-மோக்ஷாய மாமாச்ரித்ய யதந்தி யே ।
தே ப்ரஹ்ம தத்-விதுஃ க்ருத்ஸ்னம் அத்த்யாத்மம் கர்ம [சாகிலம் ॥ 29 ॥

25. நான் யோக மாயையினால் மூடப்பட்டு எல்லோருக்கும் விளங்குவதில்லை; மதியிழந்த இவ்வுலகம் பிறப்பற்றவனும் மாறுபாடற்றவனும் ஆக என்னை அறிவதில்லை.

26. அர்ஜுனா! சென்றுவிட்டனவும் நிகழ்வனவும் இனி வருவனவும் ஆகிய பொருள்களை நான் அறிபவன்; ஆனால் என்னை எவனும் அறியான்.

27. எதிரிகளை எரிக்கும் அர்ஜுனா! பாரதா! பிறக்கும் போதே எல்லாப் பிராணிகளும் விருப்பு வெறுப்பினின்றுதித்த இரட்டை வடிவமான மோகத்தால் மயக்கத்தை யடைகின்றன.

28. ஆனால் புண்ணிய கர்மாவைச் செய்த எந்த மனிதர்களுக்குத் தீவினை அழிவுற்றதோ அந்த இரட்டை வடிவான மோகத்தினின்றும் விடுபட்ட அவர்கள் உறுதியான நோன்புடையவர்களாய் என்னைப் பூஜிப்பார்கள்.

29. மூப்பினின்றும் சாதலினின்றும் விடுபடுவதற்காக என்னைச் சரணடைந்து எவர்கள் முயல்கின்றார்களோ, அவர்கள் அந்த பிரம்மத்தையும் அத்தியாத்ம தத்துவம் முழுவதையும் கருமங்கள் யாவற்றையும் அறிந்தவராவர்.

ஸாதிபூதாதிதைவம் மாம் ஸாதியஜ்ஞஞ் ச யே விதுঃ ।
ப்ரயாணகாலேऽபி ச மாம் தே விதுர்-யுக்த-சேதஸঃ ॥ 30 ॥

ஸ்ரீமத் பகவத்கீதாஸூபநிஷத்ஸு ப்ரஹ்மவித்யாயாம்
யோகசாஸ்த்ரே ஸ்ரீக்ருஷ்ணார்ஜுனஸம்வாதே
ஜ்ஞானகர்மஸந்ந்யாஸ யோகோ நாம
ஸப்தமோऽத்த்யாயঃ ॥

30. மேலும் எவர்கள் என்னை அதிபூதம்-அதிதைவம்-அதியஜ்ஞம் எனும் வடிவினனாக அறிந்தவர்களோ, அவர்கள் நிலைத்த மனத்தினராய் மரண காலத்திலுங்கூட என்னை அறிவர்.

இங்ஙனம் பிரம்ம வித்தையாயும் யோக சாஸ்திரமாயும்
ஸ்ரீகிருஷ்ணனுக்கும் அர்ஜுனனுக்கும் ஸம்பாஷணையாயும்
விளங்கும் ஸ்ரீமத் பகவத் கீதை எனும் உபநிஷத்தில்
ஸந்ந்யாஸயோகம் என்று பெயர் பெற்ற
ஏழாவது அத்தியாயம் முற்றும்.

## எட்டாம் அத்தியாயம்

### (அக்ஷரப்ரஹ்ம யோகம்)

**அர்ஜுன உவாச—**

கிம் தத்ப்ரஹ்ம கிமத்த்யாத்மம் கிம் கர்ம புருஷோத்தம ।
அதிபூதஞ்ச கிம் ப்ரோக்தம் அதிதைவம் கிமுச்யதே ॥ 1 ॥

அதியஜ்ஞ: கதம் கோऽத்ர தேஹேऽஸ்மின் மதுஸூதன ।
ப்ரயாணகாலே ச கதம் ஜ்ஞேயோऽஸி நியதாத்மபி: ॥ 2 ॥

**ஸ்ரீ பகவானுவாச—**

அக்ஷரம் ப்ரஹ்ம பரமம் ஸ்வபாவோऽத்த்யாத்ம-முச்யதே ।
பூதபாவோத்பவகரோ விஸர்க்க: கர்மஸம்ஜ்ஞித: ॥ 3 ॥

**அர்ஜுனன் கூறியது—**

1. புருஷோத்தமா! அந்தப் பிரம்மம் என்பது எது? அத்தியாத்மம் எது? அதிபூதம் எனச் சொல்லப்படுவது எது? எது அதிதைவம் எனச் சொல்லப்படுகிறது?

2. மதுஸூதனு! இங்கு இவ்வுடலில் அதியஜ்ஞமாயுளது யார்? எங்ஙனம்? மரண காலத்தில் தன்னடக்கம் பெற்றவரால் எங்ஙனம் நீ அறியப்படுகின்ருய்?

**ஸ்ரீ பகவான் கூறியது—**

3. அக்ஷரம் என்பது எல்லேப் பொருளான பிரம்மம்; அதன் ஸவபாவம் அல்லது ஒவ்வொரு உடலிலும் அதன் ஆவிர்ப்பாவம் அத்தியாத்மம் என்று சொல்லப்படும். பொருள்களின் இருப்புக்கும் உற்பத்திக்கும் காரணமான தியாகரூபமான யஜ்ஞம் கருமம் எனப்படும்.

அதிபூதம் க்ஷரோபாவঃ புருஷச்-சாதிதைவதம் ।
அதியஜ்ஞோऽஹமேவாத்ர தேஹே தேஹப்ருதாம் வர ॥ 4 ॥

அந்தகாலே ச மாமேவ ஸ்மரன் முக்த்வா கலேபரம் ।
யঃ ப்ரயாதி ஸ மத்பாவம் யாதி நாஸ்த்-யத்ர ஸம்சயঃ ॥ 5 ॥

யம் யம் வாபி ஸ்மரன் பாவம் த்யஜத்-யந்தே கலேபரம் ।
தம் தமேவைதி கௌந்தேய ஸதா தத்பாவ-பாவிதঃ ॥ 6 ॥

தஸ்மாத் ஸர்வேஷு காலேஷு மாமனுஸ்மர யுத்த்ய ச ।
மய்யர்ப்பித மனோபுத்திர்-மாமேவைஷ்யஸ்-யஸம்சயঃ ॥ 7 ॥

அப்யாஸ-யோக-யுக்தேன சேதஸா நான்யகாமினா ।
பரமம் புருஷம் திவ்யம் யாதி பார்த்தானுசிந்தயன் ॥ 8 ॥

4. உடல் தாங்கியவருள் சிறந்தவனே! அழியும் இயல் புடையது அதிபூதம் எனப்படும்; புருஷனே அதிதெய்வம்; இந்த தேகத்தில் நானே அதியஜ்ஞனும்.

5. கடைசிக் காலத்திலும் என்னையே கொணடு சரீரத்தை விட்டு எவன் செல்லுகிறுனே அவன் என் நிலையை அடைகிறுன்; இதில் சந்தேகம் இல்லை.

6. அல்லது கடைசியில் எந்தெந்த நினைவை நினைத்துக் கொண்டு உடலை விட்டாலும், குந்தீபுத்திரனே! எப்போதும் அந்நினைவையே நினைத்ததால் அதனையே அடைகிறுன்.

7. ஆகையால் எல்லாக் காலங்களிலும் என்னை நினை விலிருத்து; போரும் புரி. மனத்தையும் புத்தியையும் என் னிடம் அர்ப்பணம் செய்து சந்தேகமின்றி என்னையே வந் தடைவாய்.

8. பார்த்தா! இடைவிடாத யோகப் பயிற்சியால் நிலை நின்றதும் வேறொன்றை நாடாததும் ஆகிய சித்தத்தால் தியா னம் செய்து, பிரகாசிக்கும் பரம புருஷனை ஒருவன் அடை கிறுன்.

கவிம் புராண-மனுசாஸிதார-
மணோரணீயாம்ஸ-மனுஸ்மரேத்-ய: ।
ஸர்வஸ்ய தாதார-மசிந்த்யரூப-
மாதித்யவர்ணம் தமஸ: பரஸ்தாத் ॥ 9 ॥

ப்ரயாணகாலே மனஸாசலேன
பக்த்யா யுக்தோ யோகபலேன சைவ ।
ப்ருவோர்-மத்த்யே ப்ராண-மாவேச்ய ஸம்யக்
ஸ தம் பரம் புருஷ-முபைதி திவ்யம் ॥ 10 ॥

யதக்ஷரம் வேதவிதோ வதந்தி
விசந்தி யத்-யதயோ வீதராகா: ।
யதிச்சந்தோ ப்ரஹ்மசர்யஞ் சரந்தி
தத்தே பதம் ஸங்க்ரஹேண ப்ரவக்ஷ்யே ॥ 11 ॥

ஸர்வத்வாராணி ஸம்யம்ய மனோ ஹ்ருதி நிருத்த்ய ச ।
மூர்த்த்ன்-யாதா-யாத்மன: ப்ராண-மாஸ்த்திதோ
[யோக-தாரணாம் ॥ 12 ॥

**9-10.** எல்லாம் அறிந்தவனும், எல்லார்க்கும் முந்திய வனும், எல்லாவற்றையும் ஆள்பவனும், அணுவிற்கும் சிறிய வனும் எல்லார்க்கும் வினைப்பயனை அளிப்பவனும், சிந்தித்தற் கரிய உருவுடையவனும், சூரியனைப்போல் ஸ்வயம் பிரகாச னும், அவித்தையாகிய இருளுக்கு அப்பாற்பட்டவனுமாகிய வனை பக்தியுடன் கூடியவனாய் எவன் அசையாத மனத்தாலும் யோகத்தின் வலிமையாலும் புருவமத்தியில் பிராணனைச் செவ்வையாக நிலைநிறுத்தித் தியானிக்கின்றானோ அவன் பிர காசம் பொருந்திய அப் பரமபுருஷனை அடைகிறான்.

**11.** வேதத்தை உணர்ந்தவர்கள் எதை அக்ஷரம்—அழி யாப் பொருள்—என்றுக் கூறுகின்றார்களோ, பற்றுவிட்ட ஸந்நி யாஸிகள் எதைப்புகலிடமாய் அடைகின்றனரோ, எதை விரும்பிப் பிரம்மசரியத்தை அனுஷ்டிக்கின்றார்களோ, அந்த நிலையைச் சுருக்கமாகக் கூறுகிறேன்.

**12-13.** எல்லா இந்திரிய வாயில்களையும் அடைத்து, மனத்தையும் இருதயத்தில் நிலைநிறுத்தித் தனது பிராணனைத்

ஓமித்யேகாக்ஷரம் ப்ரஹ்ம வ்யாஹரன் மாமனுஸ்மரன் ।
யஃ ப்ரயாதி த்யஜன் தேஹம் ஸ யாதி பரமாங்கதிம் ॥ 13 ॥

அனன்யசேதாஃ ஸததம் யோ மாம் ஸ்மரதி நித்யசஃ ।
தஸ்யாஹம் ஸுலபஃ பார்த்த நித்ய-யுக்தஸ்ய யோகினஃ ॥ 14 ॥

மாமுபேத்ய புனர்ஜன்ம துஃக்காலய-மசாச்வதம் ।
நாப்னுவந்தி மஹாத்மானஃ ஸம்ஸித்திம் பரமாங்கதாஃ ॥ 15 ॥

ஆப்ரஹ்ம-புவனால்லோகாஃ புனராவர்த்தினோऽர்ஜுன ।
மாமுபேத்ய து கௌந்தேய புனர்ஜன்ம ந வித்யதே ॥ 16 ॥

ஸஹஸ்ர-யுகபர்யந்த-மஹர்-யத் ப்ரஹ்மணோ விதுஃ ।
ராத்ரிம் யுக-ஸஹஸ்ராந்தாம் தேऽஹோராத்ரவிதோஜனாஃ
॥ 17 ॥

தலையின் உச்சியில் வைத்து, யோக தாரணையில் நிலைபெற்றவனாய், ஓம் எனும் பிரம்மவாசகமாகிய ஓரெழுத்தை உச்சரித்துக்கொண்டு, என்னை முறைப்படி சிந்தித்தவனாய், உடலை விட்டு எவன் செல்லுகின்றானோ, அவன் உயர்ந்த கதியை அடைகின்றான்.

**14.** பார்த்தா! வேறொன்றில் சித்தத்தை வையாதவனாய் எவன் என்னை எந்நாளும் இடைவிடாது எண்ணுகின்றானோ, அந்த நித்திய யுக்தனாகிய யோகிக்கு நான் எளிதில் அடையக் கூடியவன்.

**15.** உயர்ந்த மோக்ஷமாகிற சித்தியை எய்திய மகான்கள் என்னை அடைந்து துன்பத்துக் கிருப்பிடமாகியதும் நிலையற்றதுமாகிய மறு பிறப்பை அடைவதில்லை.

**16.** அர்ஜுனா! பிரம்மலோகம் முதலாக எல்லா உலகங்களும் மீண்டும் திரும்பி வரும் இயல்புடையன; ஆனால், குந்தீ புத்திரனே! என்னை அடைந்தபின் மறுபடி பிறத்தல் இல்லை.

**17.** ஆயிரம் யுகங்களில் முடியும் பிரம்மாவின் பகல் எதுவோ அதையும், ஆயிரம் யுகத்தில் முடியும் இரவு எதுவோ அதையும், எவர்கள் அறிந்தார்களோ அந்த மனிதர்களே இரவு பகலை அறிந்தவர்கள்.

அவ்யக்தாத்- வ்யக்தய: ஸர்வா: ப்ரபவந்த்-யஹராகமே ।
ராத்ர் யாகமே ப்ரலீயந்தே தத்ரைவாவ்யக்த—ஸம்ஜ்ஞகே
॥ 18 ॥

பூதக்ராம: ஸ ஏவாயம் பூத்வா பூத்வா ப்ரலீயதே ।
ராத்ர்யாகமே ऽவச: பார்த்த ப்ரபவத்-யஹராகமே 19

பரஸ்தஸ்மாத்து பாவோऽன்யோ ऽவ்யக்தோ ऽவ்யக்தாத்
[ஸநாதந: ।

ய: ஸ ஸர்வேஷு பூதேஷு நச்யத்ஸு ந விநச்யதி ॥ 20 ॥

அவ்யக்தோ ऽக்ஷர இத்யுக்தஸ்-தமாஹு: பரமாங்கதிம் ।
யம் ப்ராப்ய ந நிவர்த்தந்தே தத்தாம பரமம் மம ॥ 21 ॥

18. பிரம்மாவின் பகல் வந்ததும் தோன்றாத நிலையினின்று தோற்றங்கள் அனைத்தும் வெளிகிளம்புகின்றன; இரவு வந்ததும் அங்கேயே அவ்யக்தம் என்று குறிக்கப்படும் தோன்றா நிலையில் ஒடுங்குகின்றன.

19. பார்த்தா! ஸ்தாவர ஜங்கமப் பொருள்களின் கூட்டம் அப்போதிருந்ததே இப்போதுள்ளதும்; தோன்றித் தோன்றி, இரவு வந்ததும் ஒடுங்கி மறைகின்றது; பகல் வந்ததும் தன் வசமின்றி மீண்டும் தோன்றுகின்றது.

20. ஆனால் அந்த அவ்யக்தத்தினின்றும் வேறான இருப்பையுடைய அனாதியான இன்னொரு அவ்யக்தம் எது உளதோ அது எல்லாப் பொருள்களும் அழியும்போதும் அழிவதில்லை.

21. அக்ஷரம் என்று கூறப்பட்ட அவ்யக்தம் எதுவோ அதையே உயர்ந்த கதியாகக் கூறுவர். எதை அடைந்து திரும்பி வருதல் இல்லையோ அது என்னுடைய பரமபதம்.

புருஷः ஸ பரः பார்த்த பக்த்யா லப்ய்யஸ்-த்வனன்யயா ।
யஸ்யாந்தः ஸ்த்தானி பூதானி யேன ஸர்வமிதம் ததம் ॥ 22 ॥

யத்ர காலே த்வனுவ்ருத்திம் ஆவ்ருத்திஞ் சைவ யோகினः ।
ப்ரயாதா யாந்தி தம் காலம் வக்ஷ்யாமி பரதர்ஷப ॥ 23 ॥

அக்னிர்-ஜ்யோதி-ரஹः சுக்லः ஷண்மாஸா உத்தராயணம் ।
தத்ர ப்ரயாதா கச்சந்தி ப்ரஹ்ம ப்ரஹ்மவிதோ ஜனாः ॥ 24 ॥

தூமோராத்ரிஸ்-ததா க்ருஷ்ணः ஷண்மாஸா தக்ஷிணாயனம் ।
தத்ர சாந்த்ரமஸம் ஜ்யோதிர்-யோகீ ப்ராப்ய நிவர்த்ததே ॥ 25 ॥

சுக்ல-க்ருஷ்ணே கதீ-ஹ்யேதே ஜகதः சாச்வதே மதே ।
ஏகயா யாத்-யனாவ்ருத்தி-மன்யயாऽவர்த்ததே புனः ॥ 26 ॥

---

**22.** பார்த்தா! பொருள்கள் எவனிடம் முடிவாக இருப்புடையனவோ, எவனால் இவ்வனைத்தும் வியாபிக்கப்பட்டுள்ளனவோ, அந்தப் பரம புருஷன் வேறொன்றிலும் நாட்டமில்லாத பக்தியினாலேயே அடைதற்குரியவன்.

**23.** பரத வம்சத்திற் பிறந்தோனே! எவ்வெக்காலத்திற் பயணப்பட்ட யோகிகள் திரும்பி வராமையையோ திரும்பி வருதலையோ அடைகிறார்களோ அவ்வக்காலத்தை எடுத்துக் கூறுவேன்.

**24.** அக்கினியின் பிரகாசம், பகல், சுக்லபக்ஷம், உத்தராயண ஆறுமாதம், அவற்றில் பயணம் சென்றவரும் பிரம்ம உபாஸகர்களுமாகிய ஜனங்கள்—கிரமமாக—பிரம்மத்தை அடைவார்கள்.

**25.** புகை, இரவு, கிருஷ்ண பக்ஷம், தக்ஷிணாயன ஆறு மாதம் அவற்றில் கர்மயோகியானவன் சந்திரனுடைய ஜோதிர் மண்டலத்தை அடைந்து திரும்பி வருகிறான்.

**26.** நிச்சயமாக உலகிற்கு ஒளியும் இருளும் என்ற இவ்விரண்டு மார்க்கங்களும் என்றும் உள்ளனவாகக் கருதப்படுகின்றன. ஒன்றால் திரும்பி வராமையை எய்துகின்றான். மற்றொன்றால் திரும்பவும் வருகின்றான்.

நைதே ஸ்ருதீ பார்த்த ஜானன் யோகீ முஹ்யதி கச்சன ।
தஸ்மாத் ஸர்வேஷு காலேஷு யோகயுக்தோ பவார்ஜுன
॥ 27 ॥

வேதேஷு யஜ்ஞேஷு தபஸ்ஸு சைவ
தானேஷு யத் புண்யபலம் ப்ரதிஷ்டம் ।
அத்யேதி தத் ஸர்வ-மிதம் விதித்வா
யோகீ பரம் ஸ்த்தான-முபைதி சாத்யம் ॥ 28 ॥

இதி ஸ்ரீமத் பகவத்கீதாஸூபநிஷத்ஸு ப்ரஹ்மவித்யாயாம்
யோகசாஸ்த்ரே ஸ்ரீக்ருஷ்ணார்ஜுன-ஸம்வாதே
அக்ஷரப்ரஹ்மயோகோ நாம
அஷ்டமோऽத்யாயః ॥

---

**27.** பார்த்தா! இவ்விரு மார்க்கங்களையும் அறிந்து எந்த யோகியும் ஏமாற்றத்தை அடையான். ஆகையால், அர்ஜுனா! எக்காலத்தும் யோகயுக்தனாக இரு.

**28.** வேதமோதுதலிலும் யஜ்ஞத்திலும் தவத்திலும் தானத்திலும் எந்த நல்ல பலன் கூறபபடுகின்றதோ, அது அனைத்தையும் இதையறிந்த யோகியானவன் கடந்து மேலே செல்லுகின்றான்; ஆதியும் ஒப்புயர்வற்றதுமான ஸ்தானத்தை அடைகிறான்.

இங்ஙனம் பிரம்ம வித்தையாயும் யோக சாஸ்திரமாயும்
ஸ்ரீகிருஷ்ணனுக்கும் அர்ஜுனனுக்கும் ஸம்பாஷணையாயும்
விளங்கும் ஸ்ரீமத் பகவத் கீதை என்னும் உபநிஷத்தில்
அக்ஷரப்பிரம்மயோகம் என்று பெயர் பெற்ற
எட்டாவது அத்தியாயம் முற்றும்.

# ஒன்பதாம் அத்தியாயம்

## (ராஜவித்யா ராஜகுஹ்ய யோகம்)

**ஸ்ரீ பகவானுவாச—**

இதம் து தே குஹ்யதமம் ப்ரவக்ஷ்யாம்-யனஸூயவே ।
ஜ்ஞானம் விஜ்ஞானஸஹிதம் யத் ஜ்ஞாத்வா மோக்ஷ்யஸே
[ऽசுபாத் ॥ 1 ॥

ராஜவித்யா ராஜகுஹ்யம் பவித்ர-மித-முத்தமம் ।
ப்ரத்யக்ஷாவகமம் தர்ம்யம் ஸுஸுகம் கர்த்து-மவ்யயம் ॥ 2 ॥

அச்ரத்ததானாஃ புருஷா தர்மஸ்யாஸ்ய பரந்தப ।
அப்ராப்ய மாம் நிவர்த்தந்தே ம்ருத்யு-ஸம்ஸார-வர்த்மனி ॥ 3 ॥

மயா ததமிதம் ஸர்வம் ஜக-தவ்யக்த- மூர்த்தினா ।
மத்-ஸ்த்தானி ஸர்வபூதானி ந சாஹம் தேஷ்-வவஸ்த்திதஃ ॥ 4 ॥

**ஸ்ரீ பகவான் கூறியது—**

1. எதை அறிந்து அஞ்ஞானமாகிய தீமையினின்று விடுபடுவாயோ அப்படிப்பட்ட இந்த மிக்க இரகசியமானதும் விஞ்ஞானத்துடன் கூடியதும் ஆகிய ஞானத்தை அசூயையில்லாத உனக்கு எடுத்துரைப்பேன்.

2. இது வித்தைகளுக்கரசன், இரகசியங்களுக்குள் சிறந்தது, உத்தமமானது, பரிசுத்தமானது, நேரில் கண்டனுபவிக்கக் கூடியது, தருமத்தினின்று பிறழாதது, அனுஷ்டித்தற்கு மிக எளிது, என்றும் அழியாதது.

3. பரந்தப! இந்த தருமத்தில் சிரத்தையில்லாத மானிடர்கள் என்னை அடையாமல் மரணத்துடன் கூடிய சம்சார மார்க்கத்தில் திரும்பவும் புகுகின்றனர்.

4. இந்த உலகனைத்தும் புலப்படாத என்னால் வியாபிக்கப் பட்டுள்ளது. பொருள்கள் எல்லாம் என்னிடம் இருப்புடையன. நானோ அவற்றினிடம் இருப்புடையவனன்று.

ந ச மத்-ஸ்த்தானி பூதானி பச்ய மே யோக-மைச்வரம் ।
பூதப்ருந் ந ச பூதஸ்த்தோ மமாத்மா பூதபாவன꞉ ॥ 5 ॥

யதாகாச-ஸ்த்திதோ நித்யம் வாயு꞉ ஸர்வத்ரகோ மஹான் ।
ததா ஸர்வாணி பூதானி மத்-ஸ்த்தானீத்-யுபதாரய ॥ 6 ॥

ஸர்வபூதானி கௌந்தேய ப்ரக்ருதிம் யாந்தி மாமிகாம் ।
கல்பக்ஷயே புனஸ்தானி கல்பாதௌ விஸ்ருஜாம்-யஹம் ॥7॥

ப்ரக்ருதிம் ஸ்வா-மவஷ்டப்ய விஸ்ருஜாமி புன꞉ புன꞉ ।
பூதக்ராம-மிமம் க்ருத்ஸ்ன-மவசம் ப்ரக்ருதேர்-வசாத் ॥ 8 ॥

ந ச மாம் தானி கர்மாணி நிபத்னந்தி தனஞ்ஜய ।
உதாஸீனவ-தாஸீன-மஸக்தம் தேஷு கர்மஸு ॥ 9 ॥

5. எனினும் பொருள்கள் என்னிடம் இருப்புடையனவும் அல்ல: என்னுடைய தெய்வீகமான யோகத்தைப் பார். என்னுடைய ஆத்மாவானது பொருள்களைத் தாங்குவது, பொருள்களை உண்டாக்குவது; ஆனல் பொருள்களில் இருப்புடையதன்று.

6. எப்போதும் எங்கும் உலவுவதும், அளவு கடந்ததும் ஆகிய காற்று எவ்வாறு வானில் இருப்புடையதோ அவ்வாறு எல்லாப் பொருள்களும் என்னிடம் இருப்புடையன என்று உணர்வாய்.

7. குந்தீ புத்திரனே! எல்லாப் பொருள்களும் கல்பத்தின் முடிவில் என்னுடைய பிரகிருதியை அடைகின்றன. கல்பத்தின் ஆதியில் அவற்றை நான் உற்பவிக்கச் செய்கின்றேன்.

8. என்னுடைய பிரகிருதியை வசப்படுத்திக்கொண்டு, பிரகிருதியின் வசப்பட்டதால் அவசமான பொருள் கூட்டத்தைத் திரும்பத் திரும்ப உற்பவிக்கச் செய்கின்றேன்.

9. தனஞ்ஜயா! அச்செயல்கள் அவற்றில் பற்றற்றவனும் உதாசீனனைப் போலிருப்பவனும் ஆகிய என்னைக் கட்டுப்படுத்தமாட்டா.

மயாத்த்யக்ஷேண ப்ரக்ருதிः ஸூயதே ஸசராசரம் ।
ஹேதுனானேன கௌந்தேய ஜகத்-விபரிவர்த்ததே ॥ 10 ॥

அவஜானந்தி மாம் மூடா மானுஷீம் தனு-மாச்ரிதம் ।
பரம் பாவ-மஜானந்தோ மம பூதமஹேச்வரம் ॥ 11 ॥

மோகாசா மோககர்மாணோ மோகஜ்ஞானா விசேதஸः ।
ராக்ஷஸீ-மாஸுரீஞ் சைவ ப்ரக்ருதிம் மோஹினீம் ச்ரிதா ॥ 12 ॥

மஹாத்மானஸ்து மாம் பார்த்த தைவீம் ப்ரக்ருதி-மாச்ரிதாः ।
பஜந்த்-யனன்யமனஸோ ஜ்ஞாத்வா பூதாதி-மவ்யயம் ॥ 13 ॥

ஸததம் கீர்த்தயந்தோ மாம் யதந்தச்ச த்ருடவ்ரதாः ।
நமஸ்யந்தச்ச மாம் பக்த்யா நித்யயுக்தா உபாஸதே ॥ 14 ॥

---

**10.** என்னுடைய மேற்பார்வையினுல் பிரகிருதி அசையும் பொருள்களேயும் அசையாப்பொருள்களேயும் பிறப்பிக்கின்றது. குந்தீ புத்ரனே! இந்தக் காரணத்தால் உலகு சுற்றிச் சுற்றி வருகின்றது.

**11.** பொருள்களுக்கு மகேசுவரனுயுள்ள என்னுடைய உயர்ந்த தன்மையை அறியாதவர்களான மூடர்கள் மனித உடலே அடைந்த என்னே அவமதிக்கிருர்கள்.

**12.** வீணுசை உடையவர்களும், வீண்தொழில் உடையவர்களும் ஆகிய இவர்கள் மதியை மயக்கும் இராக்ஷஸத் தன்மையையும் அசுரத் தன்மையையுமே அனுசரிப்பார்கள்.

**13.** பார்த்தா! மஹாத்மாக்களோவெனில் தெய்வத் தன்மையை அனுசரிப்பவர்களாய் வேறு சிந்தையில்லாதவராய்ப் பொருள்களின் ஆதியும் அழிவற்றவனுமான என்னே அறிந்து பூஜிக்கின்ருர்கள்.

**14.** எப்போதும் என்னேத் துதிப்பவர்களாய் திடமான விரதமுடையவர்களாய் முயற்சியுடையவர்களாய் பக்தியுடன் நமஸ்கரிப்பவர்களாய் நிலைபெற்ற மனத்தினராய் என்னே அவர்கள் சேவிக்கின்ருர்கள்.

ஜ்ஞானயஜ்ஞேன சாப்யன்யே யஜந்தோ மாமுபாஸதே ।
ஏகத்வேன ப்ருதக்த்வேன பஹுதா விச்வதோமுகம் ॥ 15 ॥

அஹம் க்ரது-ரஹம் யஜ்ஞ: ஸ்வதாஹ-மஹ-மௌஷதம் ।
மந்த்ரோऽஹ-மஹ-மேவாஜ்ய-மஹ-மக்னி-ரஹம்ஹுதம் ॥ 16 ॥

பிதாஹ-மஸ்ய ஜகதோ மாதா தாதா பிதாமஹ: ।
வேத்யம் பவித்ர-மோங்கார ருக் ஸாம யஜு-ரேவ ச ॥ 17 ॥

கதிர்-ப்பர்த்தா ப்ரபு: ஸாக்ஷீ நிவாஸ: சரணம் ஸுஹ்ருத் ।
ப்ரபவ: ப்ரலய: ஸ்த்தானம் நிதானம் பீஜ-மவ்யயம் ॥ 18 ॥

தபாம்யஹ-மஹம் வர்ஷம் நிக்ருஹ்ணாம் யுத்ஸ்ருஜாமி ச ।
அம்ருதஞ் சைவ ம்ருத்யுச்ச ஸதஸச்சாஹ-மர்ஜுன ॥ 19 ॥

**15.** வேறு சிலர் ஞான யஜ்ஞத்தினுல் ஒன்றுபடுத்திப் பூஜிப்பவர்களாயும், இன்னும் சிலர் எங்கும் முகமுடைய விராட்ரூபியான என்னை வேற்றுமைப்படுத்திப் பூஜிப்பவராயும் பலவகையில் வழிபடுகிருர்கள்.

**16.** நானே கிரது; நானே யஜ்ஞம்; நானே பிதிருக்களுக்கிடும் அன்னம்; நானே பிராணிகளுக்கு அன்னமும் மருந்தும்; மந்திரமும் நானே; நெய்யும் நானே; அக்கினியும் நானே; ஹோம கருமமும் நானே.

**17.** இவ்வுலகிற்குத் தகப்பனும் தாயும் தாங்குபவனும் பாட்டனும் கற்றுணரத்தக்கவனும் பரிசுத்த மளிப்பவனும் ஓங்காரப் பொருளும் ருக் சாம யஜுர்வேதங்களும் நானே.

**18.** செல் இடமும், போஷித்துக் காப்பவனும், ஆள்பவனும், பார்த்துக் கொண்டிருப்பவனும், வாழுமிடமும், துன்பந் துடைப்பவனும், நண்பனும், பிறப்பிடமும், புகலிடமும், இருப்பிடமும், பொக்கிஷமும், அழியாத வித்தும் நானே

**19.** அர்ஜுனு! நான் வெயிலாய்க் காய்கின்றேன். நான் மழையைப் பெய்யச் செய்கின்றேன்; பெய்யாமலும் தடுக்கின்றேன். சாகாமையும் சாவும், இருப்பும் இன்மையும் நானே.

த்ரைவித்யா மாம் ஸோமபாঃ பூதபாபா
யஜ்ஞை-ரிஷ்ட்வா ஸ்வர்க்கதிம் ப்ரார்த்தயந்தே ।
தே புண்ய—மாஸாத்ய ஸுரேந்த்ரலோகம்
அச்னந்தி திவ்யான் திவி தேவபோகான் ॥ 20 ॥

தே தம் புக்த்வா ஸ்வர்க்கலோகம் விசாலம்
க்ஷீணே புண்யே மர்த்யலோகம் விசந்தி ।
ஏவம் த்ரயீதர்ம-மனுப்ரபன்னா
கதாகதம் காமகாமா லபந்தே ॥ 21 ॥

அனன்யாச்-சிந்தயந்தோ மாம் யே ஜனাঃ பர்யுபாஸதே ।
தேஷாம் நித்யாபியுக்தானாம் யோகக்ஷேமம் வஹாம்யஹம்
॥ 22 ॥

யேऽப்யன்யதேவதா-பக்தா யஜந்தே ச்ரத்தயான்விதாঃ ।
தேऽபி மாமேவ கௌந்தேய யஜந்த்-யவிதி-பூர்வகம் ॥ 23 ॥

**20.** மூன்று வேதங்களையும் கற்றவர்கள் வேள்விகளால் என்னைப் பூஜித்து, ஸோம பானத்தால் பாவம் தேய்ந்தவர்களாய்ச் சுவர்க்கம் செல்லுதலை வேண்டுகின்றார்கள். அவர்கள் புண்யபலனாயுள்ள தேவேந்திர உலகை அடைந்து, அவ்வானுலகில் பிரகாசிக்கின்ற தேவர்களுக்குரிய போகங்களை [illegible]ார்கள்.

**21.** அவர்கள் அந்த விசாலமான சுவர்க்கலோகத்தை அனுபவித்துப் புண்ணியம் குறைந்ததும் மனிதவுலகிற் புகுகின்றனர். இவ்வாறு வைதிக கருமங்களைப் பின்பற்றினவர்கள் போகங்களில் ஆசை கொண்டவர்களாய்ப் போதலையும் வருதலையும் அடைகின்றனர்.

**22.** என்னைவிட வேறொன்றிலும் நாட்டமில்லாதவராய் என்னையே சிந்திப்பவராய் எந்த ஜனங்கள் பரிவுடன் உபாசிக்கின்றார்களோ அந்த நிலைபெற்ற யுக்தர்களுடைய யோகக்ஷேமத்தை நான் தாங்குகின்றேன்.

**23.** குந்தி புத்திரனே! சிரத்தையுடன் கூடியவர்களாய் எவர்கள் வேறுதெய்வங்களிடம் பக்தி செலுத்திப் பூஜிக்கின்றார்களோ அவர்களுங் கூட என்னையே தான் அறியாமல் பூஜிக்கின்றனர்.

அஹம் ஹி ஸர்வயஜ்ஞானும் போக்தா ச ப்ரபுரேவ ச ।
ந து மாமபிஜானந்தி தத்வேனுதச்-ச்யவந்தி தே ॥ 24 ॥

யாந்தி தேவவ்ரதா தேவான் பித்ருன் யாந்தி பித்ருவ்ரதாஃ ।
பூதானி யாந்தி பூதேஜ்யா யாந்தி மத்யாஜினேஒபி மாம் ॥25॥

பத்ரம் புஷ்பம் பலம் தோயம் யோ மே பக்த்யா ப்ரயச்சதி ।
ததஹம் பக்தயுபஹ்ருத-மச்னுமி ப்ரயதாத்மனஃ ॥ 26 ॥

யத் கரோஷி யதச்னஸி யஜ்ஜுஹோஷி ததாஸி யத் ।
யத் தபஸ்யஸி கௌந்தேய தத் குருஷ்வ மதர்ப்பணம் ॥ 27 ॥

சுபாசுபபலை-ரேவம் மோக்ஷ்யஸே கர்மபந்தனைஃ ।
ஸந்ந்யாஸயோக-யுக்தாத்மா விமுக்தோ மாமுபைஷ்யஸி ॥ 28 ॥

**24.** எல்லா யஜ்ஞங்களிலும் உண்பவனும் பலனையளிக்கும் ஆண்டவனும் நானே யன்றோ ? ஆனுல் அவர்கள் என்னை உள்ளபடி அறிவதில்லை. அதனுல் நழுவுகின்றனர்.

**25.** தேவர்களை வழிபடுவோர் தேவர்களையடைகின்றனர். பிதிருக்களை வழிபடுவோர் பிதிருக்களை அடைகின்றனர். என்னைப் பூஜிப்பவர்கள் என்னை அடைகின்றனர்.

**26.** எவன் எனக்கு பக்தியுடன் பச்சிலையோ புஷ்பமோ பழமோ தீர்த்தமோ அர்ப்பிக்கின்ருனோ, தூய்மையான அந்தக்கரணமுடைய அவன் அன்புடன் அளித்த அப்பொருளை நான் புசிக்கின்றேன்.

**27.** குந்தி புத்திரனே ! எதைச் செய்கின்ருயோ, எதைப் புசிக்கின்ருயோ, எதை ஹோமம் செய்கின்ருயோ, எதைத் தானம் செய்கின்ருயோ, எந்தத் தவம் செய்கின்ருயோ அதை எனக்கு அர்ப்பணமாகச் செய்வாய்.

**28.** இவ்வாறு புண்யபாவ வடிவான கருமக்கட்டு களினின்றும் விடுபடுவாய். விடுபட்டு ஸந்நியாஸ யோகத்தில் நிலைபெற்ற உள்ளத்தினனுய் என்னை வந்தடைவாய்.

ஸமோऽஹம் ஸர்வபூதேஷு ந மே த்வேஷ்யோऽஸ்தி ந ப்ரியஃ।
யே பஜந்தி து மாம் பக்த்யா மயி தே தேஷு சாப்யஹம் ॥29॥

அபி சேத் ஸுதுராசாரோ பஜதே மாமனன்யபாக் ।
ஸாதுரேவ ஸ மந்தவ்யஃ ஸம்யக் வ்யவஸிதோ ஹி ஸஃ ॥ 30 ॥

க்ஷிப்ரம் பவதி தர்மாத்மா சச்வச்-சாந்திம் நிகச்சதி ।
கௌந்தேய ப்ரதிஜானீஹி ந மே பக்தஃ ப்ரணச்யதி ॥ 31 ॥

மாம் ஹி பார்த்த வ்யபாச்ரித்ய யேऽபி ஸ்யுஃ பாபயோனயஃ ।
ஸ்த்ரியோ வைச்யாஸ்-ததா சூத்ராஸ்-தேऽபி யாந்தி
பராங்கதிம் ॥ 32 ॥

கிம் புனர்-ப்ராஹ்மணாஃ புண்யா பக்தா ராஜர்ஷயஸ்-ததா ।
அநித்ய-மஸுகம் லோக-மிமம் ப்ராப்ய பஜஸ்வ மாம் ॥ 33 ॥

---

**29.** நான் எல்லா உயிர்களிடத்தும் சமமாயுள்ளேன். எனக்கு வெறுக்கத் தகுந்தவனில்லை. விரும்பத் தகுந்தவனும் இல்லை. ஆனால் எவர்கள் என்னைப் பக்தியினால் பூஜிக்கின்றார் களோ அவர்கள் என்னிடத்திலுளர். நானும் அவர்களிடத் திலுள்ளேன்.

**30.** தீயொழுக்கம் மிக்கவனுங்கூட என்னை வேறொரு நாட்டமின்றிப் போற்றுவானெனில் அவன் நன்னடத்தை உள்ளவன் என்றே கருதுதற்குரியவன்; ஏனெனில் அவன் நன்றாக நிச்சயித்தவன்.

**31.** அவன் விரைவில் தருமசிந்தனையுடையவனாக ஆகின்றான். சாச்வதமான சாந்திநிலையை அடைகின்றான். குந்தீ புத்திரனே! என்னுடைய பக்தன் நாசமடையமாட்டான் என்று உண்மையில் உணர்ந்து உலகுக்குரைப்பாய்.

**32.** பார்த்தா! ஸ்திரீகளும் வைசியர்களும் சூத்திரர் களும் தாழ்ந்த பிறப்பினருங்கூட, என்னைச் சரணடைந்து உயர்ந்த கதியை நிச்சயமாய் அடைகின்றனர்.

**33.** புண்ணியவான்களான பிராம்மணர்களும் பக்தர் களான ராஜரிஷிகளும் நற்கதியை அடைவர் என்று கூறு தலும் வேண்டுமோ? நிலையில்லாததும் சுகமில்லாததுமான இந்த உலகத்தை அடைந்து அநித்தியமான உலகப் பொருள் களைக் கொண்டும் என்னையே பூஜிப்பாயாக.

மன்மனு பவ மத்பக்தோ மத்யாஜீ மாம் நமஸ்குரு ।
மாமேவைஷ்யஸி யுக்த்வைவ-மாத்மானம்மத்பராயண: ॥34॥

இதி ஸ்ரீமத் பகவத்கீதாஸூபநிஷத்ஸு ப்ரஹ்மவித்யாயாம்
யோகசாஸ்த்ரே ஸ்ரீக்ருஷ்ணார்ஜுன-ஸம்வாதே
ராஜவித்யா ராஜகுஹ்ய யோகோ நாம
நவமோऽத்த்யாய: ॥

---

34. என்னிடம் மனத்தை வைத்தவனாகவும் என் பக்தனாகவும் என்னைப் பூஜிப்பவனாகவும் ஆவாயாக. என்னையே நமஸ்கரிப்பாயாக. இவ்வாறு என்னையே உத்தம கதியாகக் கருதி உள்ளத்தை நிலைநிறுத்தி என்னையே வந்தடைவாய்.

இங்ஙனம் பிரம்ம வித்தையாயும் யோக சாஸ்திரமாயும்
ஸ்ரீகிருஷ்ணனுக்கும் அர்ஜுனனுக்கும் ஸம்பாஷணையாயும்
விளங்கும் ஸ்ரீமத் பகவத் கீதை என்னும் உபநிஷத்தில்
ராஜவித்யா ராஜ குஹ்யயோகம் என்று பெயர் பெற்ற
ஒன்பதாவது அத்தியாயம் முற்றும்.

---

# பத்தாம் அத்தியாயம்

## (விபூதி யோகம்)

**ஸ்ரீ பகவானுவாச —**

பூய ஏவ மஹாபாஹோ ச்ருணு மே பரமம் வச: ।
யத்தேऽஹம் ப்ரீயமாணாய வக்ஷ்யாமி ஹித-காம்யயா ॥ 1 ॥

ந மே விது: ஸுரகணா: ப்ரபவம் ந மஹர்ஷய: ।
அஹமாதிர்-ஹி தேவானாம் மஹர்ஷீணாஞ்ச ஸர்வச: ॥ 2 ॥

யோ மாமஜமனாதிஞ் ச வேத்தி லோகமஹேச்வரம் ।
அஸம்மூட: ஸ மர்த்யேஷு ஸர்வபாபை: ப்ரமுச்யதே ॥ 3 ॥

புத்திர்-ஜ்ஞான-மஸம்மோஹ: க்ஷமா ஸத்யம் தம: சம:
ஸுகம் து:க்கம் பவோऽபாவோ பயஞ் சாபயமேவ ச ॥ 4 ॥

**ஸ்ரீ பகவான் கூறியது—**

1. தோள்வலியுடையோனே! கேட்பதில் உள்ளம் மகிழும் உனக்கு நான் நன்மையை விரும்பி எதைக் கூறுகிறேனோ அந்த என்னுடைய உயர்ந்த மொழியை மறுபடியும் கேட்பாய்.

2. என்னுடைய பெருமையை தேவகணங்கள் உணரவில்லை. மகரிஷிகளும் உணரவில்லை; நான் தேவர்களுக்கும் மகரிஷிகளுக்கும் எல்லாவகையிலும் முதற்காரணமன்றோ?

3. எவன் ஆதியில்லாதவனும் பிறப்பில்லாதவனும் உலகுக்கெல்லாம் இறைவனும் ஆகிய என்னை அறிகிறானோ அவன் மனிதர்களுள் மதிமயக்கம் நீங்கினவன்; எல்லாப் பாவங்களினின்றும் விடுபடுகிறான்.

4. புத்தி, ஞானம், மதிமயக்கமின்மை, பொறுமை, உண்மை, புலனடக்கம், உள்ளத்தினடக்கம், இன்பம், துன்பம், பிறப்பு, இறப்பு, அச்சமும், அச்சமின்மையும்;

அஹிம்ஸா ஸமதா துஷ்டிஸ்-தபோ தானம் யசோऽயச: ।
பவந்தி பாவா பூதானும் மத்த ஏவ ப்ருதக்விதா: ॥ 5 ॥

மஹர்ஷய: ஸப்த பூர்வே சத்வாரோ மனவஸ்-ததா ।
மத்பாவா மானஸா ஜாதா யேஷாம் லோக இமா: ப்ரஜா: ॥6॥

ஏதாம் விபூதிம் யோகஞ் ச மம யோ வேத்தி தத்வத: ।
ஸோऽவிகம்பேன யோகேன யுஜ்யதே நாத்ர ஸம்சய: ॥ 7 ॥

அஹம் ஸர்வஸ்ய ப்ரபவோ மத்த: ஸர்வம் ப்ரவர்த்ததே ।
இதி மத்வா பஜந்தே மாம் புதா பாவஸமன்விதா: ॥ 8 ॥

மச்சித்தா மத்கதப்ராணு போதயந்த: பரஸ்பரம் ।
கதயந்தச்ச மாம் நித்யம் துஷ்யந்தி ச ரமந்தி ச ॥ 9 ॥

---

5. அஹிம்ஸை, சமநிலே, போதுமென்ற மனம், தவம், தானம், கீர்த்தி, அபகீர்த்தி இவ்வாறு வெவ்வேறுவிதமான நிலேகள் உயிர்களுக்கு என்னிடமிருந்தே உண்டாகின்றன.

6. உலகில் இந்தப் பிரஜைகள் எவர்களிடமிருந்து வந்தனவோ அந்த முன்னவர்களான ஏழு மகரிஷிகளும் நாலு மனுக்களும் என் பாவனேயால் என்னேப் போன்று சக்தி வாய்ந்தவர்கள். மனத்தினின்றே உதித்தவர்கள்.

7. எவன் என்னுடைய இந்தப் பெருமையையும் யோக சக்தியையும் உள்ளபடி அறிகின்ருனே அவன் அசைவற்ற யோகத்துடன் கூடியவனுகின்ருன். இதில் சந்தேகம் இல்லே.

8. நான் அனேத்துக்கும் பிறப்பிடம். என்னிடமிருந்தே அனேத்தும் பிரவிருத்தித்து இயங்குகின்றது என்று உணர்ந்து புத்திமான்கள் எங்கும் என்னேயே பாவிப்பவர்களாய் என்னே பூஜிக்கின்ருர்கள்.

9. சித்தத்தை என்னிடம் வைத்தவர்களாய் என்னே உயிர் நிலேயாய்க் கொண்டவர்களாய் ஒருவருக் கொருவர் என்னேயே போதித்துக்கொண்டும் எப்போதும் என் லீலே களேயே எடுத்துரைத்துக்கொண்டும் திருப்தியடைகின்றனர். ஆனந்தம் எய்துகின்றனர்.

தேஷாம் ஸதத-யுக்தானாம் பஜதாம் ப்ரீதிபூர்வகம் ।
ததாமி புத்தியோகம் தம் யேன மாமுபயாந்தி தே ॥ 10 ॥

தேஷா-மேவானுகம்பார்த்த-மஹ-மஜ்ஞானஜந் தமஃ ।
நாசயாம்-யாத்மபாவஸ்த்தோ ஜ்ஞான தீபேன பாஸ்வதா ॥ 11 ॥

அர்ஜுன உவாச—
பரம் ப்ரஹ்ம பரந்தாம பவித்ரம் பரமம் பவான் ।
புருஷம் சாச்வதம் திவ்ய-மாதிதேவ-மஜம் விபும் ॥ 12 ॥

ஆஹுஸ்த்வாம் ருஷயஃ ஸர்வே தேவர்ஷிர்-நாரதஸ்-ததா ।
அஸிதோ தேவலோ வ்யாஸஃ ஸ்வயஞ் சைவ ப்ரவீஷி மே ॥ 13 ॥

ஸர்வமேதத் ருதம் மன்யே யன்மாம் வதஸி கேசவ ।
ந ஹி தே பகவன் வ்யக்திம் விதுர்-தேவா ந தானவாஃ ॥ 14 ॥

10. நிலைபெற்ற உள்ளம் உடையவர்களும் அன்புடன் சேவிப்பவர்களும் ஆகிய அவர்களுக்கு எதனால் அவர்கள் என்னை அடைவார்களோ அந்த புத்தியோகத்தைக் கொடுக்கிறேன்.

11. அவர்களிடம் அருளாலேயே நான் அவர்கள் உள்ளத்தில் நிலைபெற்றுப் பிரகாசிக்கும் ஞான தீபத்தால் அஞ்ஞானத்தினாலுண்டான இருளை நாசம் செய்கின்றேன்.

அர்ஜுனன் கூறியது—

12-13. நீ பரப்பிரம்மம், உயர்ந்த உறைவிடம், சிறந்த புனிதப் பொருள்; மேலும் எல்லா ரிஷிகளும் தேவரிஷியான நாரதரும் அவ்வாறே அஸிதரும், தேவலரும், வியாசரும், உன்னை என்றுமுள்ள புருஷனாகவும் பிரகாசிக்கும் முதல் தெய்வமாகவும் பிறப்பற்ற கடவுளாகவும் கூறியுள்ளார்கள். நீயும் எனக்கு அவ்வாறே கூறுகிறாய்.

14. கேசவா! எனக்கு எதைக் கூறுகிறாயோ அது அனைத்தையும் உண்மை என்று உணர்கின்றேன். எனினும் பகவானே! உன்னுடைய வடிவத்தைத் தேவர்களும் உணர்ந்தவர்கள் அல்லர், அசுரர்களும் உணர்ந்தவர்கள் அல்லர்.

ஸ்வயமே-வாத்ம-ஞத்மானம் வேத்த த்வம் புருஷோத்தம ।
பூதபாவன பூதேச தேவதேவ ஜகத்பதே ॥ 15 ॥

வக்து-மர்ஹஸ்-யசேஷேண திவ்யா-ஹ்யாத்மவிபூதயঃ ।
யாபிர்-விபூதிபிர்-லோகா-னிமாம்ஸ்-த்வம் வ்யாப்ய
[திஷ்ட்டஸி ॥ 16 ॥

கதம் வித்யா-மஹம் யோகின்ஸ்-த்வாம் ஸதா பரிசிந்தயன் ।
கேஷு கேஷு ச பாவேஷு சிந்த்யோऽஸி பகவன் மயா ॥ 17 ॥

விஸ்தரேணுத்மனே யோகம் விபூதிஞ் ச ஜனர்த்தன ।
பூயঃ கதய த்ருப்திர்-ஹி ச்ருண்வதோ நாஸ்தி மேऽம்ருதம்
॥ 18 ॥

ஸ்ரீ பகவானுவாச—
ஹந்த தே கதமிஷ்யாமி திவ்யா ஹ்யாத்ம-விபூதயঃ ।
ப்ராதான்யதঃ குருச்ரேஷ்ட்ட நாஸ்த்யந்தோ விஸ்தரஸ்ய மே
॥ 19 ॥

15. புருஷோத்தமா! உலகைப் படைப்போனே! உலக நாயகா! தேவர்களின் தெய்வமே! உலகை ஆள்வோனே! நீ நீயாகவே உன்னுல் உன்னை அறிகின்ருய்.

16. எந்தெந்த விபூதிகளால் நீ இவ்வுலகங்களை வியாபித்து நிற்கின்ருயோ திவ்யமான அந்த உன் விபூதிகளைக் குறைவின்றி எனக்கு உரைப்பதற்கு நீ உரியவன் அன்ருே?

17. யோகியே! எப்போதும் ஆழ்ந்து சிந்தித்து யான் எங்ஙனம் உன்னை அறிதல் வேண்டும்? மேலும் பகவானே! என்னுல் எந்தெந்த வஸ்துக்களில் சிந்தித்தற்குறியவனுக நீ உளாய்?

18. ஜனர்த்தன! உன்னுடைய யோக சக்தியையும் விபூதியையும் விரிவாக மறுபடியும் கூறுவாய். ஏனெனில், அமுதத்தைத் செவியாற் பருகும் எனக்குத் திருப்தி உண்டாக வில்லை.

ஸ்ரீ பகவான் கூறியது—

19. நன்று, குருசிரேஷ்டா! தெய்வத் தன்மை விளங்கும் என் விபூதிகளில் முக்கியமானவற்றை எடுத்துக் கூறிகின்றேன். என்னுடைய விபூதிகளின் விரிவுக்கு எல்லையே இல்லை.

அஹமாத்மா குடாகேச ஸர்வபூதாசய-ஸ்த்திதঃ ।
அஹமாதிச்ச மத்த்யஞ் ச பூதாநா-மந்த ஏவ ச 20 ॥

ஆதித்யாநா-மஹம் விஷ்ணுர்-ஜ்யோதிஷாம் ரவி-ரம்சுமான் ।
மரீசிர்-மருதா-மஸ்மி நக்ஷத்ராணா-மஹம் சசீ ॥ 21 ॥

வேதானாம் ஸாமவேதோऽஸ்மி தேவாநா-மஸ்மி வாஸவঃ ।
இந்த்ரியாணாம் மனச்சாஸ்மி பூதாநா-மஸ்மி சேதநா ॥ 22 ॥

ருத்ராணாம் சங்கரச்-சாஸ்மி வித்தேசோ யக்ஷரக்ஷஸாம் ।
வஸூநாம் பாவகச்-சாஸ்மி மேருঃ சிகரிணா-மஹம் ॥ 23 ॥

புரோதஸாஞ் ச முக்க்யம் மாம் வித்தி பார்த்த ப்ருஹஸ்
[பதிம் ।
ஸேநானீநா-மஹம் ஸ்கந்தঃ ஸரஸா-மஸ்மி ஸாகரঃ ॥ 24 ॥

**20.** குடாகேசா! நான் எல்லாப் பிராணிகளின் இரு. தயத்திலும் உள்ளவன். பிராணிகளின் ஆதியும் நடுவும் முடி. யும் நானே!

**21.** நான் ஆதித்யர்களுக்குள் விஷ்ணு, பிரகாசிக்கும் பொருள்களுள் கிரணங்களுடன் கூடிய சூரியன்; மருத் தேவதைகளுள் மரீசியாக இருக்கின்றேன்; நக்ஷத்திரங் களிடையில் நான் சந்திரன்.

**22.** வேதங்களுள் சாமவேதமாய் இருக்கிறேன்; தேவர் களுள் இந்திரனாய் இருக்கிறேன். இந்திரியங்களுள் மனதா யிருக்கிறேன். பிராணிகளிடம் அறிவாயிருக்கிறேன்.

**23.** ருத்திரர்களுள் சங்கரனாக உளேன். யக்ஷராக்ஷஸர் களுள் குபேரனாகவும், வசுக்களுள் அக்கினியாகவும், சிகரம் பொருந்திய மலைகளுக்குள் மேருவாகவும் இருக்கிறேன்.

**24.** பார்த்தா! என்னைப் புரோகிதர்களுக்குள் முக்கிய மான பிருகஸ்பதியாக அறிவாய். சேனாதிபதிகளுக்குள் நான் முருகன்; நீர் நிலைகளுள் சமுத்திரமாக உளேன்.

மஹர்ஷீணும் ப்ருகு-ரஹம் கிரா-மஸ்-ம்யேக-மக்ஷரம் ।
யஜ்ஞாணும் ஜபயஜ்ஞோऽஸ்மி ஸ்த்தாவராணும் ஹிமாலய:
॥ 25 ॥

அச்வத்த: ஸர்வவ்ருக்ஷாணும் தேவர்ஷீணுஞ் ச நாரத: ।
கந்தர்வாணும் சித்ரரத: ஸித்தாணும் கபிலோ முனி: ॥ 26 ॥

உச்சைச்ரவஸ-மச்வாணும் வித்தி மாமம்ருதோத்பவம் ।
ஐராவதம் கஜேந்த்ராணும் நராணுஞ் ச நராதிபம் ॥ 27 ॥

ஆயுதாணு-மஹம் வஜ்ரம் தேனூணு-மஸ்மி காமதுக் ।
ப்ரஜனச்-சாஸ்மி கந்தர்ப்ப: ஸர்ப்பாணு-மஸ்மி வாஸுகி:
॥ 28 ॥

அனந்தச்-சாஸ்மி நாகாணும் வருணே யாதஸா-மஹம் ।
பித்ருணு-மர்யமா சாஸ்மி யம: ஸம்யமதா-மஹம் ॥ 29 ॥

25. நான் மகரிஷிகளுக்குள் பிருகுவாகவும், சொற்களில் ஓரெழுத்து வடிவமான ஓங்காரமாகவும் இருக்கிறேன். யக்ஞங்களில் ஜபயக்ஞமாகவும், அசையாப் பொருள்களில் இமயமலையாகவும் இருக்கிறேன்.

26. மரங்களனைத்துள்ளும் அரசமரம். தேவரிஷிகளுக்குள் நாரதர்; கந்தர்வர்களுக்குள் சித்திரரதன். சித்தர்களுள் கபிலமுனி.

27. குதிரைகளுள் அமுதத்துடனுதித்த உச்சைசிரவசமாகவும் சிறந்த யானைகளுள் ஐராவதமாகவும், மனிதர்களுள் அரசனுகவும் என்னை அறி.

28. ஆயுதங்களுக்குள் நான் வஜ்ராயுதமாகவும், பசுக்களுள் காமதேனுவாகவும் இருக்கிறேன். உற்பத்தியைச் செய்யும் காமதேவனுகவும் இருக்கிறேன். ஸர்ப்பங்களுக்குள் வாசுகியாக இருக்கிறேன்.

29. நாகப்பாம்புகளுக்குள் ஆதிசேஷனுக இருக்கிறேன். நீர்வாழும் உயிர்களுக்குள் நான் வருணன். பிதிரர்களுக்குள் அர்யமாவாகவும், தண்டித்து அடக்குபவருள் யமனுகவும் இருக்கிறேன்.

ப்ரஹ்லாதச்-சாஸ்மி தைத்யானும் காலஃ கலயதா-மஹம் ।
ம்ருகாணுஞ் ச ம்ருகேந்த்ரோऽஹம் வைனதேயச்ச
[பக்ஷிணும் ॥ 30 ॥

பவனஃ பவதாமஸ்மி ராமஃ சஸ்த்ரப்ருதா-மஹம் ।
ஜஷாணும் மகரச்-சாஸ்மி ஸ்ரோதஸா-மஸ்மி ஜாஹ்னவீ
॥ 31 ॥

ஸர்க்காணு-மாதி-ரந்தச்ச மத்த்யஞ்சைவாஹ-மர்ஜுன ।
அத்த்யாத்மவித்யா வித்யானும் வாதஃ ப்ரவததா-மஹம் ॥32॥

அக்ஷராணு-மகாரோऽஸ்மி த்வந்த்வஃ ஸாமாஸிகஸ்ய ச ।
அஹமேவாக்ஷயஃ காலோ தாதாஹம் விச்வதோமுகஃ ॥ 33 ॥

ம்ருத்யுஃ ஸர்வஹரச்-சாஹ-முத்பவச்ச பவிஷ்யதாம் ।
கீர்த்திஃ ஸ்ரீர்-வாக்ச நாரீணும் ஸ்ம்ருதிர்-மேதா த்ருதிஃ
[க்ஷமா ॥ 34 ॥

---

**30.** திதி வம்சத்தவருள் பிரஹ்லாதனுகவும், கணக்கிடு பவர்களிடம் காலமாகவும், நான் இருக்கிறேன். மிருகங்களுக்குள் சிங்கமும் பறவைகளுக்குள் கருடனும் நானே.

**31.** சுத்தம் செய்யும் பொருள்களுள் காற்றுகவும் ஆயுதம் பிடித்தவருள் ராமனுகவும் நான் உளேன். மீன் வகைகளில் மகரமாயுள்ளேன். ஆறுகளில் கங்கையாக உளேன்.

**32.** சிருஷ்டிகளின் அடியும் முடியும் நடுவும் நானே; அர்ஜுனு! வித்தைகளுக்குள் அத்தியாத்ம வித்தையும் வாதஞ் செய்வோரிடம் வாதமும் நானே.

**33.** எழுத்துக்களுள் அகாரமாகவும், ஸமாஸங்களுக்குள் துவந்தமாகவும் இருக்கிறேன். அழிவில்லாத காலமும் நானே. எங்கும் முகமுள்ளவனும் கருமபலனை அளித்துக் காப்பவனும் நானே.

**34.** அனைத்தையுங் கவரும் மரணமும், தோன்றுபவைகளின் உற்பவமும் நானே. ஸ்திரீகளுக்குள் லக்ஷ்மியும் வாக்கு தேவதையான ஸரஸ்வதியும், கீர்த்தி, ஞாபக சக்தி, புத்தி சக்தி, திடச்சித்தம், பொறுமை இவற்றிற்கு அதிஷ்டான தேவதைகளும் நானே.

ப்ருஹத்ஸாம ததா ஸாம்னும் காயத்ரீ ச்சந்தஸா-மஹம் ।
மாஸானும் மார்க்கசீர்ஷோஹம் ருதூனும் குஸுமாகரঃ
॥ 35 ॥

த்யூதஞ் ச்சலயதாமஸ்மி தேஜஸ்-தேஜஸ்வினு-மஹம் ।
ஜயோऽஸ்மி வ்யவஸாயோऽஸ்மி ஸத்வம் ஸத்வவதா-மஹம்
॥ 36 ॥

வ்ருஷ்ணீனும் வாஸுதேவோऽஸ்மி பாண்டவானுந்தனஞ்ஜயঃ
முனீனுமப்-யஹம் வ்யாஸঃ கவீனு-முசனு கவிঃ ॥ 37 ॥

தண்டோ தமயதாமஸ்மி நீதிரஸ்மி ஜிகீஷதாம்
மௌனஞ் சைவாஸ்மி குஹ்யானும் ஜ்ஞானம் ஜ்ஞானவதா-
[மஹம் ॥ 38 ॥

யச்சாபி ஸர்வபூதானும் பீஜம் தத்ஹ-மர்ஜுன ।
ந தத்ஸ்தி விநா யத்ஸ்யான்-மயா பூதம் சராசரம் ॥ 39 ॥

---

**35.** நான் அவ்வாறே ஸாமகானங்களில் பிருஹத்ஸாமம், சந்தங்களுக்குள் காயத்ரீ, மாதங்களுள் மார்கழி, ருதுக்களுக்குள் புஷ்பிக்கும் வசந்த ருது.

**36.** வஞ்சகர்களிடம் சூதாட்டமாகவும் சக்தியுடையவர்களிடம் சக்தியாகவும் நான் இருக்கிறேன். வெற்றியாக இருக்கிறேன். விடாமுயற்சியாக இருக்கிறேன். ஸாத்விகர்களிடம் நான் ஸத்வம்.

**37.** நான் விருஷ்ணி குலத்தவர்களில் வசுதேவபுத்ரனை கிருஷ்ணனுகவும், பாண்டவர்களில் அர்ஜுனனுகவும் முனிவர்களில் வியாசராகவும், கூரிய புத்தியுடையவர்களில் உசனுகவி யெனப் பெயர் பெற்ற சுக்ராசாரியராகவும் உளேன்.

**38.** அடக்கியாள்பவரிடம் அடக்கும் சக்தியாக இருக்கிறேன். ஜயிக்க விரும்புவோர்களிடம் நீதியாக இருக்கிறேன். நான் ரகசியமான விஷயங்களில் மௌனமாகவும், ஞானிகளிடம் ஞானமாகவும் இருக்கிறேன்.

**39.** அர்ஜுனு! எல்லாப் பொருள்களுக்கும் எது வித்தோ அதுவும் நானே. என்னையன்றி அசையும் பொருளோ அசையாப் பொருளோ ஏதேனும் உளதோ வெனில், அது இல்லவே இல்லை.

நாந்தோऽஸ்தி மம திவ்யானாம் விபூதீனாம் பரந்தப ।
ஏஷதூத்தேசதः ப்ரோக்தோ விபூதேர்-விஸ்தரோ மயா ॥40॥

யத்யத் விபூதிமத் ஸத்வம் ஸ்ரீமதூர்ஜித-மேவ வா ।
தத்ததேவாவகச்ச த்வம் மம தேஜோऽம்ச-ஸம்பவம் ॥ 41 ॥

அதவா பஹுனைதேன கிம் ஜ்ஞாதேன தவார்ஜுன ।
விஷ்டப்யாஹ-மிதம் க்ருத்ஸ்ன-மேகாம்சேன ஸ்த்திதோ
[ஜகத் ॥ 42 ॥

இதி ஸ்ரீமத் பகவத்கீதாஸூபநிஷத்ஸு ப்ரஹ்மவித்யாயாம்
யோகசாஸ்த்ரே ஸ்ரீக்ருஷ்ணார்ஜுனஸம்வாதே
விபூதியோகோ நாம தசமோऽத்யாயः ॥

40. பரந்தபா! என்னுடைய தெய்வ சக்தியை விளக்கும் விபூதிகளுக்கு எல்லையில்லை. இங்ஙனம் என்னுடைய விபூதிகளின் விரிவு குறிப்பாகக் கூறப்பட்டது.

41. எந்தெந்த வஸ்து என் விபூதியை விளக்குவதாகவோ லக்ஷ்மீகடாக்ஷம் பொருந்தியதாகவோ, உயர்ந்த சக்தி வாய்ந்ததாகவோ உளதோ, அந்த வஸ்து என்னுடைய சக்தியின் அம்சத்தில் தோன்றியது என்று அறிதல் வேண்டும்.

42. அர்ஜுனா! ஆனால் பலவகைப்பட்ட இதை அறிந்தால் உனக்கு என்ன பயன்? இந்த உலகனைத்தையும்—என் யோக சக்தியின்—ஒரு பகுதியால் தாங்கி நான் நிற்கின்றேன் என்று உணர்.

இங்ஙனம் பிரம்ம வித்தையாயும் யோக சாஸ்திரமாயும்
ஸ்ரீகிருஷ்ணனுக்கும் அர்ஜுனனுக்கும் ஸம்பாஷணையாயும்
விளங்கும் ஸ்ரீமத் பகவத் கீதை என்னும் உபநிஷத்தில்
விபூதியோகம் என்று பெயர் பெற்ற
பத்தாவது அத்தியாயம் முற்றும்.

# பதினோராவது அத்தியாயம்

## (விச்வரூபதர்சன யோகம்)

**அர்ஜுன உவாச—**

மதனுக்ரஹாய பரமம் குஹ்ய-மத்த்யாத்ம-ஸம்ஜ்ஞிதம் ।
யத் த்வயோக்தம் வசஸ்-தேன மோஹோऽயம் விகதோ மம ॥ 1 ॥

பவாப்யயௌ ஹி பூதானாம் ச்ருதௌ விஸ்தரசோ மயா ।
த்வத்தঃ கமலபத்ராக்ஷ மாஹாத்ம்யமபி சாவ்யயம் ॥ 2 ॥

ஏவமேதத் யதாத்த த்வ-மாத்மானம் பரமேச்வர ।
த்ரஷ்டு-மிச்சாமி தே ரூப-மைச்வரம் புருஷோத்தம ॥ 3 ॥

மன்யஸே யதி தச்-சக்யம் மயா த்ரஷ்டுமிதி ப்ரபோ ।
யோகேச்வர ததோ மே த்வம் தர்சயாத்மான-மவ்யயம் ॥ 4 ॥

---

**அர்ஜுனன் கூறியது—**

1. எனக்குக் கருணை செய்யக் கருதி, அதி ரஹஸ்யமானதும் ஆத்ம ஸ்வரூபத்தை நன்கு விளக்குவதுமான, எந்த வார்த்தை உன்னால் சொல்லப்பட்டதோ, அதனால் என்னுடைய இந்த மோகமானது ஒழிந்து போயிற்று.

2. தாமரைக்கண்ணா! உன்னிடமிருந்து உயிர்களின் தோற்றமும் நாசமும் என்னால் விரிவாகக் கேட்கப்பட்டது. அழிவில்லாத உன் பெருமையும் கேட்கப் பட்டது.

3. பரமேசுவரா! எவ்வண்ணம் நீ உன்னை வர்ணித்தாயோ அது அவ்வண்ணமே என உணர்ந்தேன். எனினும் புருஷோத்தமா! உன்னுடைய ஈசுவர வடிவத்தைக் காண்பதற்கும் விரும்புகிறேன்.

4. பிரபுவே! அது என்னால் காண்பதற்குக் கூடும் என்று கருதுவாயேயானால் யோகேசுவரா! நீ எனக்கு அழிவற்ற உன் வடிவைக் காட்டியருள்வாய்.

**ஸ்ரீ பகவானுவாச—**

பச்ய மே பார்த்த ரூபாணி சதசோऽத ஸஹஸ்ரசः ।
நாநாவிதானி திவ்யானி நானாவர்ணாக்ருதீனி ச ॥ 5 ॥

பச்யாதித்யான் வஸூன் ருத்ரா-னச்வினௌ மருதஸ்-ததா ।
பஹூன்-யத்ருஷ்ட-பூர்வாணி பச்யாச்சர்யாணி பாரத ॥ 6 ॥

இஹைகஸ்த்தம் ஜகத் க்ருத்ஸ்னம் பச்யாத்ய ஸசராசரம் ।
மம தேஹே குடாகேச யச்சான்யத் த்ரஷ்டு-மிச்சஸி ॥ 7 ॥

ந து மாம் சக்யஸே த்ரஷ்டு-மனேனைவ ஸ்வ-சக்ஷுஷா ।
திவ்யம் ததாமி தே சக்ஷுः பச்ய மே யோக-மைச்வரம் ॥ 8 ॥

**ஸஞ்ஜய உவாச—**

ஏவமுக்த்வா ததோ ராஜன் மஹா-யோகேச்வரோ ஹரிः ।
தர்சயாமாஸ பார்த்தாய பரமம் ரூபமைச்வரம் ॥ 9 ॥

**ஸ்ரீ பகவான் கூறியது—**

5. பார்த்தா ! என்னுடைய தெய்வத்தன்மை வாய்ந்தனவும் பலவகையானவும் பல நிறங்களும் வடிவங்களுமுடையனவுமாகிய உருவங்களை நூற்றுக்கணக்காகவும் ஆயிரக்கணக்காகவும் பார்.

6. பாரதா ! ஆதித்தியர்களையும் வசுக்களையும் உருத்திரர்களையும் அசுவினி தேவர்களையும் மருத்துக்களையும் பார். முன் காணப்படாத ஆச்சரியங்கள் பலவற்றைப் பார்.

7. அர்ஜுனா ! இங்கு என் சரீரத்தில் ஒன்றுகூடி நிற்கும் அசைவதும் அசையாததுமான உலகம் முழுவதையும், மேலும் வேறு எது எதைப் பார்க்க விரும்புகிறாயோ அதையும் இப்போது பார்.

8. ஆனால், உன்னுடைய இக்கண்களாலேயே என்னைக் காண்பதற்கு உனக்கு இயலாது. உனக்கு திவ்யமான பார்வையைக் கொடுக்கிறேன்; என்னுடைய ஈசுவரத்தன்மையை விளக்கும் யோகத்தைப் பார்.

**ஸஞ்ஜயர் கூறியது—**

9. திருதராஷ்டிர மகாராஜா ! யோகத்திற்கு மகேசுவரனாகிய ஹரி இவ்வாறு கூறிப் பிறகு பார்த்தனுக்கு உயர்ந்த ஈசுவர வடிவத்தைக் காட்டியருளினார்.

அநேக வக்த்ர-நயன-மநேகாத்புத-தர்சனம் ।
அநேக திவ்யாபரணம் திவ்யா-நேகோத்யதாயுதம் ॥ 10 ॥

திவ்ய-மால்யாம்பர-தரந் திவ்ய-கந்தானுலேபனம் ।
ஸர்வாச்சர்யமயந் தேவம் அனந்தம் விச்வதோமுகம் ॥ 11 ॥

திவி ஸூர்ய-ஸஹஸ்ரஸ்ய பவேத்-யுகப-துத்திதா ।
யதி பாঃ ஸத்ருசீ ஸா ஸ்யாத் பாஸஸ்-தஸ்ய மஹாத்மனঃ
॥ 12 ॥

தத்ரைகஸ்த்தம் ஜகத் க்ருத்ஸ்னம் ப்ரவிபக்த-மனேகதா ।
அபச்யத்-தேவதேவஸ்ய சரீரே பாண்டவஸ்-ததா ॥ 13 ॥

ததঃ ஸ விஸ்மயாவிஷ்டோ ஹ்ருஷ்டரோமா தனஞ்ஜயঃ ।
ப்ரணம்ய சிரஸா தேவம் க்ருதாஞ்ஜலி-ரபாஷத ॥ 14 ॥

**10.** அவ்வடிவம் பல முகங்களும் கண்களும் உடையது. அற்புதக் காட்சிகள் நிறைந்தது ; திவ்யமான பல ஆபரணங்களணிந்தது ; திவ்யமான பல ஆயுதங்களை ஏந்தியது.

**11.** திவ்யமான மாலைகளும் ஆடைகளுமணிந்தது; திவ்யமான களபம் பூசியது ; எல்லாவகை ஆச்சரியங்களும் நிறைந்தது ; பிரகாசமானது ; அளவற்றது ; எங்கும் முகமுள்ளது.

**12.** வானத்தில் ஆயிரம் சூரியர்களின் பிரகாசம் ஒருங்கு கூடி உதிக்குமேயானல், அந்த மஹாபுருஷனுடைய பிரகாசத்துக்கு ஒப்பாக இருக்கும்.

**13.** அப்பொழுது பாண்டவன்அங்கே தேவதேவனுடைய சரீரத்தில் பலவகையாய் வகுக்கப்பட்ட உலகனைத்தும் ஒன்று கூடி நிற்கக் கண்டான்.

**14.** பின் தனஞ்ஜயன் பெருவியப்படைந்து புளகாங்கிதனய் அந்த தேவனைச் சிரத்தால் வணங்கி அஞ்ஜலி செய்து கூறலுற்றன்.

**அர்ஜுன உவாச—**

பச்யாமி தேவான்ஸ்-தவ தேவ தேஹே
 ஸர்வான்ஸ்-ததா பூதவிசேஷ-ஸங்க்கான் ।
ப்ரஹ்மாண-மீசங் கமலாஸனஸ்த்தம்
 ருஷீம்ச்ச ஸர்வா-னுரகாம்ச்ச திவ்யான் ॥ 15 ॥

அனேக-பாஹூதரவக்த்ர-நேத்ரம்
 பச்யாமி த்வாம் ஸர்வதோऽனந்த-ரூபம் ।
நாந்தம் ந மத்ஷ்யம் ந புனஸ்-தவாதிம்
 பச்யாமி விச்வேச்வர விச்வரூப ॥ 16 ॥

கிரீடினங் கதினஞ் சக்ரிணஞ் ச
 தேஜோராசிம் ஸர்வதோ தீப்திமந்தம் ।
பச்யாமி த்வாம் துர்நிரீக்ஷ்யம் ஸமந்தாத்
 தீப்தானலார்க்க-த்யுதி-மப்ரமேயம் ॥ 17 ॥

**அர்ஜுனன் கூ!**

**15.** தேவா! உன்னுடைய தேகத்தில் எல்லாத் தேவர்களேயும் பலவகை உயிர்த்தொகுதிகளேயும், தாமரையில் வீற்றிருக்கும் ஈசனுகிய பிரம்மாவையும் எல்லா ரிஷிகளேயும் தெய்வீகம் வாய்ந்த ஸர்ப்பங்களேயும் பார்க்கின்றேன்.

**16.** உலகிற்கிறைவா! உலக வடிவானவனே! பலபுயங்கள் வயிறுகள் வாய்கள் கண்கள் உடையவனும் எல்லேயற்ற உருவுடையவனுமாகிய உன்னே எவ்விடத்தும் காண்கிறேன். உன்னுடைய முடிவையும் நடுவையும் அடியையும் நான் காண

**17.** கிரீடந்தரித்து கதையேந்தி சக்கரந்தாங்கி எங்குஞ் பிரகாசிக்கும் ஒளிப்பிழம்பாகிக் காணுதற்குக் கூசுவதாய்க் கொழுந்து விட்டெரியும் தீப்போலும் சூரியன்போலும் ஒளிர்வதாய், அளவிடுதற்கரியதாய் உள்ள உன்னேச் சுற்றிலும், எல்லாவிடத்தும் காண்கிறேன்.

த்வமக்ஷரம் பரமம் வேதிதவ்யம்
　　த்வமஸ்ய விச்வஸ்ய பரம் நிதானம் ।
த்வமவ்யயஃ **சாச்வத-தர்ம-கோப்தா**
　　ஸனாதனஸ்-த்வம் புருஷோ மதோ மே　　॥ 18 ॥

அனாதி-மத்த்யாந்த-மனந்த வீர்ய-
　　மனந்தபாஹும் **சசி**-ஸூர்ய நேத்ரம் ।
பச்யாமி த்வாம் தீப்தஹுதாச-வக்த்ரம்
　　ஸ்வதேஜஸா விச்வமிதம் தபந்தம்　　॥ 19 ॥

த்யாவா-ப்ருதிவ்யோ-ரித-மந்தரம் ஹி
　　வ்யாப்தம் த்வயைகேன திசச்ச ஸர்வாஃ ।
த்ருஷ்டவாத்புதம் ரூபமுக்ரம் தவேதம்
　　லோகத்ரயம் ப்ரவ்யதிதம் மஹாத்மன்　　॥ 20 ॥

அமீ ஹி த்வாம் ஸூரஸங்க்**கா** விசந்தி
　　கேசித்-பீதாஃ ப்ராஞ்ஜலயோ க்ருணந்தி ।
ஸ்வஸ்தீத்-யுக்த்வா மஹர்ஷி-ஸித்த-ஸங்க்காஃ
　　ஸ்துவந்தி த்வாம் ஸ்துதிபிஃ புஷ்கலாபிஃ　　॥ 21 ॥

---

18. நீ அழிவற்றவன், அறிதற்குரிய பரம்பொருள். நீ இவ்வுலகிற்கு எல்லையான இருப்பிடம். நீ மாறுபாடில்லாதவன், சாசுவதமான தர்மத்தின் காவலன், ஆதிபுருஷன் என்பது என் துணிபு.

19. ஆதிநடுவந்தமில்லாதவனும் எல்லையற்ற சக்தியுடையவனும் எண்ணிறந்த புயங்களையுடையவனும், சந்திர சூரியர்களை நேத்திரங்களாயுடையவனும், பிரகாசிக்கும் அக்கினியை வாயாகவுடையவனும் தன்னொளியால் இவ்வுலகை எரிப்பவனும் ஆகிய உன்னைக் காண்கிறேன்.

20. மகாத்மாவே! வானுக்கும் மண்ணுக்கும் இடையிலுள்ள இந்தப் பெருவெளி ஒருவனாகிய உன்னாலேயே நிறைந்துள்ளது. எல்லாத் திசைகளுங்கூட அவ்வாறே. உன்னுடைய அற்புதமான இந்த உக்கிர வடிவைக் கண்டு மூவுலகும் பயத்தால் நடுங்குகிறது.

21. இந்த தேவக் கூட்டங்கள் உன்னிடம் புகுகின்றன. சிலர் அஞ்சிக் கையைக் கூப்பியவர்களாய் உன்னைத் துதிக்

ருத்ராதித்யா வஸவோ யே ச ஸாத்த்யா
விச்வேசவினௌ மருதச்சோஷ்மபாச்ச ।
கந்தர்வ-யக்ஷாஸுர-ஸித்தஸங்க்கா
வீக்ஷந்தே த்வாம் விஸ்மிதாச்சைவ ஸர்வே ॥ 22 ॥

ரூபம் மஹத் தே பஹுவக்த்ர-நேத்ரம்
மஹாபாஹோ பஹு பாஹூருபாதம் ।
பஹூதரம் பஹு-தம்ஷ்ட்ராகராலம்
த்ருஷ்ட்வா லோகா: ப்ரவ்யதிதாஸ்-ததாஹம் ॥ 23 ॥

நப: ஸ்ப்ருசம் தீப்த-மனேக-வர்ணம்
வ்யாத்தானனம் தீப்த-விசால-நேத்ரம் ।
த்ருஷ்ட்வா ஹி த்வாம் ப்ரவ்யதிதாந்தராத்மா
த்ருதிம் ந விந்தாமி சமஞ்ச விஷ்ணோ 24 ॥

கின்றனர். மஹரிஷி சித்தகணங்கள் வாழி என்று கூறிச் சிறந்த புகழ்களால் உன்னைத் துதிக்கின்றார்கள்.

**22.** உருத்திரர்களும் ஆதித்யர்களும் வசுக்களும் ஸாத்தியர்களும் விசுவேதேவாகளும் அசுவினி தேவர்களும் மருத்துக்களும் ஊஷ்மகரென்ற பிதிரர்களும், கந்தர்வர், யக்ஷர், அசுரர், சித்தர் முதலியோர் கூட்டங்களும், எல்லாருமே வியப்புற்று உன்னைப் பார்க்கிறார்கள்.

**23.** நெடுந்தோளா! பல முகங்களுங் கண்களுமுடையதும் பல தோள்களும் தொடைகளும் பாதங்களுமுடையதும் வயிறுகளுடையதும் பல தெற்றிப் பற்களுடையதுமான உன்னுடைய பேருருவைப் பார்த்து உலகங்கள் பயத்தால் அலந்திருக்கின்றன. நானும் அவ்வாறே.

**24.** விஷ்ணுவே! வான்முகட்டைத் தொடுபவனும், ஒளி வீசுபவனும் பல வர்ணங்களுடையவனும் திறந்த வாய்களுடையவனும் கனல் வீசும் அகன்ற கண்களுடையவனுமான உன்னைப் பார்த்து நடுங்கிய உள்ளமுடைய நான் தைரியத்தையும் அமைதியையும் காணவில்லை.

தம்ஷ்ட்ராகராலானி ச தே முகானி
த்ருஷ்ட்வைவ காலானல-ஸந்நிபானி ।
திசோ ந ஜானே ந லபே ச சர்ம
ப்ரஸீத தேவேச ஜகந்நிவாஸ ॥ 25 ॥

அமீ ச த்வாம் த்ருதராஷ்ட்ரஸ்ய புத்ராஃ
ஸர்வே ஸஹைவாவனிபால-ஸங்க்கைஃ ।
பீஷ்மோ த்ரோணஃ ஸூதபுத்ரஸ்-ததாஸௌ
ஸஹாஸ்மதீயை-ரபி யோத முக்க்யைஃ ॥ 26 ॥

வக்த்ராணி தே த்வரமாணு விசந்தி
தம்ஷ்ட்ராகராலானி பயானகானி ।
கேசித் விலக்ளு தசனுந்தரேஷு
ஸந்த்ருச்யந்தே சூர்ணிதை-ருத்தமாங்கைஃ ॥ 27 ॥

யதா நதீனும் பஹவோऽம்பு-வேகாஃ
ஸமுத்ர-மேவாபிமுகா த்ரவந்தி ।
ததா தவாமீ நரலோக-வீரா
விசந்தி வக்த்ராண்-யபிவிஜ்வலந்தி ॥ 28 ॥

---

**25.** தேவர்களுக்கிறைவா! தெற்றிப் பற்களையுடையன வும், ஊழிக்கனல் போன்றனவுமான உன்னுடைய வாய்களைப் பார்த்த மாத்திரத்தாலே திக்குத் திசைகளை நான் காண வில்லை. மனவமைதியையும் அடையவில்லை. உலகின் உறை விடமானவனே! அருள் செய்வாய்.

**26.** உலகாளும் மன்னர்கூட்டங்களுடனே திருதராஷ்டிர னுடைய புத்திரர்கள் அனைவரும், பீஷ்மர் துரோணர் ஸூத புத்திரனுன கர்ணன் நம்மவர்களான் யுத்தவீரர்களுடனுங் கூட;

**27.** பரபரப்புடையவர்களாய் உன்னுடைய தெற்றிப் பற் களையுடைய பயங்கரமான வாய்களில் புகுகின்றனர். சிலர் சூர்ணமான தலைகளுடன் பற்களினிடைப்பட்டுக் காணப்படு கின்றனர்.

**28** எவ்வண்ணம் நதிகளில் திரண்டோடும் வெள்ளங் கள் ஸமுத்திரத்தையே நோக்கி ஓடுகின்றனவோ, அவ்

யதா ப்ரதீப்தம் ஜ்வலனம் பதங்கா
விசந்தி நாசாய ஸம்ருத்தவேகா: |
ததைவ நாசாய விசந்தி லோகாஸ்-
தவாபி வக்த்ராணி ஸம்ருத்த-வேகா: || 29 ||

லேலிஹ்யஸே க்ரஸமான: ஸமந்தாத்
லோகான் ஸமக்ரான் வதனைர்-ஜ்வலத்பி: |
தேஜோபி-ராபூர்ய ஜக்த்-ஸமக்ரம்
பாஸஸ்-தவோக்ரா: ப்ரதபந்தி விஷ்ணோ || 30 ||

ஆக்க்யாஹி மே கோ பவானுக்ரரூபோ
நமோஸ்து தே தேவவர ப்ரஸீத |
விஜ்ஞாது-மிச்சாமி பவந்த-மாத்யம்
ந ஹி ப்ரஜானாமி தவ ப்ரவ்ருத்திம் || 31 ||

**ஸ்ரீ பகவானுவாச—**

காலோऽஸ்மி லோகக்ஷயக்ருத் ப்ரவ்ருத்தோ
லோகான் ஸமாஹர்த்து-மிஹ ப்ரவ்ருத்த: |

---

வண்ணமே இந்த மானிட உலக வீரர் எப்புறமும் கனல் பொங்கும் உன் வாய்களில் புகுகின்றனர்.

29. எவ்வண்ணம் விட்டிற் பூச்சிகள் மிகுந்த வேகத்துடன் நாசமடைவதற்கு சுடர் விட்டெரியும் தீயில் புகுகின்றனவோ, அவ்வண்ணம் மிகுந்த வேகத்துடன் உலகத்துயிர்களும் நாசமடைவதற்கே உன் வாய்களில் புகுகின்றன.

30. கனல் வீசும் வாய்களால் உலகங்களனைத்தையும் விழுங்கி எத்திசையிலும் நாவால் நக்கித் துளாவுகிறாய். விஷ்ணுவே! உன்னுடைய கடுமையான கிரணங்கள் கனலால் உலகனைத்தையும் சூழ்ந்து எரிக்கின்றன.

31. பயங்கரமான உருவுடைய நீ யார்? எனக்கு சொல். உனக்கு நமஸ்காரம், தேவ சிரேஷ்டனே! அருள் புரிவாய். ஆதியாகிய உன்னை அறிவதற்கு விரும்புகிறேன். உன்னுடைய செய்கையை உண்மையில் நான் உணரவில்லை.

ருதேऽபி த்வாம் ந பவிஷ்யந்தி ஸர்வே
யேऽவஸ்த்திதாঃ ப்ரத்யனீகேஷு யோதாঃ ॥ 32 ॥

தஸ்மாத் த்வமுத்திஷ்ட யசோ லபஸ்வ
ஜித்வா சத்ரூன் புங்க்ஷ்வ ராஜ்யம் ஸம்ருத்தம் ।
மயைவைதே நிஹதாঃ பூர்வமேவ
நிமித்த-மாத்ரம் பவ ஸவ்யஸாசின் ॥ 33 ॥

த்ரோணஞ் ச பீஷ்மஞ் ச ஜயத்ரதஞ் ச
கர்ண[illegible] யோதவீரான் ।
மயா ஹதான்ஸ்-த்வம் ஜஹி மா வ்யதிஷ்ட்டா
யுத்த்யஸ்வ ஜேதாஸி ரணே ஸபத்னான் ॥ 34 ॥

ஸஞ்ஜய உவாச—

ஏதச்-ச்ருத்வா வசனம் கேசவஸ்ய
க்ருதாஞ்ஜலிர்-வேபமானঃ கிரீடீ ।
நமஸ்க்ருத்வா பூய ஏவாஹ க்ருஷ்ணம்
ஸகத்கதம் பீதபீதঃ ப்ரணம்ய ॥ 35 ॥

---

**ஸ்ரீ பகவான் கூறியது—**

32. உலகை அழிக்கும் வலிமையுடைய காலன் நான். உலகங்களை ஒடுக்குதற்கு இங்கு உற்றேன். நீ இல்லாமலுங் கூட எதிரிச் சேனைகளில் கூடியுள்ள போர்வீரர்கள் எல்லோரும் அழிவார்கள்.

33. ஆகையால் நீ எழுந்திரு. புகழை அடை. பகைவர்களை ஜெயித்துச் செல்வம் நிறைந்த ராஜ்யத்தை அனுபவி. என்னாலேயே முன்பே இவர்கள் கொல்லப்பட்டவராவர். இடது கையாலும் அம்பெய்தும் வீரா! நீ நிமித்த மாத்திரமாக இருப்பாய்.

34. என்னால் கொல்லப்பட்ட துரோணரையும் பீஷ்மரையும் ஜயத்ரதனையும் கர்ணனையும் மற்ற போர்வீரர்களையும் நீ கொல்வாய், வருந்தாதே. யுத்தத்தில் எதிரிகளை ஜயிப்பாய். போர் புரி.

**ஸஞ்ஜயர் கூறியது—**

35. கேசவனுடைய இந்த வார்த்தையைக் கேட்டு நடுக்கமுடையவனாய், அர்ஜுனன் கைகூப்பி நமஸ்கரித்து மிகப் பயந்து வணங்கி, மீண்டும் தழுதழுத்த குரலில் கிருஷ்ணனை நோக்கிக் கூறலுற்றான்.

**அர்ஜுன உவாச—**

ஸ்த்தானே ஹ்ருஷீகேச தவப்ரகீர்த்யா
ஜகத் ப்ரஹ்ருஷ்யத்யனுரஜ்யதே ச ।
ரக்ஷாம்ஸி பீதானி திசோ த்ரவந்தி
ஸர்வே நமஸ்யந்தி ச ஸித்தஸங்க்காஃ ॥ 36 ॥

கஸ்மாச்ச தே ந நமேரன் மஹாத்மன்
கரீயஸே ப்ரஹ்மணோऽப்யாதிகர்த்ரே ।
அனந்த தேவேச ஜகந்நிவாஸ
த்வமக்ஷரம் ஸதஸத்-தத்பரம் யத் ॥ 37 ॥

த்வமாதிதேவঃ புருஷঃ-புராணஸ்
த்வமஸ்ய விச்வஸ்ய பரம் நிதானம் ।
வேத்தாஸி வேத்யஞ் ச பரஞ் ச தாம
த்வயா ததம் விச்வ-மனந்தரூப 38

**அர்ஜுனன் கூறியது—**

36. கிருஷ்ணு, உன்னுடைய புகழைப் பேசுவதால் உலகம் களிக்கின்றது. ஆனந்தத்தையும் அடைகிறது. ராக்ஷஸக் கூட்டங்கள் பயந்தவைகளாய்த் திசை நோக்கி ஓடுகின்றன. சித்தர் கணங்களெல்லாம் வணங்குகின்றனர். இது பொருத்தமே.

37. பெரியோனே! அளவிறந்தோனே! தேவர்களிறைவா! உலகின் உறைவிடமே! பிரம்மாவுக்கும் பெரியவனும், முதற் காரணமும் ஆகியவனுகிய உனக்கு ஏன் அவர்கள் வணக்கம் செய்யமாட்டார்கள்? அழியாப் பொருளும் உண்மையும் இன்மையும் அப்பாலுள்ளதும் எதுவோ அதுவும் நீயே.

38. எல்லையில்லா உருவுடையோனே! நீ ஆதிதேவன், பழைய புருஷன், நீ இவ்வுலகிற்கு மேலான உறைவிடம். யாவும் அறிபவனுகவும், அறியப்படும் பொருளாகவும், எல்லை நிலமாகவும் இருக்கின்றுய். உன்னுல் உலகம் நிரம்பியுள்ளது.

வாயுர்-யமோऽக்னிர்-வருணஃ சசாங்கஃ
ப்ரஜாபதிஸ்-த்வம் ப்ரபிதாமஹச்ச ।
நமோ நமஸ்தேऽஸ்து ஸஹஸ்ர-க்ருத்வஃ
புனச்ச பூயோऽபி நமோ நமஸ்தே ॥ 39 ॥

நமஃ புரஸ்தா-தத ப்ருஷ்ட்டதஸ்தே
நமோऽஸ்து தே ஸர்வத ஏவ ஸர்வ ।
அனந்த-வீர்யாமித-விக்ரமஸ்-த்வம்
ஸர்வம் ஸமாப்னோஷி ததோऽஸி ஸர்வஃ ॥ 40 ॥

ஸகேதி மத்வா ப்ரஸபம் யதுக்தம்
ஹே க்ருஷ்ண ஹே யாதவ ஹே ஸகேதி ।
அஜானதா மஹிமானம் தவேதம்
மயா ப்ரமாதாத் ப்ரணயேன வாபி ॥ 41 ॥

யச்சாவஹாஸார்த்த-மஸத்-க்ருதோऽஸி
விஹார-சய்யாஸன-போஜனேஷு ।
ஏகோऽதவாப்-யச்யுத தத்ஸமக்ஷம்
தத்-க்ஷாமயே த்வா-மஹ-மப்ரமேயம் ॥ 42 ॥

---

39 நீயே வாயு, யமன், அக்னி, வருணன், சந்திரன், பிரஜாபதி, பிரம்மாவுக்குத் தந்தை, உனக்கு மீண்டும் மீண்டும் நமஸ்காரம் உரித்தாகுக. ஆயிரம் முறையும் அதற்கு மேலும் அதிகமாகவும் உனக்கு நமஸ்காரங்கள்.

40. அனைத்துமாவோனே! உனக்கு முன்னும் பின்னும் நமஸ்காரம். உனக்கு எல்லாப் பக்கங்களிலும் நமஸ்காரம். அளவிலாத வீரியமுடையவனும், அளவிலாத பராக்ரம முடையவனும் நீ; எல்லாவற்றையும் வியாபிக்கின்றாய; எல்லாம் ஆகின்றாய்.

41-42. உன்னுடைய இந்தப் பெருமையை அறியாத என்னால் மதிக்குறைவாலோ அன்பின் உரிமையாலோ, நண்பன் என்று கருதி அடே கிருஷ்ணா! அடே யாதவா! அடே நண்பா! என்று துடுக்காக எது சொல்லப்பட்டதோ; கிருஷ்ணா! விளையாட்டிலும் படுக்கையிலும் உட்கார்ந்திருக்கையிலும், உண்ணுகையிலும் ஒருவனாகவோ அல்லது பிற ருடன் கூடியிருக்கையிலோ, வேடிக்கைக்காக நீ என்னால்,

பிதாஸி லோகஸ்ய சராசரஸ்ய
த்வமஸ்ய பூஜ்யச்ச குருர்-கரீயான் ।
ந த்வத்-ஸமோ஽ஸ்த்-யப்ப்யதிகஃ குதோ஽ன்யோ
லோகத்ரயே஽ப்-யப்ரதிம-ப்ரபாவ ॥ 43 ॥

தஸ்மாத் ப்ரணம்ய ப்ரணிதாய காயம்
ப்ரஸாதயே த்வா-மஹ-மீச-மீட்யம் ।
பிதேவ புத்ரஸ்ய ஸகேவ ஸக்க்யுஃ
ப்ரியஃ ப்ரியாயார்ஹஸி தேவ ஸோடும் ॥ 44 ॥

அத்ருஷ்டபூர்வம் ஹ்ருஷிதோ஽ஸ்மி த்ருஷ்ட்வா
பயேன ச ப்ரவ்யதிதம் மனோ மே ।
ததேவ மே தர்சய தேவரூபம்
ப்ரஸீத தேவேச ஜகந்நிவாஸ ॥ 45 ॥

எப்பெப்போது அவமதிக்கப்பட்டுள்ளாயோ அதையெல்லாம் அளவிடுதற்கரிய பெருமையுள்ள நீ மன்னித்தருளும்படி வேண்டுகிறேன்.

43. ஒப்புயர்வில்லாத பெருமை வாய்ந்தவனே ! நீ அசைவதும் அசையாததுமாகிய உலகிற்குத் தகப்பன் ஆகிறாய். பூஜித்தற்குரியவனும் பெரியவர்களுக்குப் பெரியவனும் ஆகின்றாய். மூவுலகிலும் உனக்குச் சமமானவர் இல்லை; மேலானவர் எங்ஙனம்?

44. தேவா ! ஆகையால் என் உடலை உன் அடியிற் கிடத்தி நமஸ்கரித்துப் பூஜித்தற்குரிய இறைவனாகிய உன்னை இறைஞ்சுகின்றேன். மகன் பிழையைத் தந்தையைப்போலும், நண்பன் பிழையை நண்பன்போலும், காதலியின் பிழையைக் காதலன் போலும், பொறுத்தருளுதல் வேண்டும்.

45. தேவா! முன்பு காணாததைக் கண்டு மகிழ்ச்சி பொங்குபவனாய் இருக்கின்றேன். பயத்தாலும் என்னுடைய மனம் குழம்பியிருக்கின்றது. உனது இயற்கையான உருவத்தையே மீண்டும் எனக்குக் காட்டுவாய். தேவர்க்கு ஈசனே, உலகின் உறைவிடமே, கருணை செய்வாய்.

கிரீடினம் கதினஞ் சக்ரஹஸ்தம்
இச்சாமி த்வாம் த்ரஷ்டு-மஹம் ததைவ।
தேனைவ ரூபேண சதுர்ப்புஜேன
ஸஹஸ்ரபாஹோ பவ விச்வமூர்த்தே ‖ 46 ‖

ஸ்ரீ பகவானுவாச—

மயா ப்ரஸன்னேன தவார்ஜுனேதம்
ரூபம் பரம் தர்சித-மாத்ம-யோகாத் ।
தேஜோமயம் விச்வ-மனந்த-மாத்யம்
யன்மே த்வதன்யேன ந த்ருஷ்டபூர்வம் ‖ 47 ‖

ந வேத-யஜ்ஞாத்த்யயனைர்-ந தானைர்-
ந ச க்ரியாபிர்-ந தபோபி-ருக்ரைः ।
ஏவம் ரூபः சக்ய அஹம் ந்ருலோகே
த்ரஷ்டும் த்வதன்யேன குருப்ரவீர ‖ 48 ‖

மா தே வ்யதா மா ச விமூட-பாவோ
த்ருஷ்ட்வா ரூபம் கோர-மீத்ருங்-மமேதம் ।
வ்யபேதபீः ப்ரீதமனாः புனஸ்-த்வம்
ததேவ மே ரூபமிதம் ப்ரபச்ய ‖ 49 ‖

---

46. நான் உன்னைக் கிரீடந்தரித்து கதைபிடித்துச் சக்கரம் கையில் ஏந்தினவனாய்க் காண விரும்புகிறேன். ஆயிரம் தோள்களை உடையவனே! உலகம் நிறைந்த வடிவினனே! நான்கு கைகளுடைய உருவமுடையவனாக ஆவாய்.

ஸ்ரீ பகவான் கூறியது—

47. அர்ஜுனா! அன்புடன் கூடிய என்னால் எனது யோக ஐசுவரிய சக்தியால் உனக்கு இந்த ஒளி நிறைந்ததும் எல்லை இல்லாததும் முதன்மையானதுமான என்னுடைய உயர்ந்த விசுவரூபம், உன்னைத் தவிர எவராலும் முன் காணப் படாதது காட்டப்பட்டது.

48. குருவம்சத்துப் பெருவீரா! இவ்வுலகில் நான் உன்னைத் தவிர எவராலும் மனித உலகில் காண்பதற்கு உரியவனன்று. வேதத்தையும் வேள்விமுறையையும் ஓதுவதாலும் நான் அடையக்கூடியவன் அன்று, தானங்களாலும் அன்று, கிரியைகளாலு மன்று, கடுந் தவங்களாலு மன்று.

49. இம்மாதிரி பயங்கரமான என்னுடைய இந்த வடிவத்தைப் பார்த்தும் உனக்குப் பயம் வேண்டாம். கலக்கமும்

**ஸஞ்ஜய உவாச—**

இத்யர்ஜுனம் வாஸுதேவஸ்-ததோக்த்வா
ஸ்வகம் ரூபம் தர்சயாமாஸ பூய: ।
ஆச்வாஸயாமாஸ ச பீதமேனம்
பூத்வா புன: ஸௌம்ய-வபுர்-மஹாத்மா ॥ 50 ॥

**அர்ஜுன உவாச—**

த்ருஷ்ட்வேதம் மானுஷம் ரூபம் தவ ஸௌம்யம் ஜனார்த்தன ।
இதானீ-மஸ்மி ஸம்வ்ருத்த: ஸசேதா: ப்ரக்ருதிம் கத: ॥ 51 ॥

**ஸ்ரீபகவானுவாச—**

ஸுதுர்தர்ச-மிதம் ரூபம் த்ருஷ்டவானஸி யன்-மம
தேவா அப்யஸ்ய ரூபஸ்ய நித்யம் தர்சன-காங்க்ஷிண: ॥ 52 ॥

நாஹம் வேதைர்-ந தபஸா ந தானேன ந சேஜ்யயா ।
சக்ய ஏவம்-விதோ த்ரஷ்டும் த்ருஷ்டவானஸி மாம் யதா ॥ 53 ॥

---

வேண்டாம். பயத்தைவிட்டு ஸந்தோஷமுடையவனாய் மறுபடியும் நீ என்னுடைய முன்வடிவத்தையே காண்பாயாக.

**ஸஞ்ஜயர் கூறியது—**

50. வாசுதேவன் அர்ஜுனனை நோக்கி இங்ஙனம் கூறி மீண்டும் அவ்வாறே தனக்குரிய உருவத்தைக் காட்டியருளினான். பெரியோன் இன்னுருவனாகி மறுபடியும் பயந்திருந்த இவனை இன்னுரை கூறித் தேற்றினான்.

**அர்ஜுனன் கூறியது—**

51. கிருஷ்ணா! உன்னுடைய இந்த இனிய மனித வடிவத்தைப் பார்த்து இப்போது நான் மனத் தெளிவைப் பெற்றவனாய் இயற்கையான தன்மையை எய்தினவனாய் உளேன்.

**ஸ்ரீ பகவான் கூறியது—**

52. காணற்கு மிகவரிய என்னுடைய எந்த (தேவ) உருவத்தை கண்ணுற்றாயோ அந்த உருவத்தைத் தேவர்கள் எப்போதும் காண்பதற்கு அவாவுடையவராயிருக்கின்றனர். ஆனால் உன்னைப்போலக் கண்டதில்லை.

53 எவ்வாறு (எனது தேவ வடிவை) நீ கண்டனையோ அவ்வாறு நான் வேதங்களால் காண்பதற்குக் கூடியவனன்று; தவத்தாலும் அன்று; தானத்தாலுமன்று; வேள்வியாலுமன்று.

பக்த்யா த்வனன்யயா சக்ய அஹ-மேவம் விதோऽர்ஜுன ।
ஜ்ஞாதும் த்ரஷ்டுஞ் ச தத்வேன ப்ரவேஷ்டுஞ் ச பரந்தப ‖ 54 ‖

மத்கர்ம-க்ருன் மத்பரமோ மத்பக்தஃ ஸங்கவர்ஜிதஃ ।
நிர்வைரஃ ஸர்வபூதேஷு யஃ ஸ மாமேதி பாண்டவ ‖ 55 ‖

இதி ஶ்ரீமத் பகவத்கீதாஸூபநிஷத்ஸு ப்ரஹ்மவித்யாயாம்
யோகசாஸ்த்ரே ஶ்ரீக்ருஷ்ணார்ஜுனஸம்வாதே
விச்வரூபதர்சனயோகோ நாம
ஏகாதசோऽத்த்யாயஃ ‖

---

54. எதிரிகளை எரிப்பவனே! அர்ஜுனா! வேறு நாட்டமற்ற பக்தியாலேயே இவ்வாறு நான் உண்மையில் அறிவதற்கும் காண்பதற்கும் அளவளாவிக் கூடுதற்கும் உரியவன்.

55. பாண்டவா! என் பணி செய்பவனும் என்னையே அனைத்தினும் மேலாகக் கருதுபவனும் என்னிடம் பக்தி செய்பவனும் (வேறு எதிலும்) பற்றற்றவனும் எவ்வுயிர்களிடத்தும் வைரமில்லாதவனும் உள்ளவன் எவனோ அவன் என்னை அடைகிறான்.

இங்ஙனம் பிரம்ம வித்தையாயும் யோக சாஸ்திரமாயும்
ஸ்ரீ கிருஷ்ணனுக்கும் அர்ஜுனனுக்கும் ஸம்பாஷணையாயும்
விளங்கும் ஸ்ரீமத் பகவத்கீதை என்னும் உபநிஷத்தில்
விசுவரூப தரிசனம் என்று பெயர் பெற்ற
பதினோராவது அத்தியாயம் முற்றும்.

## பன்னிரண்டாம் அத்தியாயம்

## (பக்தி யோகம்)

அர்ஜுன உவாச—

ஏவம் ஸதத-யுக்தா யே பக்தாஸ்-த்வாம் பர்யுபாஸதே ।
யே சாப்யக்ஷர-மவ்யக்தம் தேஷாம் கே யோகவித்தமா꞉ ॥ 1 ॥

ஸ்ரீபகவானுவாச—

மய்யாவேச்ய மனோ யே மாம் நித்யயுக்தா உபாஸதே ।
ச்ரத்தயா பரயோபேதாஸ்-தே மே யுக்ததமா மதா꞉ ॥ 2 ॥

யே த்வக்ஷர-மநிர்த்தேச்ய-மவ்யக்தம் பர்யுபாஸதே ।
ஸர்வத்ரக-மசிந்த்யஞ் ச கூடஸ்த்த-மசலந் த்ருவம் ॥ 3 ॥

ஸந்நியம்யேந்த்ரிய-க்ராமம் ஸர்வத்ர ஸமபுத்தய꞉ ।
தே ப்ராப்னுவந்தி மாமேவ ஸர்வபூத-ஹிதே ரதா꞉ ॥ 4 ॥

---

அர்ஜுனன் கூறியது—

1. இவ்வாறு நிலைபெற்ற மனத்தினராய் எந்தப் பக்தர்கள் உன்னை நன்கு உபாசிக்கின்றனரோ, மேலும் எவர்கள் இந்திரியங்களுக்குப் புலனாகாத அக்ஷரப்பொருளை உபாசிக்கின்றனரோ அவ்விருவகையினருள் எவர்கள் யோகத்தை நன்குணர்ந்தவர்கள் ?

ஸ்ரீ பகவான் கூறியது——

2. என்னிடத்தில் மனத்தை வைத்து நிலைபெற்ற மனத்தினராய் உயர்ந்த சிரத்தையுடன் கூடியவர்களாய் எவர்கள் என்னை உபாஸிக்கின்றார்களோ அவர்கள் யோகத்தை நன்குணர்ந்தவர்கள் என்று கருதப்படுவர்.

3-4. எனினும் எல்லாவிடத்தும் ஸமபுத்தியுடையவர்களாய் இந்திரியக் கூட்டத்தை நன்கு அடக்கிச் சொல்லுக்கடங்காததாயும் கண்ணுக்கு விளங்காததாயும் மனதுக்கெட்டாததாயும் எங்குமுள்ளதாயும் மாறுதலற்றதாயும் அசைவற்றதாயும் நிலைபெற்றதாயும் உள்ள அழியாப் பொருளை

க்லேசோऽதிகதரஸ்-தேஷா-மவ்யக்தாஸக்த-சேதஸாம் ।
அவ்யக்தா ஹி கதிர்-துঃக்கம் தேஹவத்பி-ரவாப்யதே ॥ 5 ॥

யே து ஸர்வாணி கர்மாணி மயி ஸந்ந்யஸ்ய மத்பராঃ ।
அனன்யேனைவ யோகேன மாம் த்யாயந்த உபாஸதே ॥ 6 ॥

தேஷா-மஹம் ஸமுத்தர்த்தா ம்ருத்யு-ஸம்ஸார-ஸாகராத் ।
பவாமி ந சிராத் பார்த்த மய்யாவேசித-சேதஸாம் ॥ 7 ॥

மய்யேவ மன ஆதத்ஸ்வ மயி புத்திம் நிவேசய ।
நிவஸிஷ்யஸி மய்யேவ அத ஊர்த்த்வம் ந ஸம்சயঃ । ॥ 8 ॥

அத சித்தம் ஸமாதாதும் ந சக்னோஷி மயி ஸ்த்திரம் ।
அப்யாஸயோகேன ததோ மாமிச்சாப்தும் தனஞ்ஜய ॥ 9 ॥

எவர்கள் நன்கு தியானிக்கின்றனர்களோ, எல்லாவுயிரும் இன்புற்றிருக்க நினைக்கும் அவர்களும் என்னையே அடைகிறார்கள்.

5. அவ்வியக்தப் பொருளில் நாட்டங்கொண்ட அவர்களுக்குச் சிரமம் அதிகம். உடற் பற்றுடையோருக்கு அவ்வியக்த நெறி மிகவும் கஷ்டமானது.

6. ஆனால் எவர்கள் எல்லாக் கருமங்களையும் என்னிடத்தில் ஸமர்ப்பித்து என்னையே உயர் பொருளாய்க் கொண்டு மற்றொன்றைச் சாராத யோகத்தால் என்னையே தியானித்து உபாஸிக்கின்றனர்களோ ;

7. அங்ஙனம் என்னிடம் நிலைபெற்ற மனமுடைய அவர்களைச் சாவுடன் கூடிய சம்சாரக் கடலினின்று சீக்கிரத்தில், அர்ஜுனா ! நான் கரையேற்றிக் காப்பவனாய் ஆகின்றேன்.

8. என்னிடத்திலேயே மனத்தை நிறுத்து ; என்னிடத்தில் புத்தியை வைத்திடு ; அதன்பின் என்னிடத்திலே உறைவாய். ஐயமில்லை.

9. அர்ஜுனா ! ஆனால் என்னிடத்துச் சித்தத்தை உறுதியாக நிறுத்துதற்குச் சக்தியில்லையாயின் அப்போது அப்யாச யோகத்தால் என்னை அடைதற்கு விரும்பு.

அப்ப்யாஸே஽ப்-யஸமர்த்தோ஽ஸி மத்கர்ம-பரமோ பவ ।
மதர்த்தமபி கர்மாணி குர்வன் ஸித்தி-மவாப்ஸ்யஸி ॥ 10 ॥

அதைததப்-யசக்தோ஽ஸி கர்த்தும் மத்யோக- மாச்ரிதঃ ।
ஸர்வகர்ம-பல த்யாகம் ததঃ குரு யதாத்மவான் ॥ 11 ॥

ச்ரேயோ ஹி ஜ்ஞான-மப்ப்யாஸாத் ஜ்ஞானாத் த்யானம்
[விசிஷ்யதே ।
த்த்யானாத் கர்மபல-த்யாகஸ்-த்யாகாச் சாந்தி-ரனந்தரம்
॥ 12 ॥

அத்வேஷ்டா ஸர்வபூதானாம் மைத்ரঃ கருண ஏவ ச ।
நிர்மமோ நிரஹங்காரঃ ஸமதுঃக்கஸுகঃ க்ஷமீ ॥ 13 ॥

ஸந்துஷ்டঃ ஸததம் யோகீ யதாத்மா த்ருடநிச்சயঃ ।
மய்யர்ப்பித-மனோ-புத்திர்-யோ மத்பக்தঃ ஸ மே ப்ரியঃ ॥ 14 ॥

---

**10.** அப்யாஸத்திலும் திறமையில்லையாயின் எனக்காகவே கருமம் செய்பவனாய் ஆவாய்; எனக்காகக் கருமங்களைச் செய்தாலும் சித்தியை அடைவாய்.

**11.** மேலும் இதைச் செய்யக்கூடச் சக்தி இல்லை ஆயின் என்னிடம் சரண்புகுதலிலேயே நாட்டமுடையவனாய், அடங்கிய மனத்தினனாய் எல்லாக் கருமங்களின் பயனையும் எனக்கு அர்ப்பணம் செய்வாய்.

**12.** அப்பியாஸத்தை விட ஞானம் சிறந்ததாம். ஞானத்திலும் தியானம் சிறந்ததாம். தியானத்தைவிடக் கருமபலனைத்துறத்தல் சிறந்ததாம். துறவினால் அதிசீக்கிரத்தில் சாந்தி உண்டாகிறது.

**13-14.** எவ்வுயிர்களிடத்தும் பகைமை இல்லாதவனாய்ச் சினேகம் பூண்டவனாய்க் கருணையே உடையவனாய், என்னுடையது என்னுமெண்ணமில்லாதவனாய், இன்பத்தையும் துன்பத்தையும் சமமாய்க் கருதுபவனாய்ப் பொறுமை உடையவனாய், எப்போதும் ஸந்தோஷம் உடையவனாய், யோகத்தில் நாட்டமுடையவனாய், அடங்கிய மனத்தினனாய், திடமான நிச்சயமுடையவனாய், என்னிடத்தில் மனத்தையும் புத்தியையும் அர்ப்பணம் செய்தவனாய், எவன் என் பக்தனாய் உள்ளவனோ அவன் எனக்குப் பிரியமானவன்.

யஸ்மாந்-நோத்விஜதே லோகோ லோகாந்-நோத்விஜதே ச ய:।
ஹர்ஷாமர்ஷ-பயோத்வேகைர்-முக்தோ ய: ஸ ச மே ப்ரிய:
॥ 15 ॥

அனபேக்ஷ: சுசிர்-தக்ஷ உதாஸீனோ கதவ்யத:
ஸர்வாரம்ப-பரித்யாகீ யோ மத்பக்த: ஸ மே ப்ரிய: ॥ 16 ॥

யோ ந ஹ்ருஷ்யதி ந த்வேஷ்டி ந சோசதி ந காங்க்ஷதி ।
சுபாசுப-பரித்யாகீ பக்திமான் ய: ஸ மே ப்ரிய: ॥ 17 ॥

ஸம: சத்ரௌ ச மித்ரே ச ததா மானாபமானயோ: ।
சீதோஷ்ண-ஸுகது:க்கேஷு ஸம: ஸங்கவிவர்ஜித: ॥ 18 ॥

15. எவனிடமிருந்து உலகம் துன்புறுவதில்லையோ, எவன் உலகத்திடமிருந்து துன்புறுவதில்லையோ, எவன் மகிழ்ச்சி, சினம், அச்சம், மனக்கிளர்ச்சி இவற்றினின்று விடுபட்டவனோ அவன் எனக்குப் பிரியமானவன்.

16. எதையும் வேண்டாதவனாய்ப் பரிசுத்தனாய்த் திறமையுடையவனாய் ஒரு பக்ஷத்தைச் சாராதவனாய் மனத்துயரொழிந்தவனாய் எல்லாக் காமிய கருமங்களையுந் துறந்தவனாய் எவன் எனது பக்தனாய் உள்ளவனோ அவன் எனக்குப் பிரியமானவன்.

17. எவன் மகிழ்வதில்லையோ, வெறுப்பதில்லையோ, துயரப்படுவதில்லையோ, ஆசைப்படுவதில்லையோ எவன் நல்லவையுந் தீயவையும் ஆன கருமங்களனைத்தையும் விட்டவனோ; பக்திமானோ அவன் எனக்குப் பிரியமானவன்.

18. பகைவனிடத்தும் நண்பனிடத்தும் மானத்திலும் அவமானத்திலும் சமமானவனும், குளிரிலும் வெப்பத்திலும், சுகத்திலும் துக்கத்திலும் சமமானவனும் பற்றற்றவனும் எவனோ;

துல்ய-நிந்தாஸ்துதிர்-மௌனீ ஸந்துஷ்டோ யேன-கேனசித்।
அனிகேதஃ ஸ்த்திரமதிர்-பக்திமான் மே ப்ரியோ நரஃ ॥ 19 ॥

யே து தர்ம்யாம்ருத-மிதம் யதோக்தம் பர்யுபாஸதே ।
ச்ரத்ததானா மத்பரமா பக்தாஸ்-தேऽதீவ மே ப்ரியாஃ ॥ 20 ॥

இதி ஸ்ரீமத் பகவத்கீதாஸூபநிஷத்ஸு ப்ரஹ்மவித்யாயாம்
யோகசாஸ்த்ரே ஸ்ரீக்ருஷ்ணார்ஜுனஸம்வாதே
பக்தியோகோ நாம த்வாதசோऽத்த்யாயஃ ॥

---

19. இகழ்ச்சியையும் புகழ்ச்சியையும் ஒன்றாகக் கொள்பவனையும் மௌனியாயும் எதைக் கொண்டும் ஸந்தோஷம் அடைபவனையும் இருப்பிடம் இல்லாதவனையும் திடச்சித்தம் உடையவனையும் பக்திமானையும் உள்ள மனிதன் எவனோ அவன் எனக்குப் பிரியமானவன்.

20. நிச்சயமாக எவர்கள் தருமத்தினின்று வழுவாததும் அழியாததுமான இம்மார்க்கத்தை இங்கே கூறியவண்ணம் நன்கு அனுஷ்டிக்கின்றார்களோ, சிரத்தை உடையவர்களும் என்னையே உயர்பொருளாய்க் கொண்டவர்களும் பக்தர்களுமான அவர்கள் எனக்கு மிகவும் பிரியமானவர்கள்.

இங்ஙனம் பிரம்ம வித்தையாயும் யோக சாஸ்திரமாயும்
ஸ்ரீகிருஷ்ணனுக்கும் அர்ஜுனனுக்கும் ஸம்பாஷணையாயும்
விளங்கும் ஸ்ரீமத் பகவத் கீதை என்னும் உபநிஷத்தில்
பக்தியோகம் என்று பெயர் பெற்ற
பன்னிரண்டாம் அத்தியாயம் முற்றும்.

## பதின்மூன்றும் அத்தியாயம்

## (க்ஷேத்ரக்ஷேத்ரஜ்ஞ விபாக யோகம்)

ஸ்ரீ பகவானுவாச—

இதம் சரீரம் கௌந்தேய க்ஷேத்ர-மித்-யபிதீயதே।
ஏதத் யோ வேத்தி தம் ப்ராஹு: க்ஷேத்ரஜ்ஞ இதி தத்வித:॥ 1 ॥

க்ஷேத்ரஜ்ஞஞ் சாபி மாம் வித்தி ஸர்வக்ஷேத்ரேஷு பாரத।
க்ஷேத்ர-க்ஷேத்ரஜ்ஞயோர் ஜ்ஞானம் யத்தத் ஜ்ஞானம் மதம் மம ॥ 2 ॥

தத் க்ஷேத்ரம் யச்ச யாத்ருக் ச யத்விகாரி யதச்ச யத் ।
ஸ ச யோ யத்ப்ரபாவச்ச தத் ஸமாஸேன மே ச்ருணு ॥ 3 ॥

ருஷிபிர்-பஹுதா கீதம் ச்சந்தோபிர்-விவிதை: ப்ருதக் ।
ப்ரஹ்மஸூத்ர-பதைச்சைவ ஹேதுமத்பிர்-விநிச்சிதை: ॥ 4 ॥

ஸ்ரீ பகவான் கூறியது—

1. அர்ஜுனா! இந்த உடல் க்ஷேத்ரம் என்று கூறப்படுகின்றது. எவன் இதை அறிகின்றானோ அவனை க்ஷேத்ரஜ்ஞன் என்று அதை உணர்ந்தவர்கள் கூறுவர்.

2. அர்ஜுனா! எல்லா க்ஷேத்ரங்களிலும் என்னையே க்ஷேத்ரஜ்ஞனாகவும் அறிவாய். க்ஷேத்ரத்தையும் க்ஷேத்ரஜ்ஞனையும் பற்றிய ஞானம் எதுவோ அதுவே ஞானம் என்பது என்னுடைய அபிப்பிராயம்.

3. அந்த க்ஷேத்ரம் எது என்றும் எவ்வகைத் தென்றும், என்ன வேறுபாடுடையதென்றும் எதிலிருந்து தோன்றியதென்றும், அந்த க்ஷேத்ரஜ்ஞனும் யார் என்றும் எத்திறத்தினன் என்றும் சுருக்கமாக என்னிடம் கேள்.

4. ரிஷிகளால் பலவிதமாக பாடப்பட்டுள்ளது இவ்வுண்மை; வேதங்களால் பல வழிகளில் தனித்தனியாகவும் பாடப்பட்டுள்ளது. நிர்ணயப்படுத்துவதும் காரணங்களுடன் கூடியதும் பிரம்மத்தைச்சுட்டிக் காட்டுவதுமான சொற்களாலும் அவ்வாறே விளக்கப்பட்டுள்ளது.

மஹாபூதான்-யஹங்காரோ புத்தி-ரவ்யக்த-மேவ ச ।
இந்த்ரியாணி தசைகஞ் ச பஞ்ச சேந்த்ரிய-கோசராஃ ॥ 5 ॥
இச்சா-த்வேஷஃஸுகம் துஃக்கம் ஸங்க்காதச்சேதனாத்ருதிஃ।
ஏதத் க்ஷேத்ரம் ஸமாஸேன ஸவிகார-முதாஹ்ருதம் ॥ 6 ॥
அமானித்வ-மதம்பித்வ-மஹிம்ஸா க்ஷாந்தி-ரார்ஜவம் ।
ஆசார்யோபாஸநம் சௌசம் ஸ்த்தைர்ய-மாத்ம-விநிக்ரஹஃ ॥ 7 ॥
இந்த்ரியார்த்தேஷு வைராக்ய-மனஹங்கார ஏவ ச ।
ஜன்ம-ம்ருத்யு-ஜரா- வ்யாதி-துஃக்க-தோஷானுதர்சனம் ॥8॥
அஸக்தி-ரனபிஷ்வங்கஃ புத்ர-தார-க்ருஹாதிஷு ।
நித்யஞ் ச ஸமசித்தத்வ-மிஷ்டாநிஷ்டோபபத்திஷு ॥ 9 ॥
மயி சானன்யயோகேன பக்தி-ரவ்யபிசாரிணீ ।
விவிக்ததேச-ஸேவித்வ-மரதிர்-ஜனஸம்ஸதி ॥ 10 ॥

---

5. மகா பூதங்களும் அகங்காரமும், புத்தியும் அவ்வியக்தமும், பதினோரிந்திரியங்களும், ஐந்து இந்திரிய விஷயங்களும்,

6. விருப்பு வெறுப்பு, இன்ப துன்பம், பூதக் கூட்டமாகிய உடல், உயிர் அல்லது ஜீவனசக்தி, தாரணசக்தி என்ற இத் தொகுதி, வேறுபாடுகளுடன், க்ஷேத்திரம் என்று சுருக்கமாகக் கூறப்படும்.

7. தற்பெருமையின்மை, இடம்பமின்மை, அஹிம்ஸை, பொறுமை, நேர்மை, குருவின் பணிவிடை, தூய்மை, விடா முயற்சி தன்னடக்கம்;

8. இந்திரிய விஷயங்களில் விருப்பமின்மை, அஹங்காரமின்மை, பிறப்பு, இறப்பு, மூப்பு, பிணி, துன்பம் இவற்றிலுள்ள தீமைகளைச் சிந்தித்தல்;

9. மக்கள், மனையாள், மனை முதலியவற்றில் பற்றின்மை, அபிமானமின்மை, இஷ்டமுள்ளதும் இஷ்டமில்லாததும் வாய்த்தபோது எக்காலத்தும் ஸமசித்தம்;

10. என்னிடத்தும் வேறொன்றைக் கருதாத யோகத்தால் முறை பிறழாத பக்தி, தூய்மையான தனியிடத்தில் நாட்டம், ஜனக்கூட்டத்தில் வெறுப்பு;

அத்த்யாத்மஜ்ஞான-நித்யத்வம் தத்வஜ்ஞானார்த்த-தர்சனம்
ஏதத் ஜ்ஞானமிதி ப்ரோக்த-மஜ்ஞானம் யததோऽன்யதா
॥ 11 ॥

ஜ்ஞேயம் யத்தத் ப்ரவக்ஷ்யாமி யத்-ஜ்ஞாத்வாம்ருத-மச்
[னுதே ।
அனாதிமத் பரம் ப்ரஹ்ம ந ஸத்தந்-நாஸ-துச்யதே । ॥ 12 ॥

ஸர்வதஃ பாணிபாதம் தத் ஸர்வதோऽக்ஷி-சிரோ-முகம் ।
ஸர்வதஃ ச்ருதிமல்-லோகே ஸர்வ-மாவ்ருத்ய திஷ்ட்டதி ॥ 13 ॥

ஸர்வேந்த்ரிய-குணாபாஸம் ஸர்வேந்த்ரிய-விவர்ஜிதம் ।
அஸக்தம் ஸர்வப்ருத் சைவ நிர்க்குணம் குணபோக்த்ரு ச

பஹி-ரந்தச்ச பூதானா-மசரஞ் சரமேவ ச । [॥ 14 ॥
ஸூக்ஷ்மத்வாத் ததவிஜ்ஞேயம் தூரஸ்த்தஞ் சாந்திகே ச
[ தத் ॥ 15 ॥

---

11. ஆத்ம ஞானத்தில் நிலைபெறுதற்கு விடாமுயற்சி, உண்மைப் பொருளின் ஆராய்ச்சி, ஆகிய ஈதெல்லாம் ஞானம் என்று கூறப்படும். இதினின்று வேறானது அஜ்ஞானம்.

12. எது அறியத் தக்கதோ, எதை அறிந்து சாகாத்தன்மையை ஒருவன் அடைகிறானோ அதை இனிக் கூறுகிறேன். ஆதியில்லாதது, உயர்ந்தது; பிரம்மம் எனப்படுவது; அது உளதென்பதுவுமன்று, இலதென்பதுவுமன்று.

13. அது எங்கும் கைகால்களையுடையது; எங்கும் கண்ணுந் தலையும் வாயுமுடையது; எங்கும் காதுகளை உடையது; உலகம் அனைத்தையும் வியாபித்து நிற்பது.

14. இந்திரியங்களனைத்தின் செயலாலுந் துலங்குவதாயினும், இந்திரியங்களனைத்து மில்லாததாயும், பற்றற்றதாயினும் அனைத்தையும் பற்றித் தாங்குவதாயும், குணங்களற்றதாயினும், குணங்களை யனுபவிப்பதாயும்;

15. பொருள்களுக்கு வெளியாகவும் உள்ளாகவும் அசையும் பொருளாகவும் அசையாப் பொருளாகவும் சூக்ஷ்மத் தன்மையால் அறிதற்கு முடியாததாயும் உளது. அது தூரத்திலுள்ளதாயினும் அருகிலேயுள்ளது.

அவிபக்தஞ் ச பூதேஷு விபக்தமிவ ச ஸ்த்திதம் ।
பூதபர்த்ரு ச தத்-ஜ்ஞேயம் க்ரஸிஷ்ணுப்ரபவிஷ்ணு ச ॥ 16 ॥

ஜ்யோதிஷாமபி தத் ஜ்யோதிஸ்-தமஸঃ பரமுச்யதே ।
ஜ்ஞானம் ஜ்ஞேயம் ஜ்ஞான-கம்யம் ஹ்ருதி ஸர்வஸ்ய
[விஷ்டிதம் ॥ 17 ॥

இதி க்ஷேத்ரம் ததாஜ்ஞானம் ஜ்ஞேயஞ் சோக்தம் ஸமாஸதঃ
மத்பக்த ஏதத்-விஜ்ஞாய மத்பாவாயோபபத்யதே ॥ 18 ॥

பரக்ருதிம் புருஷஞ் சைவ வித்த்யனாதீ உபாவபி ।
விகாராம்ச்ச குணாம்ச்சைவ வித்தி ப்ரக்ருதி-ஸம்பவான்
॥ 19 ॥

கார்ய-காரண-கர்த்ருத்வே ஹேதுঃ ப்ரக்ருதி-ருச்யதே ।
புருஷঃ ஸுகதுঃக்கானாம் போக்த்ருத்வே ஹேது-ருச்யதே
॥ 20 ॥

---

16. பொருள்களில் பிரிவுபடாததாயினும் பிரிவு பட்டது போல் நிற்பதாயும், பொருள்களைத் தாங்குவதாயும், விழுங்குவதாயினும் படைப்பதாயும், அது அறியத்தக்கது.

17. அது ஜோதிகளுக்குங்கூட ஜோதியாயும், இருளுக்கு அப்பாற்பட்டதாயும் சொல்லப்படுகிறது. அறிவாயும் அறியத்தக்கதாயும் அறிவினுல் அடையவேண்டிய பொருளாயும் எல்லோருடைய இருதயத்திலும் நிலையுள்ளதாயும் விளங்குவது அது.

18. இங்ஙனம் க்ஷேத்ரமும் அவ்வாறே ஞானமும் ஞேயமும் சுருக்கமாகக் கூறப்பட்டது. என் பக்தன் இதை நன்குணர்ந்து என் நிலைமைக்கு உரியவன் ஆகின்றுன்.

19. பிரகிருதியும் புருஷனும் ஆகின்ற இரண்டு தத்துவங்களையும் ஆதியில்லாதவை என்று உணர்வாய். வெவ்வேருன தோற்றங்களும் குணங்களும் பிரகிருதியினின்று பிறந்தனவாக உணர்வாய்.

20. காரியமாகிற தத்துவங்களையும் காரணமாகிற தத்துவங்களையும் தோற்றுவிப்பதின் ஏதுவாக பிரகிருதியானது கூறப்படுகிறது; இன்பதுன்பங்களின் அனுபவத்தின் ஏதுவாகப் புருஷன் கூறப்படுகிருன்.

புருஷ: ப்ரக்ருதிஸ்த்தோ ஹி புங்க்தே ப்ரக்ருதிஜான்
[குணான் ।
காரணம் குணஸங்கோऽஸ்ய ஸதஸத்யோனிஜன்மஸு ॥21॥

உபத்ரஷ்டானுமந்தா ச பர்த்தா போக்தா மஹேச்வர: ।
பரமாத்மேதி சாப்யுக்தோ தேஹேऽஸ்மின் புருஷ: பர: ॥22॥

ய ஏவம் வேத்தி புருஷம் ப்ரக்ருதிஞ் ச குணை: ஸஹ ।
ஸர்வதா வர்த்தமானோऽபி ந ஸ பூயோऽபிஜாயதே ॥ 23 ॥

த்யானே-னாத்மனி பச்யந்தி கேசிதாத்மான-மாத்மனா ।
அன்யே ஸாங்க்யேன யோகேன கர்மயோகேன சாபரே
॥ 24 ॥

அன்யே த்வேவ-மஜானந்த: ச்ருத்வான்யேப்ய உபாஸதே ।
தேऽபி சாதிதரந்த்யேவ ம்ருத்யும் ச்ருதிபராயணா: ॥ 25 ॥

---

**21.** உண்மையில் புருஷன் பிரகிருதியிலிருந்துகொண்டு பிரகிருதியிற் பிறந்த குணங்களைப் புசிக்கின்றான். இவனுக்கு நல்லதும் கெட்டதும் ஆகிய யோனிகளில் பிறத்தற்குக் குணப் பற்றே காரணமாகின்றது.

**22.** பார்ப்பவனுக்கு மேல் நின்று பார்ப்பவனாகவும் நினைப்பவனுக்குப்பின் நின்று நினைப்பவனாகவும் தாங்குபவனாகவும் அனுபவிப்பவனாகவும் ஆளும் இறைவனுக்கும் இறைவனாகவும், பரமாத்மா என்று கூறப்படுபவனாகவும் உள்ளவன் இச்சரீரத்தில் வேறாக உள்ள புருஷன்.

**23.** எவன் இவ்வாறு புருஷனையும் குணங்களுடன் கூடிய பிரகிருதியையும் உணர்கின்றானோ அவன் எந்நெறியில் வாழ்பவனாயினும் மீண்டும் பிறப்பதில்லை.

**24.** சிலர் தியானத்தால் உள்ளத்தில் தாமாகவே ஆத்மாவைக் காண்கின்றனர்; வேறு சிலர் ஸாங்கிய யோகத்தாலும் மற்றுஞ் சிலர் கர்ம யோகத்தாலும் காண்கின்றனர்.

**25.** சிலர் இவ்வாறு உணராதவர்களாயினும் பிறரிடம் இருந்து உபதேசம் பெற்று உபாசிக்கின்றனர். அவர்களுங் கூட உபதேசத்தையே உயர் கதியாய்க் கொண்டவர்களாய் ஸம்ஸாரத்தை நிச்சயமாய்க் கடக்கின்றனர்.

யாவத் ஸஞ்ஜாயதே கிஞ்சித் ஸத்வம் ஸ்த்தாவர-ஜங்கமம் ।
க்ஷேத்ரக்ஷேத்ரஜ்ஞ-ஸம்யோகாத் தத் வித்தி பரதர்ஷப ॥26॥

ஸமம் ஸர்வேஷு பூதேஷு திஷ்ட்டந்தம் பரமேச்வரம் ।
விநச்யத்-ஸ்வவிநச்யந்தம் யঃ பச்யதி ஸ பச்யதி ॥ 27 ॥

ஸமம் பச்யன் ஹி ஸர்வத்ர ஸமவஸ்த்தித-மீச்வரம் ।
ந ஹிநஸ்த்-யாத்மனாத்மாநம் ததோ யாதி பராங் கதிம் ॥28॥

ப்ரக்ருத்யைவ ச கர்மாணி க்ரியமாணானி ஸர்வசঃ ।
யঃ பச்யதி ததாத்மான-மகர்த்தாரம் ஸ பச்யதி ॥ 29 ॥

யதா பூத-ப்ருதக்பாவ-மேகஸ்த்த-மனுபச்யதி ।
தத ஏவ ச விஸ்தாரம் ப்ரஹ்ம ஸம்பத்யதே ததா ॥ 30 ॥

அனாதித்வாந்-நிர்குணத்வாத் பரமாத்மாய-மவ்யயঃ ।
சரீரஸ்த்தோऽபி கௌந்தேய ந கரோதி ந லிப்யதே ॥ 31 ॥

26. அர்ஜுனா! அசையாப் பொருளாயினும் அசையும் பொருளாயினும் இருப்புள்ளது எது எது தோன்றுகின்றதோ அது க்ஷேத்ரமும் க்ஷேத்ரஜ்ஞனும் கூடுதலால் என்று அறி.

27. எல்லாப் பொருள்களிலும் ஸமமாக நிலைபெற்றுள்ளவனும் அழியும் பொருள்களில் அழியாமலுள்ளவனும் ஆகிய பரமேசுவரனை எவன் பார்க்கின்றானோ அவனே பார்க்கின்றான்.

28. அவன் உண்மையில் எங்கும் ஸமமாக நிலைத்து நிற்பவனாகிய ஈசுவரனைக்கண்டு தன்னால் தன்னை அழிக்காதவனாகின்றான். அதனால் உயர்நிலையை எய்துகின்றான்.

29. பிரகிருதியினாலேயே கருமங்களனைத்தும் செய்யப்படுகின்றன என்று எவன் காண்கின்றானோ அவன் அவ்வாற்றாலே ஆத்மாவைச் செயலற்றதாகக் காண்கின்றான்.

30. எப்போது பூதங்களின் வேற்றுமை யெல்லாம் ஒரே ஆத்மாவிடம் ஒன்றுபட்டு ஒடுங்குவதையும் அனுபவத்தால் காண்கின்றானோ அப்போது பிரம்மமாகவே ஆகின்றான்.

31. அர்ஜுனா! ஆரம்பம் இலாததாலும் குணமிலாததாலும் இந்த அழிவில்லாத பரமாத்மா சரீரத்திலிருப்பினும் ஒன்றும் செய்வதுமில்லை, ஒன்றிலும் பற்றுவதும் இல்லை.

யதா ஸர்வகதம் ஸௌக்ஷ்ம்யா-தாகாசம் நோபலிப்யதே ।
ஸர்வத்ராவஸ்த்திதோ தேஹே ததாத்மா நோபலிப்யதே ॥32॥

யதா ப்ரகாசயத் யேகஃ க்ருத்ஸ்நம் லோக-மிமம் ரவிஃ ।
க்ஷேத்ரம் க்ஷேத்ரீ ததா க்ருத்ஸ்நம் ப்ரகாசயதி பாரத ॥33॥

க்ஷேத்ர-க்ஷேத்ரஜ்ஞயோ-ரேவ-மந்தரம்-ஜ்ஞானசக்ஷுஷா ।
பூத-ப்ரக்ருதி-மோக்ஷஞ் ச யே விதுர்- யாந்தி தே பரம் ॥34॥

இதி ஶ்ரீமத் பகவத்கீதாஸூபநிஷத்ஸூ ப்ரஹ்மவித்யாயாம்
யோகசாஸ்த்ரே ஶ்ரீக்ருஷ்ணார்ஜுனஸம்வாதே
க்ஷேத்ர-க்ஷேத்ரஜ்ஞ விபாகயோகோ நாம
த்ரயோதசோऽத்யாயஃ ॥

---

32. எவ்வாறு எங்கும் நிறைந்த ஆகாயம் ஸூக்ஷ்மத் தன்மையால் களங்கமடைவதில்லையோ, அவ்வாறே ஆத்மா வானது உடலில் எங்கும் நிறைந்துறையினும் களங்கமடைவதில்லை.

33. அர்ஜுனா! எவ்வாறு ஒரே சூரியன் இந்த உலகனைத்தையும் பிரகாசிப்பிக்கின்றானோ அவ்வாறே க்ஷேத்திரியான ஆத்மா க்ஷேத்ரமாகிய உருவனைத்தையும் பிரகாசிப்பிக்கின்றது.

34. இவ்வாறு க்ஷேத்ரத்துக்கும் க்ஷேத்ரஜ்ஞனுக்கும் வேற்றுமையையும், தோன்றிய ப்ரபஞ்சம் பிரகிருதியில் ஒடுங்கி மறைதலையும் எவர்கள் ஞானக்கண்ணால் காண்பவரோ அவர்கள் பரப்பிரம்ம நிலையை எய்துகின்றனர்.

இங்ஙனம் பிரம்ம வித்தையாயும் யோக சாஸ்திரமாயும் ஸ்ரீகிருஷ்ணனுக்கும் அர்ஜுனனுக்கும் ஸம்பாஷணையாயும் விளங்கும் ஸ்ரீமத் பகவத் கீதை என்னும் உபநிஷத்தில் க்ஷேத்ரக்ஷேத்ரஜ்ஞ விபாக யோகம் என்று பெயர் பெற்ற பதின்மூன்றும் அத்தியாயம் முற்றும்.

---

## பதினுன்காம் அத்தியாயம்

### ( குணத்ரயவிபாக யோகம் )

**ஸ்ரீ பகவானுவாச—**

பரம் பூயః ப்ரவக்ஷ்யாமி ஜ்ஞானுனும் ஜ்ஞான-முத்தமம் ।
யத் ஜ்ஞாத்வா முனயః ஸர்வே பராம் ஸித்தி-மிதோ கதாః ‖ 1 ‖

இதம் ஜ்ஞான-முபாச்ரித்ய மம ஸாதர்ம்ய-மாகதாः ।
ஸர்க்கேऽபி நோபஜாயந்தே ப்ரலயே ந வ்யதந்தி ச ‖ 2 ‖

மம யோனிர்-மஹத்-ப்ரஹ்ம தஸ்மின் கர்ப்பம் ததாம்யஹம் ।
ஸம்பவः ஸர்வபூதானும் ததோ பவதி பாரத ‖ 3 ‖

ஸர்வயோநிஷு கௌந்தேய மூர்த்தயः ஸம்ப்பவந்தி யாः ।
தாஸாம் ப்ரஹ்ம மஹத்-யோனி-ரஹம் பீஜப்ரதः பிதா ‖ 4 ‖

---

**ஸ்ரீ பகவான் கூறியது——**

1. எதை அறிந்து எல்லா முனிவர்களும் இவ்வுடலின் உறவு நீங்கிய பின்னர் உயர்ந்த சித்தியை அடைந்தனரோ, ஞானங்களுள் உயர்ந்ததும் பரம்பொருளேப் பற்றியதும் ஆன அந்த ஞானத்தை மீண்டும் விரித்துரைப்பேன்.

2. இந்த ஞானத்தைப் பின்பற்றி என்னுடைய ஸ்வரூபத்தை அடைந்தவர்கள் சிருஷ்டியிலும் பிறப்பதில்லே, பிரளயத்திலும் துன்புறுவதில்லே.

3. அர்ஜுன ! என்னுடைய க்ஷேத்ரம் எல்லாவற்றையும் தன்னுள் தாங்குவதான மூலப்பிரகிருதி. அதில் நான் கர்ப்பத்தை வைக்கின்றேன். அதினின்று எல்லா உயிர்களின் உற்பத்தியும் உண்டாகின்றது.

4. அர்ஜுன ! பலவகை யோனிகளிலும் எந்தெந்த உருவங்கள் பிறக்கின்றனவோ அவைகட்கெல்லாம் "மஹத்" என்னும் பெரும் பிரகிருதியே பிறப்பிடமாகிய க்ஷேத்ரம் அல்லது தாய், நானே கர்ப்பாதானம் செய்யும் தகப்பன்.

ஸத்வம் ரஜஸ்-தம இதி குணுः ப்ரக்ருதி-ஸம்ப்பவாः ।
நிபத்த்னந்தி மஹாபாஹோ தேஹே தேஹின-மவ்யயம் ॥ 5 ॥

தத்ர ஸத்வம் நிர்மலத்வாத் ப்ரகாசக-மனுமயம் ।
ஸுகஸங்கேன பத்த்னுதி ஜ்ஞானஸங்கேன சாநக ॥ 6 ॥

ரஜோ ராகாத்மகம் வித்தி த்ருஷ்ணு-ஸங்க ஸமுத்பவம் ।
தந்-நிபத்த்னுதி கௌந்தேய கர்மஸங்கேன தேஹினம் ॥ 7 ॥

தமஸ்த்-வஜ்ஞானஜம் வித்தி மோஹனம் ஸர்வதேஹினும் ।
ப்ரமாதாலஸ்ய-நித்ராபிஸ்-தந்நிபத்த்னுதி பாரத । ॥ 8 ॥

ஸத்வம் ஸுகே ஸஞ்ஜயதி ரஜः கர்மணி பாரத ।
ஜ்ஞானமாவ்ருத்ய து தமः ப்ரமாதே ஸஞ்ஜயத்யுத ॥ 9 ॥

5. பெருந்தோளா! ஸத்வம், ரஜஸ், தமஸ், என்று பிரகிருதியிலிருந்துண்டான குணங்கள் அழிவில்லாத தேகியை தேகத்தில் கட்டுப்படுத்துகின்றன.

6. பாவமற்றேனே! அவற்றுள் ஸத்வகுணம் பரிசுத்தத் தன்மையால் ஒளி பொருந்தியதும் இடர் செய்யாததும் ஆகிச் சுகத்தில் பற்றுதலாலும் ஞானத்தில் பற்றுதலாலும் கட்டுப் படுத்தும்.

7. அர்ஜுனு! ரஜோ குணத்தை ஆசை வடிவினதாயும் வேட்கையும் பற்றும் உண்டாக்குவதாயும் அறி. அது கருமப் பற்றுல் தேஹியைக் கட்டுகிறது,

8. அர்ஜுனு! தமோகுணமோ அஞ்ஞானத்தால்தோன்றுவதென்றும் எல்லா தேஹிகளுக்கும் மோஹத்தை விளைப்பதென்றும் அறி. அது மதிமயக்கம் சோம்பல் நித்திரை இவற்றுல் கட்டுகிறது ;

9. அர்ஜுனு! ஸத்வகுணம் சுகத்தில் சேர்ப்பிக்கும். ரஜோகுணம் கருமத்தில் சேர்ப்பிக்கும். தமோ குணமோ ஞானத்தை மறைத்து மதிமயக்கத்தில் சேர்ப்பிக்கும்.

ரஜஸ்-தமச்-சாபிபூய ஸத்வம் பவதி பாரத ।
ரஜஃ ஸத்வம் தமச்சைவ தமஃ ஸத்வம் ரஜஸ்-ததா ॥ 10 ॥

ஸர்வத்வாரேஷு தேஹேऽஸ்மின் ப்ரகாச உபஜாயதே ।
ஜ்ஞானம் யதா ததா வித்யாத்-விவ்ருத்தம் ஸத்வமித்யுத ॥ 11 ॥

லோபஃப்ரவ்ருத்தி-ராரம்பஃ கர்மணா-மசமஃ ஸ்ப்ருஹா ।
ரஜஸ்-யேதானி ஜாயந்தே விவ்ருத்தே பரதர்ஷப ॥ 12 ॥

அப்ரகாசோऽப்ரவ்ருத்திச்ச ப்ரமாதோ மோஹ ஏவ ச ।
தமஸ்-யேதானி ஜாயந்தே விவ்ருத்தே குருநந்தன ॥ 13 ॥

யதா ஸத்வே ப்ரவ்ருத்தே து ப்ரலயம் யாதி தேஹப்ருத் ।
ததோத்தமவிதாம் லோகா-னமலான் ப்ரதிபத்யதே ॥ 14 ॥

---

10. அர்ஜுனா! ஸத்வகுணம் ரஜஸ்ஸையும் தமஸ்ஸையும் அடக்கி மேலெழும். ரஜோ குணம் ஸத்வத்தையும் தமஸ்ஸையும், அவ்வாறே தமோகுணம் ஸத்வத்தையும் ரஜஸ்ஸையும் அடக்கி மேலெழும்.

11. எப்போது இந்த தேகத்தில் ஒவ்வொரு வாயில் வழியாகவும் ஞானமாகிய ஒளி தோன்றுகிறதோ அப்போது நிச்சயமாக ஸத்வகுணம் மேலிட்டுள்ளது என்று உணரவேண்டும்.

12. அர்ஜுனா! பேராசை, இந்திரியங்களின் சேஷ்டை, தொழில் முயற்சி, அமைதியின்மை, பற்று இவைகள் ரஜோ குணம் மேலிட்டபோது உண்டாகின்றன.

13. அர்ஜுனா! அவிவேகம், முயற்சியின்மை, மதி மயக்கம் மோஹம் இவைகள் தமோகுணம் மேலிட்டபோது உண்டாகின்றன.

14. எப்போது ஸத்வம் மேலிட்டிருக்குமோ அப்போது தேஹி மரணமடைந்தால் உயர்ந்த ஞானிகளுக்குரிய பரிசுத்த உலகங்களை அடைகிறான்.

ரஜஸி ப்ரலயங் கத்வா கர்மஸங்கிஷு ஜாயதே
ததா ப்ரலீனஸ்-தமஸி மூடயோநிஷு ஜாயதே 15 ॥

கர்மணః ஸுக்ருதஸ்-யாஹுః ஸாத்விகம் நிர்மலம் பலம் ।
ரஜஸஸ்து பலம் துஃக்க-மஜ்ஞானம் தமஸః பலம் ॥ 16 ॥

ஸத்வாத் ஸஞ்ஜாயதே ஜ்ஞானம் ரஜஸோ லோப-ஏவ ச ।
ப்ரமாத-மோஹௌ தமஸோ பவதோऽஜ்ஞானமேவ ச ॥17॥

ஊர்த்த்வம் கச்சந்தி ஸத்வஸ்த்தா மத்த்யே திஷ்ட்டந்தி [ராஜஸாః ।
ஜகன்ய-குண-வ்ருத்திஸ்த்தா அதோ கச்சந்தி தாமஸாః ॥ 18 ॥

15. ரஜோகுணத்தில் மரணமடைந்தால் கருமப் பற்றுடையோரிடை பிறக்கின்றான். அவ்வாறே தமோகுணத்தில் மரணமடைந்தால் பகுத்தறிவில்லாத யோனிகளில் பிறக்கிறான்.

16. நற்கருமங்களுக்குப் பலன் ஸாத்விகமும், பரிசுத்தமும் என்று கூறுவர். ரஜோகுணத்திற்குப் பலன் துன்பம்; தமோகுணத்திற்குப் பலன் அஞ்ஞானம்.

17. ஸத்வத்திலிருந்து ஞானம் பிறக்கின்றது. ரஜஸிலிருந்து பேராசை பிறக்கின்றது. தமஸிலிருந்து அஞ்ஞானமும், மதிமயக்கமும், மோஹமும் உண்டாகின்றன.

18. ஸத்வகுணமுடையோர் மேலே செல்லுகின்றனர். ரஜோகுணமுடையோர் மத்தியில் நிற்கின்றனர். கடைக் குணச் செயலுடைய தாமஸர்கள் கீழே செல்லுகின்றனர்.

நான்யம் குணேப்ப்ய꞉ கர்த்தாரம் யதா த்ரஷ்டானுபச்யதி ।
குணேப்ப்யச்ச பரம் வேத்தி மத்பாவம் ஸோऽதிகச்சதி ॥19॥

குணானேதா-னதீத்ய-த்ரீன் தேஹீ தேஹ-ஸமுத்ப்பவான் ।
ஜன்ம-ம்ருத்யு-ஜரா-து꞉க்கைர்-விமுக்தோऽம்ருத-மச்னுதே ॥ 20 ॥

அர்ஜுன உவாச—
கைர்-லிங்கைஸ்-த்ரீன் குணா-னேதா-னதீதோ பவதி ப்ரபோ ।
கிமாசார꞉ கதஞ்-சைதான்ஸ்-த்ரீன் குணா-னதிவர்த்ததே ॥ 21 ॥

ஸ்ரீ பகவானுவாச—
ப்ரகாசஞ் ச ப்ரவ்ருத்திஞ் ச மோஹமேவ ச பாண்டவ ।
ந த்வேஷ்டி ஸம்ப்ரவ்ருத்தானி ந நிவ்ருத்தானி காங்க்ஷதி ॥ 22 ॥

---

19. எப்போது காண்பவன் குணங்களைவிட வேறொரு கர்த்தாவைக் காண்பதில்லையோ குணங்களுக்கு அப்பாலுள்ளதையும் அறிகின்றானோ அப்போது என் நிலையை எய்துகின்றான்.

20. தேகத்தை உண்டாக்கிய இம்முக்குணங்களைக் கடந்து சென்று பிறப்பு, இறப்பு, மூப்பு, துன்பம் இவற்றினின்று விடுபட்ட தேஹீ சாகாத்தன்மை எய்துகின்றான்.

அர்ஜுனன் கூறியது—

21. பிரபுவே! இந்த முக்குணங்களை எந்த லக்ஷணங்களால் கடந்தவனாக ஒருவன் ஆகின்றான்? அவனுடைய நடத்தை எவ்வகைத்து? எவ்வாறு முக்குணங்களையும் கடக்கின்றான்?

ஸ்ரீ பகவான் கூறியது—

22. பாண்டவா! (எவன்) ஸத்வத்தின் காரியமான மனத்தின் ஒளியாயினும், ரஜஸின் காரியமான சேஷ்டையாயினும், தமஸின் காரியமான கலக்கமாயினும் மேலெழுந்து வந்தவற்றை வெறுப்பதில்லையோ, நீங்கியவற்றை விரும்புவதில்லையோ;

உதாஸீனவ-தாஸீனோ குணைர்-யோ ந விசால்யதே ।
குணாவர்த்தந்த இத்யேவ யோऽவதிஷ்ட்டதி நேங்கதே ॥ 23 ॥

ஸம-து:க்க-ஸுக ஸ்வஸ்த்த: ஸமலோஷ்டாச்ம-காஞ்சன: ।
துல்ய-ப்ரியாப்ரியோ தீரஸ்-துல்யநிந்தாத்ம-ஸம்ஸ்துதி: ॥24॥

மானாபமானயோஸ்-துல்யஸ்-துல்யோ மித்ராரிபக்ஷயோ: ।
ஸர்வாரம்ப்ப-பரித்யாகீ குணாதீத: ஸ உச்யதே ॥ 25 ॥

மாஞ் ச யோऽவ்யபிசாரேண பக்தியோகேன ஸேவதே ।
ஸ குணான் ஸமதீத்யைதான் ப்ரஹ்ம பூயாய கல்பதே ॥ 26 ॥

**23.** எவன் ஒரு பக்ஷத்தையும் சாராதவன் போல் இருந்து கொண்டு குணங்களால் அசைக்கப்படுவதில்லையோ, குணங்கள் தொழில் புரிகின்றன என்று நிலைபெயராது நிற்கின்றானோ, சிறிதும் அசைவதில்லையோ;

**24.** எவன் துன்பத்திலும் இன்பத்திலும் ஸமமானவனோ, தன்னிடம் நிலைத்தவனோ, ஓடு, கல், பொன் இவற்றைச் சமமாய்ப் பாவிப்பவனோ, விருப்பையும், வெறுப்பையும், ஒன்றாய்ப் கருதுபவனோ, திடச்சித்த முடையவனோ, தன்னை இகழ்வதையும் புகழ்வதையும் ஒன்றாய்க் கொண்டவனோ,

**25.** எவன் மானத்திலும் அவமானத்திலும் ஸம பாவனை உடையவனோ, மித்ரனிடமும் சத்ருவிடமும் ஸமமானவனோ, ஆசைவாய்ப்பட்டு ஆரம்பிக்கும் எல்லாக் கருமங்களையும் விட்டவனோ, குணாதீதன் என்று சொல்லப்படுகின்றான்.

**26.** எவன் என்னை முறைபிறழாத பக்தியோகத்தால் சேவிக்கின்றானோ அவனும் இக்குணங்களை எளிதில் கடந்து சென்று பிரம்மம் ஆவதற்குத் தகுதியுடையவனாகின்றான்.

ப்ரஹ்மணோ ஹி ப்ரதிஷ்ட்டாஹ-மம்ருதஸ்-யாவ்யயஸ்ய ச ।
சாச்வதஸ்ய ச தர்மஸ்ய ஸுகஸ்யைகாந்திகஸ்ய ச ॥ 27 ॥

இதி ஸ்ரீமத் பகவத்கீதாஸூபநிஷத்ஸு ப்ரஹ்மவித்யாயாம்
யோகசாஸ்த்ரே ஸ்ரீக்ருஷ்ணார்ஜுனஸம்வாதே
குணத்ரயவிபாகயோகோ நாம
சதுர்தசோऽத்யாயः ॥

---

27. நான் பிரம்மத்திற்கும் அழியாத மோக்ஷத்திற்கும் சாசுவதமான தர்மத்திற்கும் ஒப்புயர்வில்லாப் பேரின்பத்திற்கும் உறைவிடம்.

இங்ஙனம் பிரம்ம வித்தையாயும் யோக சாஸ்திரமாயும்
ஸ்ரீ கிருஷ்ணனுக்கும் அர்ஜுனனுக்கும் ஸம்பாஷணையாயும்
விளங்கும் ஸ்ரீமத் பகவத் கீதை என்னும் உபநிஷத்தில்
குணத்ரயவிபாக யோகம் என்று பெயர் பெற்ற
பதினான்காம் அத்தியாயம் முற்றும்.

## பதினைந்தாம் அத்தியாயம்

(புருஷோத்தம யோகம்)

ஸ்ரீபகவானுவாச—

ஊர்த்த்வ-மூல-மதஃசாக-மச்வத்தம் ப்ராஹு-ரவ்யயம் ।
ச்சந்தாம்ஸி யஸ்ய பர்ணானி யஸ்தம் வேத ஸ வேதவித் ॥ 1 ॥

அதச்-சோர்த்த்வம் ப்ரஸ்ருதாஸ்-தஸ்ய சாகா
குண-ப்ரவ்ருத்தா விஷய-ப்ரவாலாஃ ।
அதச்ச மூலான்-யனுஸந்ததானி
கர்மானுபந்தீனி மனுஷ்யலோகே ॥ 2 ॥

ந ரூப-மஸ்யேஹ ததோபலப்யதே
நாந்தோ ந சாதிர் ந ச ஸம்ப்ரதிஷ்ட்டா ।
அச்வத்த-மேனம் ஸுவிரூடமூல-
மஸங்க-சஸ்த்ரேண த்ருடேன ச்சித்வா 3 ॥

ஸ்ரீ பகவான் கூறியது —

1. முடிவற்றதாய்த் தோன்றும் சம்சாரத்தை மேலே வேருள்ளதும் கீழே கிளையுள்ளதும், வேதங்களை இலைகளாயுள்ளதுமான அசுவத்தமரமாகப் பேசுகிறார்கள். அந்த விருக்ஷத்தை எவன் அறிந்தவனோ அவன் வேதத்தை அறிந்தவனாவான்.

2. அதனுடைய கிளைகள் குணத்தாற் செழித்து, விஷயமாகிய தளிர்விட்டுக் கீழும் மேலும் அடர்ந்திருக்கின்றன. வேர்கள் கீழும் படர்ந்து கர்மத்தை வளர்ப்பவையாய் மானிட உலகில் பரவியிருக்கின்றன.

3. இவ்வாறாக இங்கே இதனுடைய உருவத்தை அறியக் கூடுவதில்லை. இதற்கு முடிவில்லை. ஆரம்பமில்லை. இருப்புமில்லை. நன்கு கெட்டியாக வேரூன்றிய இந்த அசுவத்த மரத்தை திடமான பற்றின்மையெனும் ஆயுதத்தால் வெட்டித் தள்ளிவிட்டு ;

ததः பதம் தத் பரிமார்க்கிதவ்யம்
யஸ்மின் கதா ந நிவர்த்தந்தி பூயः ।
தமேவ சாத்யம் புருஷம் ப்ரபத்யே
யதः ப்ரவ்ருத்திः ப்ரஸ்ருதா புராணீ ‖ 4 ‖

நிர்-மான-மோஹா ஜித-ஸங்க-தோஷா
அத்த்யாத்ம-நித்யா விநிவ்ருத்த-காமாः ।
த்வந்த்வைர்-விமுக்தாः ஸுகதுःக்க-ஸம்ஜ்ஞைர்-
கச்சந்த்-யமூடாः பத-மவ்யயம் தத் ‖ 5 ‖

ந தத்-பாஸயதே ஸூர்யோ ந சசாங்கோ ந பாவகः ।
யத்-கத்வா ந நிவர்த்தந்தே தத்-தாம பரமம் மம ‖ 6 ‖

மமைவாம்சோ ஜீவ-லோகே ஜீவபூதः ஸநாதனः ।
மனः ஷஷ்ட்டானீந்த்ரியாணி ப்ரக்ருதி-ஸ்த்தானி கர்ஷதி ‖ 7 ‖

---

4. 'எவனிடமிருந்து பழைமையான இச்சம்ஸாரம் பெருகிற்றோ அந்த ஆதிபுருஷனையே சரணமடைகின்றேன்'— என்று நிச்சயித்து அதன்பின், எவ்வழி சென்றோர் மீண்டும் திரும்பிவருவதில்லையோ அவ்வழியே தேடிச்செல்லுதற்குரியதாகும்.

5. செருக்கும் மோஹமும் இல்லாதவரும் பற்றென்னும் குற்றமில்லாதவரும் ஆத்ம நிஷ்டையிலிருப்பவரும் ஆசைகள் அறவே ஒழிந்தவரும் இன்ப துன்பம் எனப்பட்ட இரட்டைகளினின்று விடுபட்டவரும் அஞ்ஞானம் ஒழிந்தவரும் அந்த அழிவில்லாப் பதவியை அடைகின்றனர்.

6. எங்கு சென்று திரும்புவதில்லையோ அது என்னுடைய உயர்ந்த உறைவிடம். அதைச் சூரியன் பிரகாசிக்கச் செய்வதில்லை; சந்திரனும் இல்லை; அக்னியும் இல்லை.

7. ஜீவலோகத்தில் அனாதியான என்னுடைய அம்சமே ஜீவனாகத் தோன்றி அதனதன் இயல்பில் நிற்கும் மனதுடன் கூடிய ஆறு இந்திரியங்களையும் இழுக்கிறது.

சரீரம் யதவாப்னோதி யச்சாப்-யுத்க்ராம-தீச்வரः ।
க்ருஹீத்வைதானி ஸம்யாதி வாயுர்-கந்தானிவாசயாத் ॥ 8 ॥

ச்ரோத்ரஞ்சக்ஷுः ஸ்பர்சனஞ்ச ரஸனம் க்க்ராணமேவ ச ।
அதிஷ்ட்டாய மனச்சாயம் விஷயானுபஸேவதே ॥ 9 ॥

உத்க்ராமந்தம் ஸ்த்திதம் வாபி புஞ்ஜானம் வா குணான்விதம் ।
விமூடா நானுபச்யந்தி பச்யந்தி ஜ்ஞானசக்ஷுஷः ॥ 10 ॥

யதந்தோ யோகினச்சைனம் பச்யந்த்யாத்மன்-யவஸ்த்திதம் ।
யதந்தோऽப்யக்ருதாத்மானோ நைனம் பச்யந்த்-யசேதஸः ॥ 11 ॥

யதாதித்ய-கதம் தேஜோ ஜகத்-பாஸயதேऽகிலம் ।
யச்-சந்த்ரமஸி யச்சாக்னௌ தத்-தேஜோ வித்தி மாமகம் ॥ 12 ॥

8. எப்போது இச்சரீரத்தையாளும் ஜீவன் சரீரத்தை அடைகிறானோ அப்போதும், எப்போது விட்டுக் கிளம்புகிறானோ அப்போதும், காற்றானது உறைவிடத்தினின்று வாஸனைகளைப்போல இவற்றைக் கவர்ந்துகொண்டு செல்லுகிறான்.

9. இவன் செவி, கண், மெய், நாவு, நாசி மனம் இவை அனைத்தையும் தன்வயப்படுத்திக் கொண்டு விஷயங்களை அனுபவிக்கின்றான்.

10. விட்டுச் செல்லுபவனாயினும், உறைந்திருப்பவனாயினும் குணங்களுடன்கூடிப் புசிப்பவனாயினும் அவனை மதியீனர்கள் காண்பதில்லை ; ஞானிகள் காண்கின்றனர்.

11. முயற்சியுடையவர்களான யோகிகள் இவனைத் தம்மிடத்தில் உறைந்திருப்பவனாகக் காண்கின்றனர். முயற்சியுடையவர்களாயினும் செய்கையால் திருந்தாத மதியீனர்கள் இவனைக் காண்பதில்லை.

12. சூரியனைச் சார்ந்த எந்த ஒளி உலகனைத்தையும் பிரகாசிப்பிக்கின்றதோ, சந்திரனிடமுள்ளதெதுவோ, அக்கினியிடமுள்ளதெதுவோ அவ்வொளியை என்னுடையதாக அறிவாய்.

காமாவிச்ய ச பூதானி தாரயாம்-யஹ-மோஜஸா ।
புஷ்ணாமி சௌஷதீ: ஸர்வா: ஸோமோ பூத்வா ரஸாத்மக:
॥ 13 ॥

அஹம் வைச்வானரோ பூத்வா ப்ராணினாம் தேஹ-மாச்ரித: ।
ப்ராணாபான-ஸமாயுக்த: பசாம்-யன்னஞ் சதுர்விதம் ॥ 14 ॥

ஸர்வஸ்ய சாஹம் ஹ்ருதி ஸந்நிவிஷ்டோ
மத்த: ஸ்ம்ருதிர்-ஜ்ஞான-மபோஹனஞ் ச ।
வேதைச்ச ஸர்வை-ரஹமேவ வேத்யோ
வேதாந்தக்ருத் வேதவிதேவ சாஹம் ॥ 15 ॥

த்வாவிமௌ புருஷௌ லோகே க்ஷரச்-சாக்ஷர ஏவ ச ।
க்ஷர: ஸர்வாணி பூதானி கூடஸ்த்தோऽக்ஷர உச்யதே ॥ 16 ॥

உத்தம: புருஷஸ்த்-வன்ய: பரமாத்மேத்-யுதாஹ்ருத: ।
யோ லோகத்ரய-மாவிச்ய பிபர்த்-யவ்யய ஈச்வர: ॥ 17 ॥

**13.** நான் என் சக்தியினால் பூமியினுள் புகுந்து உயிர்களைத் தாங்குகின்றேன். ரஸமயமான சந்திரனாக இருந்து கொண்டு எல்லாப் பயிர்களையும் போஷிக்கின்றேன்.

**14.** நான் வைச்வானரனாக ஆகிப் பிராணிகளின் உடலை இருப்பிடமாய்க் கொண்டு பிராணனுடனும் அபானனுடனுங் கூடி நான்குவிதமான உணவைப் பக்குவம் செய்கின்றேன்.

**15.** எல்லோருடைய இருதயத்திலும் புகுந்திருப்பவன் நான்; நினைவும் அறிவும், எல்லா வேதங்களாலும் அறிய வேண்டிய பொருளும் நானே; வேதாந்தத்தை ஆக்கியவனும் வேதத்தை உணர்ந்தவனும் நானே.

**16.** க்ஷரன், அக்ஷரன் என்ற இவ்விருவர்களே உலகில் புருஷர்கள் எனப்படுவோர். உருப்படைத்த அனைத்தும் க்ஷர புருஷன், கூடஸ்தன் அக்ஷரபுருஷன்,

**17.** ஆனால் எவன் மூவுலகிலும் புகுந்து நின்று தாங்குகின்றவனோ மாறுதலில்லாதவனோ இறைவனோ பரமாத்மா என்று கூறப்பட்ட உத்தம புருஷனோ, அவன் வேறானவன்.

யஸ்மாத் க்ஷர-மதீதோऽஹ-மக்ஷராதபி சோத்தமః ।
அதோऽஸ்மி லோகே வேதே ச ப்ரதிதః புருஷோத்தமః ॥ 18 ॥

யோ மாமேவ-மஸம்மூடோ ஜாநாதி புருஷோத்தமம் ।
ஸ ஸர்வவித்-பஜதி மாம் ஸர்வபாவேன பாரத ॥ 19 ॥

இதி குஹ்யதமம் சாஸ்த்ர-மித-முக்தம் மயானக ।
ஏதத்-புத்த்வா புத்திமான் ஸ்யாத் க்ருதக்ருத்யச்ச பாரத ॥ 20 ॥

இதி ஸ்ரீமத் பகவத்கீதாஸூபநிஷத்ஸு ப்ரஹ்மவித்யாயாம்
யோகசாஸ்த்ரே ஸ்ரீக்ருஷ்ணார்ஜுனஸம்வாதே
புருஷோத்தமயோகோ நாம
பஞ்சதசோऽத்யாயః ॥

---

18. எக்காரணத்தால் நான் க்ஷரத்தைக் கடந்தவனே அக்ஷரத்திற்குங்கூட மேலானவனே அதனுல் உலகிலும் வேதத்திலும் புருஷோத்தமன் என்று பிரசித்தி அடைந்துள்ளேன்.

19. அர்ஜுனா! எவன் இவ்வாறு மதிமயக்கமில்லாதவனுய்ப் புருஷோத்தமனுகிய என்னை அறிகின்றனே அவன் அனைத்தும் அறிந்தவனுய் அனைத்தையும் நான் எனப்பாவித்து என்னை வணங்குவான்.

20. பாவமற்றவனே! இங்ஙனம் மிக ரகசியமான இச்சாஸ்திரம் என்னுல் உனக்குக் கூறப்பட்டது. அர்ஜுனா! இதை அறிந்து புத்திமானுகவும் செய்யவேண்டிய கருமத்தைச் செய்து முடித்தவனுகவும் ஒருவன் ஆகின்றன்.

இங்ஙனம் பிரம்ம வித்தையாயும் யோக சாஸ்திரமாயும்
ஸ்ரீ கிருஷ்ணனுக்கும் அர்ஜுனனுக்கும் ஸம்பாஷணையாயும்
விளங்கும் ஸ்ரீமத் பகவத் கீதை என்னும் உபநிஷத்தில்
புருஷோத்தம யோகம் என்று பெயர் பெற்ற
பதினைந்தாம் அத்தியாயம் முற்றும்.

# பதினாறும் அத்தியாயம்

## (தைவாஸுரஸம்பத்விபாக யோகம்)

**ஸ்ரீ பகவானுவாச—**

அபயம் ஸத்வ-ஸம்சுத்திர்-ஜ்ஞான-யோக-வ்யவஸ்த்திதி: ।
தானம் தமச்ச யஜ்ஞச்ச ஸ்வாத்த்யாயஸ்-தப ஆர்ஜவம் ॥ 1 ॥

அஹிம்ஸா ஸத்ய-மக்ரோதஸ்-த்யாக: சாந்தி-ரபைசுனம் ।
தயா பூதேஷ்-வலோலுப்த்வம் மார்தவம் ஹ்ரீ-ரசாபலம் ॥ 2 ॥

தேஜ: க்ஷமா த்த்ருதி: சௌச-மத்ரோஹோ நாதிமானிதா ।
பவந்தி ஸம்பதம் தைவீ-மபிஜாதஸ்ய பாரத ॥ 3 ॥

தம்ப்போ தர்ப்போऽபிமானச்ச க்ரோத: பாருஷ்யமேவ ச ।
அஜ்ஞானஞ் சாபிஜாதஸ்ய பார்த்த ஸம்பத-மாஸுரீம் ॥ 4 ॥

**ஸ்ரீ பகவான் கூறியது—**

1. அச்சமின்மை, மனத்தூய்மை, ஞானத்திலும் யோகத்திலும் நிலைபெறுதல், தானம், புறக்கரணங்களை அடக்குதல், யஜ்ஞம், சாஸ்திரங்களை ஓதுதல், தவம், நேர்மை ;

2. அஹிம்ஸை, உண்மை, சினமின்மை, துறவு, அமைதி, வசைகூறுமை, உயிர்களிடம் தயை, பிறர் பொருள் நயவாமை, மிருதுத்தன்மை, நாணம், மனவுறுதி ;

3. தைரியம், பிறர் குற்றம் பொறுத்தல், தளராமை, சுத்தம், வஞ்சனை செய்யாமை, செருக்கின்மை, எனுமிவையெல்லாம் தெய்வஸம்பத்துடன் பிறந்தவனுக்கு இயல்பாகின்றன, அர்ஜுனா !

4. அர்ஜுனா ! இடம்பம் (கர்வம்) கொழுப்பு, தற்புகழ்ச்சி, கோபம், கடுஞ்சொல், மடமை, இவையெல்லாம், அஸுர ஸம்பத்துடன் பிறந்தவனுக்கு இயல்பாகின்றன.

தைவீஸம்பத் விமோக்ஷாய நிபந்தாயாஸுரீ மதா ।
மா சுசஃ ஸம்பதந் தைவீ-மபிஜாதோऽஸி பாண்டவ ॥ 5 ॥

த்வௌ பூத-ஸர்கௌ லோகேऽஸ்மின் தைவ ஆஸுர [ஏவ ச ।
தைவோ விஸ்தரசஃ ப்ரோக்த ஆஸுரம் பார்த்த மே ச்ருணு ॥ 6 ॥

ப்ரவ்ருத்திஞ் ச நிவ்ருத்திஞ் ச ஜனா ந விது-ராஸுராஃ
ந சௌசம் நாபி சாசாரோ ந ஸத்யந் தேஷு வித்யதே ॥ 7 ॥

அஸத்ய-மப்ரதிஷ்ட்டம் தே ஜக-தாஹு-ரநீச்வரம் ।
அபரஸ்பர-ஸம்பூதம் கிமன்யத் காம-ஹைதுகம் ॥ 8 ॥

ஏதாம் த்ருஷ்டி-மவஷ்டப்ய நஷ்டாத்மானோऽல்ப-புத்தயஃ ।
ப்ரபவந்த்-யுக்ரகர்மாணஃ க்ஷயாய ஜகதோऽஹிதாஃ ॥ 9 ॥

5. தெய்வ ஸம்பத்து முக்திக்கும் அசுர ஸம்பத்து பந்தத்திற்கும் என்று கொள்ளத்தகும். பாண்டவா! வருந்தாதே, தெய்வ ஸம்பத்துக்குரியவனாக நீ பிறந்துள்ளாய்.

6. பார்த்தா! இவ்வுலகில் உயிர்ப்பிறப்பு இருவகை; தெய்வ இயல்பும் அசுர இயல்புமே. தெய்வத்தன்மை விரிவாக கூறப்பட்டது. இனி அசுரத் தன்மையைப் பற்றி என்னிடம் கேட்பாய்.

7. அசுர ஜனங்கள் செய்யத்தக்க நல்வினையையும் விலக்கத்தக்க தீவினையையும் உணரமாட்டார்கள். அவர்களிடம் சுத்தம் இல்லை. நன்னடத்தை இல்லை, உண்மை இல்லை.

8. 'உலகம் பொய் நிறைந்தது, நிலையற்றது, ஈசுவரனில்லாதது, ஆண் பெண் சேர்க்கையால் உண்டானது, காமத்தையே காரணமாக உடையது, வேறென்ன இருக்கிறது?' என்று இவர்கள் பேசுவார்கள்.

9. அற்பமான புத்தியுடைய இவர்கள் இந்நோக்கத்தைப் பிடித்துக்கொண்டு ஆன்ம மார்க்கத்தை இழந்தவர்களாய்க் கொடுந்தொழில் புரிபவர்களாய் உலகிற்குச் சத்ருக்களாய் நாசத்தின் பொருட்டு வந்துதிக்கின்றனர்.

காம-மாச்ரித்ய துஷ்பூரம் தம்ப்ப-மான-மதான்விதாঃ ।
மோஹாத் க்ருஹீத்வாஸத்க்ராஹான் ப்ரவர்த்தந்தேஸுசி
[வ்ரதாঃ ॥ 10 ॥

சிந்தா-மபரிமேயாஞ் ச ப்ரலயா ந்தா-முபாச்ரிதாঃ ।
காமோபபோகபரமா ஏதாவதிதி நிச்சிதாঃ ॥ 11 ॥

ஆசாபாச-சதைர் பத்தாঃ காமக்ரோத-பராயணாঃ ।
ஈஹந்தே காமபோகார்த்த-மன்யாயேனார்த்த-ஸஞ்சயான்
॥ 12 ॥

இத-மத்ய மயா லப்த்த-மிமம் ப்ராப்ஸ்யே மனோரதம் ।
இதமஸ்தீதமபி மே பவிஷ்யதி புனர்த்தனம் ॥ 13 ॥

அஸௌ மயா ஹதঃ சத்ருர்-ஹனிஷ்யே சாபரானபி
ஈச்வரோஹ-மஹம் போகீ ஸித்தோஸஹம் பலவான் ஸுகீ
॥ 14 ॥

**10.** பூர்த்தி செய்ய முடியாத காமத்தைக் கைக்கொண்டு இடம்பம், தற்பெருமை, மதம் இவைகளுடன் கூடியவர்களாய் மதிமயக்கத்தால் கெட்ட எண்ணங்களை மேற்கொண்டு அசுத்தமான விரதங்களுடையவர்களாய்த் தொழில் புரிகின்றனர்.

**11.** அளவுகடந்ததும் மரணத்துடனேயே முடிவடைவதுமான கவலையை அடைந்து, காம நுகர்ச்சியை அனைத்தினும் மேல் எனுங்கருத்தினராய் அது அப்படித்தான் என்று நிச்சயித்துக் கொண்டவர்களாய்;

**12.** நூற்றுக்கணக்கான ஆசைக்கயிறுகளால் கட்டப்பட்டவர்களாய்க் காமத்துக்கும் கோபத்துக்கும் அடிமைகளாய்க் காம நுகர்ச்சிக்காக அநியாயமாகப் பணக்குவியலைத் தேடுவார்கள்.

**13.** இன்று என்னால் இது அடையப்பட்டது; இனி இந்த ஆசையை அடையப் போகிறேன். இது இருக்கிறது. மேலும் எனக்கு இந்தப் பொருளுங்கூட இனி வரப்போகிறது;

**14.** 'அந்தச் சத்துரு என்னால் கொல்லப்பட்டான்; மேலும் மற்றவர்களையுங்கூடக் கொல்லப் போகிறேன்; நான் பிரபு; நான் இன்பங்களை அனுபவிப்பவன்; நான் காரியங்களில் சித்தி பெற்றவன்; பலமுடையவன்; சுகமுடையவன்;

ஆட்யோऽபிஜனவா-னஸ்மி கோऽன்யோऽஸ்தி
ஸத்ருசோ மயா !
யக்ஷ்யே தாஸ்யாமி மோதிஷ்ய இத்-யஜ்ஞான-விமோஹிதாः
‖ 15 ‖

அனேக-சித்த-விப்ராந்தா மோஹஜால-ஸமாவ்ருதாः ।
ப்ரஸக்தாः காம-போகேஷு பதந்தி நரகேऽசுசௌ ‖ 16 ‖

ஆத்மஸம்பாவிதாः ஸ்தப்தா தன-மான-மதான்விதாः ।
யஜந்தே நாம-யஜ்ஞைஸ்-தே தம்பேனாவிதி-பூர்வகம் ‖ 17 ‖

அஹங்காரம் பலம் தர்ப்பம் காமம் க்ரோதஞ் ச ஸம்ச்ரிதாः।
மாமாத்ம-பர-தேஹேஷு ப்ரத்விஷந்தோऽப்யஸூயகாः
‖ 18 ‖

**15.** 'செல்வம் படைத்தவனாகவும் உயர்குலத் துதித்தவனாகவும் நான் உளேன். எனக்குச் சமமானவன் வேறு எவன் இருக்கிறான் ? யஜ்ஞம் செய்வேன், தானம் செய்வேன், களிப்பேன்' என்று அஞ்ஞானத்தால் மோகமடைந்தவர்களாய் ;

**16.** பல நினைப்புகளால் உள்ளத் திகைப்புற்று மோகமாகிய வலையில் அகப்பட்டுக் காம நுகர்ச்சிகளில் ஆழ்ந்த பற்றுள்ளவர்களாய் அசுத்தமான நரகில் இவர் விழுவர்.

**17.** தம்மையே மெச்சிக் கொள்பவராய் பூஜைக்குரியவரிடத்தும் வணக்கமில்லாதவராய்ச் செல்வச் செருக்கும் மதமும் படைத்தவராய் அவர்கள் இடம்பத்தால் பேர்மட்டில் யஜ்ஞம் எனுங் கிரியையால் முறை தவறிப் பூஜிக்கின்றனர்.

**18.** அகங்காரத்தையும் பலத்தையும் கருவத்தையும் காமத்தையும் கோபத்தையும் கைக்கொண்டவர்களாய்த் தங்கள் உடலிலும் பிறர் உடலிலும் உள்ள என்னைப் பகைப்பவர்களாய் நல்லவர்களைக் கண்டு சகியாதவராய்—இருப்பர்.

தானஹம் த்விஷதஃ க்ரூரான் ஸம்ஸாரேஷு நராதமான் ।
க்ஷிபாம்-யஜஸ்ர-மசுபா-னாஸுரீஷ்வேவ யோனிஷு ॥ 19 ॥

ஆஸுரீம் யோனி-மாபன்னா மூடா ஜன்மனி ஜன்மனி ।
மாமப்ராப்யைவ கௌந்தேய ததோ யாந்த்-யதமாங் கதிம்
॥ 20 ॥

த்ரிவிதம் நரகஸ்யேதம் த்வாரம் நாசன-மாத்மனஃ ।
காமஃ க்ரோதஸ்-ததா லோபஸ்-தஸ்மா-தேதத் த்ரயம்
த்யஜேத் ॥ 21 ॥

ஏதைர்-விமுக்தஃ கௌந்தேய தமோத்வாரைஸ்-த்ரிபிர் நரஃ ।
ஆசரத்-யாத்மனஃ ச்ரேயஸ்-ததோ யாதி பராங் கதிம் ॥ 22 ॥

யஃ சாஸ்த்ரவிதி-முத்ஸ்ருஜ்ய வர்த்ததே காம-காரதஃ ।
ந ஸ ஸித்தி-மவாப்னோதி ந ஸுகம் ந பராங் கதிம் ॥ 23 ॥

19. பகைமையுடையவர்களுங் கொடியவர்களும் மனிதப் பதர்களும் பாவிகளும் ஆன அவர்களைப் பிறந்திறந்துழலு முலகங்களில் அசுர யோனிகளிலேயே அடிக்கடி தள்ளுகிறேன்.

20. அர்ஜுனா! மூடர்கள் பல பிறப்புகளில் அசுர யோனியை அடைந்தவர்களாய் என்னை நாடாமலேயே முன்னதிலும் இன்னும் தாழ்ந்த நிலையை அடைகின்றனர்.

21. ஆத்மாவிற்கு நாசம் விளைவிக்கும் இந்த நரக வாயில் காமம், கோபம், லோபம் என மூவகைத்து, ஆகையால் இம் மூன்றையும் தள்ளவேண்டும்.

22. அர்ஜுனா! இருள் நிறைந்த இம்மூன்று வழிகளினின்று விலகிய மனிதன் தனக்கு உயர்நலத்தைப் பின்பற்றுபவனாகிறான். அதனால் உயர்ந்த கதியை அடைகிறான்.

23. ஆனால் எவன் சாஸ்திர விதியை விட்டு ஆசைவாய்ப் பட்டுத் தொழில் புரிகிறானோ அவன் சித்தியை அடைவதில்லை; சுகத்தை அடைவதில்லை; உயர்ந்த கதியை அடைவதில்லை;

தஸ்மாச்-சாஸ்த்ரம் ப்ரமாணம் தே
கார்யாகார்ய-வ்யவஸ்த்திதௌ ।
ஜ்ஞாத்வா சாஸ்த்ரவிதாநோக்தம்
கர்ம கர்த்து-மிஹார்ஹஸி ॥ 24 ॥

இதி ஸ்ரீமத் பகவத்கீதாஸூபநிஷத்ஸு ப்ரஹ்மவித்யாயாம்
யோகசாஸ்த்ரே ஸ்ரீக்ருஷ்ணார்ஜுன-ஸம்வாதே
தைவாஸுர-ஸம்பத்விபாக-யோகோ நாம
ஷோடசோऽத்யாயः ॥

24. ஆகையால் எது செய்யத் தக்கது எது செய்யத் தகாதது என்று நிச்சயிப்பதில் உனக்கு சாஸ்திரமே பிரமாணமாகும். சாஸ்திரத்தில் கூறிய நெறியை உணர்ந்து தொழில் புரிவதற்கு நீ உரியவனாகிறாய்.

இங்ஙனம் பிரம்ம வித்தையாயும் யோக சாஸ்திரமாயும்
ஸ்ரீ கிருஷ்ணனுக்கும் அர்ஜுனனுக்கும் ஸம்பாஷணையாயும்
விளங்கும் ஸ்ரீமத் பகவத்கீதை என்னும் உபநிஷத்தில்
தைவாசுரஸம்பத் விபாகயோகம் என்று பெயர் பெற்ற
பதினாறும் அத்தியாயம் முற்றும்.

## பதினேழாம் அத்தியாயம்

### (ச்ரத்தாத்ரயவிபாக யோகம்)

அர்ஜுன உவாச—

ये சாஸ்த्रविधि—
யே சாஸ்த்ரவிதி-முத்ஸ்ருஜ்ய யஜந்தே ச்ரத்தயான்விதாঃ ।
தேஷாம் நிஷ்ட்டா து கா க்ருஷ்ண ஸத்வ-மாஹோ ரஜஸ்தமঃ
॥ 1 ॥

ஸ்ரீபகவானுவாச—

த்ரிவிதா பவதி ச்ரத்தா தேஹினாம் ஸா ஸ்வபாவஜா ।
ஸாத்விகீ ராஜஸீ சைவ தாமஸீ சேதி தாம் ச்ருணு ॥ 2 ॥

ஸத்வானுரூபா ஸர்வஸ்ய ச்ரத்தா பவதி பாரத ।
ச்ரத்தா-மயோऽயம் புருஷோ யோ யச்-ச்ரத்தঃ ஸ ஏவ ஸঃ
॥ 3 ॥

---

அர்ஜுனன் கூறியது—

1. கிருஷ்ணா! ஆனால் எவர்கள் சாஸ்திர நெறியை விட்டுச் சிரத்தையுடன் கூடியவர்களாய்ப் பூஜிக்கின்றார்களோ அவர்களுடைய நிலை எவ்வகைத்து? ஸாத்விகமா, ராஜஸமா, அல்லது தாமஸமா?

ஸ்ரீ பகவான் கூறியது—

2. இயற்கையில் உண்டானதும் சாஸ்திர ஸம்ஸ்காரமில்லாததுமான சிரத்தையானது மனிதர்க்கு ஸாத்விகம், ராஜஸம், தாமஸம் என்று மூவகையாகவும் உளது. அவற்றைக் கேள்.

3. அர்ஜுனா! ஒவ்வொருவருடைய சிரத்தையும் அவர் அவர் உள்ளத்திற்குத் தக்கபடி இருக்கும். இந்த ஜீவன் சிரத்தையே வடிவாய்க் கொண்டவன். எவன் எவ்வகைச் சிரத்தை உடையவனோ அவன் அவ்வகையானவனே.

யஜந்தே ஸாத்விகா தேவான் யக்ஷரக்ஷாம்ஸி ராஜஸாঃ ।
ப்ரேதான் பூதகணாம்ச்சான்யே யஜந்தே தாமஸா ஜனாঃ ‖ 4 ‖

அசாஸ்த்ர-விஹிதம் கோரம் தப்யந்தே யே தபோஜனாঃ ।
தம்பாஹங்கார-ஸம்யுக்தாঃ காம-ராக-பலான்விதாঃ ‖ 5 ‖

கர்சயந்தঃ சரீரஸ்த்தம்-பூதக்ராம-மசேதஸঃ ।
மாஞ் சைவாந்தঃ-சரீரஸ்த்தம் தான் வித்த்யாஸுர-நிச்ச
[யான் ‖ 6 ‖

ஆஹாரஸ்-த்வபி ஸர்வஸ்ய த்ரிவிதோ பவதி ப்ரியঃ ।
யஜ்ஞஸ்-தபஸ்-ததா தானம் தேஷாம் பேத-மிமம் ச்ருணு ‖7‖

ஆயுঃ ஸத்வ-பலாரோக்ய- ஸுகப்ரீதி-விவர்த்தனாঃ ।
ரஸ்யாঃ ஸ்நிக்தாঃ ஸ்த்திரா ஹ்ருத்யா ஆஹாராঃ ஸாத்விக-
ப்ரியாঃ ‖ 8 ‖

---

4. ஸாத்விகர்கள் தேவர்களையும், ராஜஸகர்கள் யக்ஷர்களையும் ராக்ஷஸர்களையும், தாமஸிக ஜனங்கள் பிரேதங்களையும் பூதகணங்களையும் பூஜிக்கிறார்கள்.

5-6. இடம்பமும், அஹங்காரமும் மிக்கோரும், காமமும் விஷயப்பற்றும் தடித்தவரும் ஆகிய எந்த மதியீனர்களாகிய ஜனங்கள் உடலிலுள்ள இந்திரியங்களையும், உடலுக்குள்ளே உறையும் என்னையும் வருத்திச் சாஸ்திரத்தில் கூறப்படாத கொடுமையான தவத்தைச் செய்கிறார்களோ அவர்களை அசுர வழியில் துணிந்தவர்களாய் அறி.

7. ஒவ்வொருவருக்கும் பிரியமான உணவுங்கூட மூவகையாக உளது. அவ்வாறே யஜ்ஞமும், தவமும், தானமும்; அவற்றின் பேதத்தைக் கேள்.

8. ஆயுள், புத்தி, ஆரோக்கியம், சுகம், விருப்பம் இவற்றை வளர்ப்பனவும், ரஸமுடையனவும் பசையுடையனவும், உரமுடையனவும் இன்பமளிப்பனவும் ஆன உணவுகள் ஸாத்விகர்களுக்குப் பிரியமானவை.

கட்வம்ல-லவணாத்யுஷ்ண-தீக்ஷ்ண-ரூக்ஷ-விதாஹினஃ ।
ஆஹாரா ராஜஸஸ்யேஷ்டா துஃக்க-சோகாமய-ப்ரதாஃ ॥ 9 ॥

யாதயாமங் கதரஸம் பூதி பர்யுஷிதஞ் ச யத் ।
உச்சிஷ்ட-மபி சாமேத்யம் போஜனம் தாமஸ-ப்ரியம் ॥ 10 ॥

அபலாகாங்க்ஷிபிர்-யஜ்ஞோ விதி-த்ருஷ்டோ ய இஜ்யதே ।
யஷ்டவ்ய-மேவேதி மனஃ ஸமாதாய ஸ ஸாத்விகஃ ॥ 11 ॥

அபிஸந்த்தாய து பலம் தம்ப்பார்த்த-மபி-சைவ யத் ।
இஜ்யதே பரதச்ரேஷ்ட்ட தம் யஜ்ஞம் வித்தி ராஜஸம் ॥ 12 ॥

விதிஹீன-மஸ்ருஷ்டான்னம் மந்த்ரஹீன-மதக்ஷிணம் ।
ச்ரத்தா-விரஹிதம் யஜ்ஞம் தாமஸம் பரிசக்ஷதே ॥ 13 ॥

---

9. கசப்பு, புளிப்பு, உப்பு, கடுஞ்சூடு, காரம், உவர்ப்பு, எரிப்பு முதலிய குணங்களுடையனவும் துன்பம், துயர், பிணி இவற்றைத் தருவனவுமாகிய உணவுகள் ராஜஸிகர்களுக்குப் பிரியமானவை.

10. சமைத்து ஆறிப் போனதும், சுவையிழந்ததும், புளித்துப்போனதும், பழையதும் உண்டு மிகுந்ததும், பூஜைக்குதவாததுமான உணவு எதுவோ அது தாமஸிகர்களுக்குப் பிரியமானது.

11. பயனை விரும்பாதவர்களால் இது செய்யவேண்டியது' இது கடமை என்று மட்டும் மனத்தை நிலை நிறுத்தி சாஸ்திர முறைப்படி எந்த யஜ்ஞமானது செய்யப்படுகிறதோ அது ஸாத்விகமாகும்.

12. பயனை அடைய விரும்பியோ இடம்பத்திற்காகவோ எந்த யஜ்ஞமானது செய்யப்படுகிறதோ அர்ஜுனா! அந்த யஜ்ஞத்தை ராஜஸமானதாய் அறி.

13. முறை தவறியதும் அன்னதானமில்லாததும் மந்திரங்கள் குறைவுப்பட்டதும் தக்ஷிணையில்லாததும் சிரத்தையில்லாததும் ஆகிய யஜ்ஞம் தாமஸிகம் என்று கூறப்படும்.

தேவ-த்விஜ-குரு-ப்ராஜ்ஞ-பூஜனம் சௌச-மார்ஜவம் ।
ப்ரஹ்மசர்ய-மஹிம்ஸா ச சாரீரம் தப உச்யதே ॥ 14 ॥

அனுத்வேக-கரம் வாக்யம் ஸத்யம் ப்ரிய-ஹிதஞ் ச யத் ।
ஸ்வாத்த்யாயாப்ப்யஸனஞ் சைவ வாங்மயம் தப உச்யதே
॥ 15 ॥

மனஃ ப்ரஸாதஃ ஸௌம்யத்வம் மௌன-மாத்மவிநிக்ரஹஃ ।
பாவ-ஸம்சுத்தி-ரித்யேதத் தபோ மானஸ-முச்யதே ॥ 16 ॥

ச்ரத்தயா பரயா தப்தம் தபஸ் தத் த்ரிவிதம் நரைஃ ।
அபலாகாங்க்ஷிபிர்-யுக்தைஃ ஸாத்விகம் பரிசக்ஷதே ॥ 17 ॥

ஸத்கார-மான-பூஜார்த்தந் தபோ தம்பேன சைவ யத் ।
க்ரியதே ததிஹ ப்ரோக்தம் ராஜஸஞ் சல-மத்ருவம் ॥ 18 ॥

---

14. தேவர்கள், பிராம்மணர், குரு, அறிவின் மிக்கோர் இவர்களுடைய பூஜையும், சுத்தமும், நேர்மையும், பிரம்மசரியமும் அஹிம்ஸையும் சரீர சம்பந்தமான தவம் என்று கூறப்படும்.

15. கடுமையில்லாததும், உண்மையானதும், பிரியமானதும் நன்மையைக் கருதுவதுமான வார்த்தையும், தமக்குரிய வேதநூல் ஓதும் பழக்கமும் வாக்காற் செய்யும் தவம் என்று கூறப்படும்.

16. மனதின் தெளிவு, அன்புடைமை, மௌனம், தன்னடக்கம், பரிசுத்தமான நோக்கம் என்ற இது மனத்தாற் செய்யும் தவம் என்று கூறப்படும்.

17. பயனில் இச்சை வையாதவர்களும், திடச் சித்தமுடையவர்களும் ஆகிய மனிதர்களால் உயர்ந்த சிரத்தையுடன் செய்யப்பட்ட மேற்கூறியவாறான தவம்—காயிகம் வாசிகம் மானஸம் என—மூவகையானதும் ஸாத்விகமானதென்று பெரியோரால் கூறப்படும்.

18. உபசாரம், வெகுமானம், பூஜை இவற்றைக் கருதி இடம்பத்துடனே எந்தத் தவம் செய்யப்படுகிறதோ அது இங்கே நிலையற்றது, நீடித்து நில்லாதது, ராஜஸம் என்று கூறப்படுவது.

மூட-க்ராஹேணாத்மனோ யத் பீடயா:க்ரியதே தப: ।
பரஸ்யோத்ஸாதனார்த்தம் வா தத்-தாமஸ-முதாஹ்ருதம் ॥ 19 ॥

தாதவ்ய-மிதி யத்தானம் தீயதேऽனுபகாரிணே ।
தேசே காலே ச பாத்ரே ச தத்தானம் ஸாத்விகம்
[ஸ்ம்ருதம் ॥ 20 ॥

யத் து ப்ரத்யுபகாரார்த்தம் பலமுத்திச்ய வா புன: ।
தீயதே ச பரிக்லிஷ்டம் தத்தானம் ராஜஸம் ஸ்ம்ருதம் ॥ 21 ॥

அதேசகாலே யத்தான-மபாத்ரேப்ப்யச்ச தீயதே ।
அஸத்க்ருத-மவஜ்ஞாதம் தத்தாமஸ-முதாஹ்ருதம் ॥ 22 ॥

ஓம்-தத்-ஸதிதி நிர்த்தேசோ ப்ரஹ்மணஸ்-த்ரிவித:
[ஸ்ம்ருத: ।
ப்ராஹ்மணாஸ்-தேன வேதாச்ச யஜ்ஞாச்ச விஹிதா: புரா
॥ 23 ॥

---

19. முரட்டுப் பிடிவாதத்தால் தன்னைப் பீடித்துக்கொண்டோ பிறர் நாசத்தைக் கருதியோ எந்தத் தவம் செய்யப்படுகிறதோ அது தாமஸம் என்று கூறப்படுகிறது.

20. தகுதியான இடத்தில் தகுதியான காலத்திலும் தகுதியுள்ளவர்க்கும், கொடுப்பது கடமை என்ற உணர்ச்சியுடன், உபகாரம் செய்யாத ஒருவருக்கு எந்த தானம் கொடுக்கப்படுகிறதோ அந்த தானம் ஸாத்விகம் என்று கருதப்படும்.

21. எது பிரதியுபகாரத்தைக் கருதியோ, பயனைக் கருதியோ, மனவருத்தத்துடன் கொடுக்கப்படுகிறதோ அந்த தானம் ராஜஸம் என்று கருதப்படும்.

22. தகுதியற்ற இடத்திலும் காலத்திலும், தகுதியற்றவர்களுக்கும், மரியாதையின்றியும் அவமானப்படுத்தியும், எந்த தானம் கொடுக்கப்படுகிறதோ அது தாமஸம் என்று கூறப்படும்.

23. 'ஓம்-தத்-ஸத்' என்று பிரம்மத்திற்கு மூவகையான குறிப்புப் பெயர் கூறப்பட்டுள்ளது. ஆதியில் பிராம்மணர்களும் வேதங்களும் யஜ்ஞங்களும் அதனால் சிருஷ்டிக்கப்பட்டன.

தஸ்மா-தோமித்-யுதாஹ்ருத்ய யஜ்ஞ-தான-தப:-க்ரியா: ।
ப்ரவர்த்தந்தே விதானோக்தா: ஸததம் ப்ரஹ்மவாதினாம் ॥ 24 ॥

ததித்-யனபிஸந்தாய பலம் யஜ்ஞ-தப:-க்ரியா: ।
தானக்ரியாச்ச விவிதா: க்ரியந்தே மோக்ஷகாங்க்ஷிபி: ॥ 25 ॥

ஸத்பாவே ஸாதுபாவே ச ஸதித்யேதத் ப்ரயுஜ்யதே ।
ப்ரசஸ்தே கர்மணி ததா ஸச்சப்த: பார்த்த யுஜ்யதே ॥ 26 ॥

யஜ்ஞே தபஸி தானே ச ஸ்த்தி: ஸதிதி சோச்யதே ।
கர்ம சைவ ததர்த்தீயம் ஸதித்-யேவாபிதீயதே ॥ 27 ॥

---

24. ஆகையால் 'ஓம்' என்று உச்சரித்து வேதியர்களின் சாஸ்திரோக்தமான யக்ஞம், தானம், தவம் முதலிய கருமங்கள் எப்போதும் ஆரம்பிக்கப்படுகின்றன.

25. 'தத்' என்ற பரம்பொருளை நினைத்துப் பயனைக் கருதாது மோக்ஷத்தை விரும்புவோரால் பலவகைப்பட்ட வேள்விக் கிரியைகளும் தவக்கிரியைகளும், தானக்கிரியைகளும் செய்யப்படுகின்றன.

26. அர்ஜுனா! உள்ளது என்ற பாவனையிலும், நல்லது என்ற பாவனையிலும் 'ஸத்' என்ற இச்சொல் உபயோகப்படுகின்றது. அவ்வாறே சுபகாரியங்களிலும் 'ஸத்' என்னும் சொல் உபயோகப்படுகின்றது.

27. வேள்வியிலும், தவத்திலும், தானத்திலும் நிலைபெறுதல் 'ஸத்' என்று கூறப்படும்; மேலும், அதற்கான எக்கருமமும் 'ஸத்' என்றே கூறப்படும்.

அச்ரத்தயா ஹுதந் தத்தம் தபஸ்-தப்தம் க்ருதஞ் ச யத் ।
அஸதித்-யுச்யதே பார்த்த ந ச தத்ப்ரேத்ய நோ இஹ ॥ 28 ॥

இதி ஸ்ரீமத் பகவத்கீதாஸூபநிஷத்ஸு ப்ரஹ்மவித்யாயாம்
யோகசாஸ்த்ரே ஸ்ரீக்ருஷ்ணார்ஜுன ஸம்வாதே
ச்ரத்தாத்ரய-விபாக-யோகோ நாம
ஸப்ததசோऽத்யாயঃ ॥

28. சிரத்தையின்றிச் செய்யப்பட்ட ஹோமமும், கொடுக்கப்பட்ட தானமும், பின்பற்றப்பட்ட தவமும், அனுஷ்டிக்கப்பட்ட கருமமும் எதுவோ அது "அஸத்" என்று கூறப்படும். அர்ஜுனா! அது வேறுலகு சென்றபின் பயன்படாது. இவ்வுலகிலும் பயன்படாது.

இங்ஙனம் பிரம்ம வித்தையாயும் யோக சாஸ்திரமாயும்
ஸ்ரீ கிருஷ்ணனுக்கும் அர்ஜுனனுக்கும் ஸம்பாஷணையாயும்
விளங்கும் ஸ்ரீமத் பகவத் கீதை என்னும் உபநிஷத்தில்
சிரத்தாத்ரயவிபாகயோகம் என்று பெயர்பெற்ற
பதினேழாம் அத்தியாயம் முற்றும்.

———

## பதினெட்டாம் அத்தியாயம்

### (மோக்ஷஸந்ந்யாஸ யோகம்)

அர்ஜுன உவாச—

ஸந்ந்யாஸஸ்ய மஹாபாஹோ தத்வ-மிச்சாமி வேதிதும் ।
த்யாகஸ்ய ச ஹ்ருஷீகேச ப்ருதக் கேசிநிஷூதன ॥ 1 ॥

ஸ்ரீ பகவானுவாச—

காம்யானும் கர்மணும் ந்யாஸம் ஸந்ந்யாஸம் கவயோ விதுঃ ।
ஸர்வகர்ம-பல-த்யாகம் ப்ராஹுஸ்-த்யாகம் விசக்ஷணாঃ ॥ 2 ॥

த்யாஜ்யந் தோஷவதித்-யேகே கர்ம ப்ராஹுர்-மனீஷிணঃ ।
யஜ்ஞ-தான-தபঃ-கர்ம ந த்யாஜ்யமிதி சாபரே ॥ 3 ॥

நிச்சயம் ச்ருணு மே தத்ர த்யாகே பரதஸத்தம ।
த்யாகோ ஹி புருஷவ்யாக்க்ர த்ரிவிதঃ ஸம்ப்ரகீர்த்திதঃ ॥ 4 ॥

---

அர்ஜுனன் கூறியது—

1. கிருஷ்ணா! உயர்தோளா! கேசி எனும் அசுரனை மாய்த்தவனே! ஸந்நியாஸத்தினுடைய மெய்ப்பொருளையும் தியாகத்தினுடைய மெய்ப்பொருளையும் தனித் தனியே அறிந்து கொள்ள விரும்புகிறேன்.

ஸ்ரீ பகவான் கூறியது—

2. ஞானிகள் காமிய கருமங்களின் ஒழிவை ஸந்நியாஸம் எனக் கருதினர். ஆழ்ந்த விவேகிகள்—நித்ய, நைமித்திக, காம்ய—எல்லாக் கருமங்களின் பலனையும் விடுதல் தியாகம் எனக்கூறினர்.

3. சில புத்திமான்கள் கருமமே தீமையைப்போல் தள்ளத்தக்கது என்று கூறினர். இன்னுஞ் சிலர் யஜ்ஞம், தானம், தவம் எனும் இக்கருமங்கள் விடத்தக்கவையன்று எனவும் கூறினர்.

4. பரதசிரேஷ்டனே! மனிதரிற் சிறந்தவனே! அவ்விரண்டினுள் தியாகத்தைப் பற்றி எனது நிச்சயத்தைக் கேள்; தியாகம் மூவகையெனக் கூறப்பட்டுள்ளது.

யஜ்ஞ-தான-தப:-கர்ம ந த்யாஜ்யம் கார்யமேவ தத் ।
யஜ்ஞோ தானம் தபச்சைவ பாவனானி மனீஷிணாம் ॥ 5 ॥

ஏதான்யபி து கர்மாணி ஸங்கம் த்யக்த்வா பலானி ச ।
கர்த்தவ்யானீதி மே பார்த்த நிச்சிதம் மத-முத்தமம் ॥ 6 ॥

நியதஸ்ய து ஸந்ந்யாஸ: கர்மணோ நோபபத்யதே ।
மோஹாத் தஸ்ய பரித்யாகஸ் தாமஸ: பரிகீர்த்தித: ॥ 7 ॥

துக்க-மித்யேவ யத்கர்ம காயக்லேச-பயாத் த்யஜேத் ।
ஸ க்ருத்வா ராஜஸம் த்யாகம் நைவ த்யாகபலம் லபேத் ॥8॥

கார்ய-மித்யேவ யத்கர்ம நியதங் க்ரியதேऽர்ஜுன ।
ஸங்கம் த்யக்த்வா பலஞ் சைவ ஸ த்யாக: ஸாத்விகோ மத:
॥ 9

5. யஜ்ஞ-தான-தவ வடிவான கருமம் விடத்தக்கதன்று; அது செய்யத் தகுந்ததே; யஜ்ஞமும் தானமும் தவமுமே விவேகிகளுக்குப் பரிசுத்தம் அளிப்பவை.

6. பார்த்தா! இக்கருமங்களும் இவை போன்ற ஏனைய நற்கருமங்களுங்கூடப் பற்றையும் பயன்களையும் விட்டுச் செய்தற்குரியன என்பது என்னுடைய நிச்சயமும் உத்தமும் ஆகிய கொள்கை.

7. நித்திய கருமத்தைக் கருதுமிடத்து ஸந்நியாஸம் பொருந்தாது. மதிமயக்கத்தால் அதை விடுதல் தாமஸம் என்று கூறப்பட்டுள்ளது.

8 துன்பம் என்று கருதி மெய்வருத்தத்துக்கு அஞ்சி எந்தக் கருமத்தை ஒருவன் விட்டுவிடுகிறானோ அவன் ராஜஸமான தியாகத்தைச் செய்து தியாகப்பயனை அடையமாட்டான்.

9. அர்ஜுனா! பற்றையும் பயனையும் விட்டுச் செய்யத் தக்கது என்று, எந்த நித்திய கருமம் செய்யப்படுகிறதோ அந்த தியாகம் ஸாத்விகமானதென்று கருதப்படும்.

ந த்வேஷ்ட்-யகுசலம் கா்ம குசலே நாநுஷஜ்ஜதே ।
த்யாகீ ஸத்வ-ஸமாவிஷ்டோ மேதாவீ ச்சின்னஸம்சயஃ ॥ 10 ॥

ந ஹி தேஹப்ருதா சக்யம் த்யக்தும் கா்மாண்-யசேஷதஃ ।
யஸ்து கா்மபல-த்யாகீ ஸ த்யாகீத்-யபிதீயதே ॥ 11 ॥

அனிஷ்ட-மிஷ்டம் மிச்ரஞ் ச த்ரிவிதம் கா்மணஃ பலம் ।
பவத்-யத்யாகினம் ப்ரேத்ய ந து ஸந்ந்யாஸினம் க்வசித்
॥ 12 ॥

பஞ்சைதானி மஹாபாஹோ காரணானி நிபோத மே ।
ஸாங்க்யே க்ருதாந்தே ப்ரோக்தானி ஸித்தயே ஸா்வ
[கா்மணாம் ॥ 13 ॥

அதிஷ்ட்டானம் ததா கா்த்தா கரணஞ் ச ப்ருதக்விதம் ।
விவிதாச்ச ப்ருதக் சேஷ்டா தைவஞ் சைவாத்ர பஞ்சமம்
॥ 14 ॥

10. ஸத்வம் நிறைந்தவனும் விவேகியும் சந்தேகந் தெளிந்தவனும் ஆகிய தியாகி யஜ்ஞம் தானம் தவமல்லாத கருமங்களையும் வெறுப்பதில்லை; யஜ்ஞ தான தவங்களிலும் அபிமானங் கொள்வதில்லை.

11. உடல் பற்றுடையவனால் முற்றுங் கருமங்களை விடுதற்கு இயலாது. ஆயின் எவன் கருமப்பயனை விட்டவனோ அவனே தியாகி என்று கூறப்படுகிறான்.

12. கருமப்பலனை விடாதவர்க்கு இங்கு விட்டுச் சென்ற பின் துன்பமாயும் இன்பமாயும் இரண்டின் கலப்பாயும் உள்ள மூவகையான கருமத்தின் பயன் ஸம்பவிக்கின்றது; கருமப் பலனை விட்ட ஸந்நியாஸிகளுக்கோவெனின் இங்ஙனம் ஒரு போதும் உண்டாவதில்லை.

13. உயர்தோளா! செயல்களின் முடிவுநிலையைக் காட்டும் ஸாங்க்யத்தில் எல்லாக் கருமங்களின் சித்திக்கும் கூறப்பட்டுள்ள இந்த ஐந்து காரணங்களையும் என்னிடமிருந்து உணர்வாய்.

14. இருப்பிடமாகிய உடலும், அவ்வாறே காரியம் செய்பவனும், வெவ்வேறான கர்மேந்திரிய ஞானேந்திரியங்களும். பலவிதமாக வேறுபட்ட செயல்களும், ஐந்தாவதாக தெய்வமும்.

சரீர-வாங் மனோபிர்-யத்-கர்ம ப்ராரபதே நரः ।
ந்யாய்யம் வா விபரீதம் வா பஞ்சைதே தஸ்ய ஹேதவः ॥ 15॥

தத்ரைவம் ஸதி கர்த்தார-மாத்மானம் கேவலம் து யः ।
பச்யத்-யக்ருத-புத்தித்வாந் ந ஸ பச்யதி துர்மதிः ॥ 16 ॥

யஸ்ய நாஹங்க்ருதோ பாவோ புத்திர்-யஸ்ய ந லிப்யதே ।
ஹத்வாபி ஸ இமான் லோகாந் ந ஹந்தி ந நிபத்யதே ॥ 17॥

ஜ்ஞானம் ஜ்ஞேயம் பரிஜ்ஞாதா த்ரிவிதா கர்ம-சோதனா ।
கரணம் கர்ம கர்த்தேதி த்ரிவிதः கர்ம-ஸங்க்ரஹः ॥ 18 ॥

ஜ்ஞானம் கர்ம ச கர்த்தா ச த்ரிதைவ குணபேததः ।
ப்ரோச்யதே குண-ஸங்க்யானே யதாவச்-ச்ருணு
[தான்யபி ॥ 19 ॥

---

15. மனிதன் சரீரத்தாலும் வாக்காலும் மனத்தாலும் நியாய முறையிலோ எதிர் முறையிலோ, எந்தக்கருமத்தைச் செய்தாலும் இவ்வைந்தும் அதன் காரணங்கள்.

16. இங்ஙனமிருக்க, அவ்விஷயத்தில் பற்றில்லாத ஆத்மாவையோ—ஜீவஸ்வரூபியாகிய தன்னை மட்டுமோ—திருந்தாத புத்தியால் எவன் கர்த்தாவாகக் காண்கின்றானோ அவன் துன்மதி: உண்மையைக் காண்பதில்லை.

17. எவனுக்குத் தான் கர்த்தா என்ற எண்ணம் இல்லையோ, எவனுடைய புத்தி பற்றப்படுவதில்லையோ அவன் இவ்வுலகத்துள்ள பிராணிகளைக் கொன்ற போதிலும் கொல்லுவதில்லை.

18. அறிவும், அறியப்படுவதும், அறிபவனும் எனக் கருமத்திற் பிரவிருத்திக்குக் காரணம் மூவகை; கருமேந்திரிய ஞானேந்திரியங்கள், தொழில், தொழில் புரிபவன் எனக் கருமத்திற்கு ஆதாரக் காரணம் மூவகை.

19. ஞானமும் கருமமும் கர்த்தாவும் குணவேற்றுமையால் தனித்தனியே மூவகையெனக் குணங்களின் பாகுபாடுகளைக் கூறும் ஸாங்கிய சாஸ்திரத்தில் சொல்லப்படுகிறது. அவைகளையும் உள்ளபடிக் கேள்.

ஸர்வபூதேஷு யேனைகம் பாவ-மவ்யய-மீக்ஷதே ।
அவிபக்தம் விபக்தேஷு தஜ்-ஜ்ஞானம் வித்தி ஸாத்விகம்
॥ 20 ॥

ப்ருதக்த்வேன து யஜ்-ஜ்ஞானம் நானாபாவான் ப்ருதக்-
[விதான் ।
வேத்தி ஸர்வேஷு பூதேஷு தஜ்-ஜ்ஞானம் வித்தி ராஜஸம்
॥ 21 ॥

யத் து க்ருத்ஸ்னவ-தேகஸ்மின் கார்யே ஸக்த-மஹைதுகம்।
அதத்வார்த்தவ-தல்பஞ் ச தத்—தாமஸ—முதாஹ்ருதம் ॥ 22 ॥

நியதம் ஸங்க-ரஹித-மராக-த்வேஷதஃ க்ருதம் ।
அபல-ப்ரேப்ஸுனா கர்ம யத்-தத் ஸாத்விக-முச்யதே ॥ 23 ॥

20. வெவ்வேறுபுள்ள பொருளனைத்திலும் வேறுபாடில்லாததும் அழிவில்லாததுமாகிய ஒரே வஸ்துவை எதனுல் பார்க்கின்ருனே அந்த ஞானத்தை ஸாத்விகம் என அறி.

21. உடல்களனைத்திலும் தனித்தனியாக வேறுபட்ட வெவ்வேருன ஆன்மாக்களை எந்த அறிவு உணர்கின்றதோ அந்த ஞானம் ராஜஸம் என அறி.

22. ஆக்கப்பட்ட ஏதோ ஒரு உருவில்—ஒரு தேகத்திலோ, ஒரு பிரதிமையிலோ—அதுவே எல்லாம்—தேகமே ஆன்மா, பிரதிமையே தெய்வம்—என யுக்திக்கு ஒவ்வாததாய், உண்மைக்குப் பொருந்தாததாய் அல்ப புத்தியை எந்த ஞானம் பற்றி நிற்கின்றதோ அது தாமஸம் என்று கூறப்பட்டுள்ளது.

23. பயனில் இச்சையில்லாதவனுல் விதிக்கப்பட்ட எக்கருமம் பற்று இல்லாமலும் விருப்புவெறுப்பின்றியும் செய்யப்பட்டதோ, அது ஸாத்விகம் என்று சொல்லப்படும்.

11

யத்து காமேப்ஸுனா கர்ம ஸாஹங்காரேண வா புனः।
க்ரியதே பஹுலாயாஸம் தத்-ராஜஸ-முதாஹ்ருதம் ॥ 24 ॥

அனுபந்தம் க்ஷயம் ஹிம்ஸா-மனபேக்ஷ்ய ச பௌருஷம் ।
மோஹா-தாரப்ப்யதே கர்ம யத்தத் தாமஸ-முச்யதே ॥ 25 ॥

முக்தஸங்கோऽனஹம் வாதீ த்ருத்-யுத்ஸாஹ-ஸமன்விதः ।
ஸித்த்யஸித்த்யோர்-நிர்விகாரः கர்த்தா ஸாத்விக உச்யதே ॥ 26 ॥

ராகீ கர்மபல-ப்ரேப்ஸுர்-லுப்த்தோ ஹிம்ஸாத்மகோऽசுசிः ।
ஹர்ஷசோகான்விதः கர்த்தா ராஜஸः பரிகீர்த்திதः ॥ 27 ॥

24. பயனில் இச்சையுள்ளவனால் அஹங்கார புத்தியுடனே, மீண்டும் மிகுந்த பிரயாசையுடனே எக்கருமம் செய்யப்படுகிறதோ அது ராஜஸம் எனக் கூறப்படும்.

25. தொடர்ந்து வரும் பயனையும் நஷ்டத்தையும் பிறர்க்கு விளையுந் துன்பத்தையும் தன் சக்தியையும் யோசியாமல் மதிமயக்கத்தால் எக்கருமம் ஆரம்பிக்கப்படுகிறதோ அது தாமஸம் எனப்படும்.

26. பற்று நீங்கியவனும் நான் என்ற எண்ணமில்லாதவனும் விடாமுயற்சியும் ஊக்கமும் உடையவனும் வெற்றியிலுந் தோல்வியிலும் மாறுபாடில்லாதவனும் ஆகிய செயலாளி ஸாத்விகன் என்று சொல்லப்படுகிறான்.

27. ஆசைவாய்ப்பட்டவனும் கருமப் பயனை விரும்புபவனும் லோபியும் இம்சையில் நோக்கமுடையவனும் அசுத்தமானவனும் மகிழ்ச்சியிலும் சோகத்திலும் நிலையில்லாத மனத்தையுடையவனும் ஆகிய செயலாளி ராஜஸன் என்று சொல்லப்படுகிறான்.

அயுக்தஃ ப்ராக்ருதஃ ஸ்தப்தஃ சடோ நைஷ்க்ருதிகோऽலஸஃ ।
விஷாதீ தீர்க்கஸூத்ரீ ச கர்த்தா தாமஸ உச்யதே ॥ 28 ॥

புத்தேர்-ப்பேதம் த்ருதேச்-சைவ குணதஸ்-த்ரிவிதம் ச்ருணு ।
ப்ரோச்யமான-மசேஷேண ப்ருதக்த்வேன தனஞ்ஜய ॥ 29 ॥

ப்ரவ்ருத்திஞ் ச நிவ்ருத்திஞ் ச கார்யாகார்யே பயாபயே
பந்த்தம் மோக்ஷஞ் ச யா வேத்தி புத்தி ஸா பார்த்த
[ஸாத்விகீ ॥ 30 ॥

யயா தர்ம-மதர்மஞ் ச கார்யஞ் சாகார்யமேவ ச ।
அயதாவத் ப்ரஜானாதி புத்திஃ ஸா பார்த்த ராஜஸீ ॥ 31 ॥

28. நிலைபெறாத மனமுடையவனும் நல்லொழுக்கமில்லாதவனும் கருவமுடையவனும் வஞ்சகனும் தீயசெயலில் முயல்பவனும் சோம்பேறியும் தன்னம்பிக்கையிழந்தவனும் நெடுநீர்மையுடையவனும் ஆகிய செயலாளி தாமஸன் என்று சொல்லப்படுகிறான்.

29. அர்ஜுனா! புத்தி திடசித்தம் இவற்றின் பாகுபாட்டைக் குணவேற்றுமையால் மூவகையாகப் பிரித்துக் கூறப்படுவதை முழுவதும் கேள்.

30. அர்ஜுனா! செயலிற் புகுமுறையையும், செயலினின்று விலகு முறையையும், செய்யத்தக்க காரியத்தையும், செய்யத்தகாததையும், பயத்தையும், பயமின்மையையும், பந்தத்தையும் மோக்ஷத்தையும் எது அறிகிறதோ அந்த புத்தியானது ஸாத்விகமாம்.

31. அர்ஜுனா! தருமத்தையும் அதருமத்தையும் செய்யத்தக்க காரியத்தையும் செய்யத்தகாததையும் உள்ளபடியல்லாது ஒன்றிருக்கவொன்றாய் எந்த புத்தியானது உணர்கிறதோ அது ராஜஸமானது.

அதர்மம் தர்மமிதி யா மன்யதே தமஸாவ்ருதா ।
ஸர்வார்த்தான் விபரீதாம்ச்ச புத்திः ஸா பார்த்த தாமஸீ ॥32॥

த்ருத்யா யயா தாரயதே மனः ப்ராணேந்த்ரிய-க்ரியாः ।
யோகேனுவ்யபிசாரிண்யா த்ருதிः ஸா பார்த்த ஸாத்விகீ ॥33॥

யயா து தர்மகாமார்த்தான் த்ருத்யா தாரயதேऽர்ஜுன ।
ப்ரஸங்கேன பலாகாங்க்ஷீ த்ருதிः ஸா பார்த்த ராஜஸீ ॥ 34 ॥

யயா ஸ்வப்னம் பயம் சோகம் விஷாதம் மதமேவ ச ।
ந விமுஞ்சதி துர்மேதா த்ருதிः ஸா பார்த்த தாமஸீ ॥ 35 ॥

ஸுகம் த்விதானீந் த்ரிவிதம் ச்ருணு மே பரதர்ஷப ।
அப்யாஸாத் ரமதே யத்ர து.க்காந்தஞ் ச நிகச்சதி ॥ 36 ॥

32. அர்ஜுனு! இருளால் மூடப்பெற்று அதருமத்தைத் தருமம் என்றும், எல்லா விஷயங்களேயும் நேர்மாருகவும் எந்த புத்தியானது கருதுகின்றதோ அது தாமஸமானது.

33. அர்ஜுனு! முறை பிறழாத எந்த திடத்தால் மனது, பிராணன், இந்திரியங்கள் முதலியவற்றின் தொழில்கள் யோகத்தால் காக்கப்படுகின்றதோ, அந்த திடம் ஸாத்விகமாம்.

34. அர்ஜுனு! எந்த திடத்தால் அறம் பொருள் இன்பம் காக்கப்படுகின்றதோ, ஆழ்ந்த பற்றினுல் பயனே விரும்புவதாகின்றதோ, அந்த திடம் ராஜஸமாம்.

35. அர்ஜுனு! அறிவுகெட்ட ஒருவன் எதனுல் தூக்கத்தையும் பயத்தையும், துயரத்தையும் மனக்குழப்பத்தையும், செருக்கையும், விடுவதில்லேயோ அந்த திடம் தாமஸமாம்.

36. பாரதரேறே! சுகமும் மூவகைத்தாயுள்ளதை என்னிடம் கேள். எதில் பழக்கத்தால் ஆனந்தமடைகின்ருனே துன்பத்தின் முடிவை எய்துகின்ருனே ;

யத்த-தக்ரே விஷமிவ பரிணாமேஸம்ருதோபமம் ।
தத்ஸுகம் ஸாத்விகம் ப்ரோக்த-மாத்மபுத்தி-ப்ரஸாதஜம் ॥ 37 ॥

விஷயேந்த்ரிய-ஸம்யோகாத்-யத்த-தக்ரேஸம்ருதோபமம் ।
பரிணாமே விஷமிவ தத்ஸுகம் ராஜஸம் ஸ்ம்ருதம் ॥ 38 ॥

யதக்ரே சானுபந்த்தே ச ஸுகம் மோஹன-மாத்மனঃ ।
நித்ராலஸ்ய-ப்ரமாதோத்தம் தத்-தாமஸ முதாஹ்ருதம் ॥ 39 ॥

ந ததஸ்தி ப்ருதிவ்யாம் வா திவி தேவேஷு வா புனঃ ।
ஸத்வம் ப்ரக்ருதிஜைர்-முக்தம் யதேபிঃ ஸ்யாத் த்ரிபிர் குணைঃ ॥ 40 ॥

ப்ராஹ்மண-க்ஷத்ரிய-விசாம் சூத்ராணாஞ் ச பரந்தப ।
கர்மாணி ப்ரவிபக்தானி ஸ்வபாவ-ப்ரபவைர்-குணை: ॥ 41 ॥

37. எது ஒன்று ஆரம்பத்தில் விஷம்போலும், முடிவில் அமிருதத்துக்கொப்பாகவும், ஆத்மாவில் நிலைபெற்ற புத்தியின் தெளிவில் தோன்றுவதாகவும் உள்ளதோ, அச்சுகம் ஸாத்விகம் எனச் சொல்லப்படும்.

38. புலன்களும் பொறிகளுங் கூடுதலால் எவ்வின்பம் முதலில் அமிருதத்துக்கொப்பாகவும், முடிவில் விஷத்தைப் போலும் உளதோ அச்சுகம் ராஜஸம் என்று கருதப்படும்;

39. தூக்கம், சோம்பல், மதியீனம் முதலியவற்றினின்று தோன்றும் எச்சுகம் முதலிலும் முடிவிலும் தன்னறிவை மயக்குவதோ அது தாமஸம் எனக்கூறப்படும்.

40. எது இந்த பிரகிருதியிற் பிறந்த முக்குணங்களினின்றும் விடப்பட்டதாயுள்ளதோ அந்தப் பொருள் பூவுலகிலோ, வானுலகில் தேவர்களிடையோ இல்லை.

41. பகைவரை எரிப்பவனே! பிராம்மணர்க்கும் க்ஷத்திரியர்க்கும் வைசியர்க்கும் சூத்திரர்க்கும் அவரவர் இயற்கைக்குரிய குணங்களால் கருமங்கள் வகுக்கப்பட்டுள்ளன.

சமோ தமஸ்-தப: சௌசம் க்ஷாந்தி-ரார்ஜவ-மேவ ச ।
ஜ்ஞானம் விஜ்ஞான-மாஸ்திக்யம் ப்ரஹ்மகர்ம ஸ்வபாவஜம் ॥ 42 ॥

சௌர்யந் தேஜோ த்ருதிர்-தாக்ஷ்யம் யுத்தே சாப்யபலாயனம்।
தான-மீச்வரபாவச்ச க்ஷாத்ரம் கர்ம ஸ்வபாவஜம் ॥ 43 ॥

க்ருஷி-கௌரக்ஷ்ய-வாணிஜ்யம் வைச்யகர்ம ஸ்வபாவஜம் ।
பரிசர்யாத்மகங் கர்ம சூத்ரஸ்யாபி ஸ்வபாவஜம் ॥ 44 ॥

ஸ்வே ஸ்வே கர்மண்யபிரத: ஸம்ஸித்திம் லபதே நர: ।
ஸ்வகர்மநிரத: ஸித்திம் யதா விந்ததி தச்-ச்ருணு ॥ 45 ॥

யத: ப்ரவ்ருத்திர்-ப்பூதானும் யேன ஸர்வமிதம் ததம் ।
ஸ்வகர்மணு தமப்ப்யர்ச்ய ஸித்திம் விந்ததி மானவ: ॥ 46 ॥

---

42. அகக்கரணங்களின் அடக்கம், புறக்கரணங்களின் அடக்கம். தவம், சுத்தம், பொறுமை, நேர்மை, ஞானம், விஞ்ஞானம், ஆஸ்திக்யம் இவையனைத்தும் இயற்கையில் ஏற்பட்ட பிராம்மண கருமம்.

43. சூரத்தனம், கூர்மை, பொறுமை, திறமை, போரிற் புறங்காட்டாமை, கொடை, அடக்கியாளுந்தன்மை ஆகிய இவை இயற்கையில் ஏற்பட்ட க்ஷத்திரிய கருமங்கள்.

44. பயிர்த்தொழில், பசுஸம்ரக்ஷணை, வியாபாரம், இவை இயற்கையில் ஏற்பட்ட வைசிய கருமங்கள். பிறருக்குச் சேவை வடிவான கருமம் சூத்திரர்க்கு இயற்கையில் ஏற்பட்டது.

4. மனிதன் ஒவ்வொருவனும் தன்னுடைய கர்மாவில் கண்ணுங் கருத்துமுடையவனுயின் ஞானநிஷ்டைக்குரிய பரிபக்குவ நிலையை எங்ஙனம் அடைகிருன் என்பதைக் கேள்.

46. எவனிடமிருந்து பொருள்களுக்கெல்லாம் உற்பத்தியோ, எவனுல் இவ்வனைத்தும் வியாபிக்கப்பட்டுளதோ அவனைத் தனக்குற்ற கருமத்தால் அருச்சித்து மனிதன் பக்குவ நிலையை அடைகிருன்.

ச்ரேயான் ஸ்வதர்மோ விகுணஃ பரதர்மாத் ஸ்வனுஷ்டி
[தாத் ।
ஸ்வபாவநியதங் கர்ம குர்வந்நாப்நோதி கில்பிஷம் ‖ 47 ‖

ஸஹஜம் கர்ம கௌந்தேய ஸதோஷ-மபி ந த்யஜேத் ।
ஸர்வாரம்பா ஹி தோஷேண தூமேனாக்னி-ரிவாவ்ருதாஃ
‖ 48 ‖

அஸக்தபுத்திஃ ஸர்வத்ர ஜிதாத்மா விகத-ஸ்ப்ருஹஃ ।
நைஷ்கர்ம்யஸித்திம் பரமாம் ஸந்ந்யாஸேனாதிகச்சதி ‖49‖

ஸித்திம் ப்ராப்தோ யதா ப்ரஹ்ம ததாப்நோதி நிபோத மே ।
ஸமாஸேனைவ கௌந்தேய நிஷ்டா ஜ்ஞானஸ்ய யா பரா
‖ 50 ‖

47. பாங்கற்றதாயினும் ஒருவனுக்கு இயற்கையிலேற்பட்ட கருமம், நன்கு அனுஷ்டிக்கப்பட்ட பிறனுடைய கருமத்தைக் காட்டிலும் மேலாகும். இயற்கையில் ஏற்பட்ட கருமத்தைச் செய்து தீமையை ஒருவன் அடையமாட்டான்.

48. குந்தீபுத்திரனே! குற்றமுடையதாயினும் உடன் பிறந்த கருமத்தை ஒருவன் விடக்கூடாது. ஆரம்பிக்கும் கருமமனைத்தும் புகையால் நெருப்புப்போல் குணதோஷத்தால் சூழப்பட்டுளதன்றோ?

49. எங்கும் பற்றடையாத புத்தியுடையவனாகவும் ஜயிக்கப்பட்ட அந்தக்கரணமுடையவனாகவும் ஆசைகள் ஒழிந்தவனாகவும் உள்ளவன் ஸந்நியாஸத்தினால் "நைஷ்கர்ம்ய ஸித்தி" எனும் உயர்நிலையை எய்துகிறான்.

50. குந்தீபுத்திரனே! அந்த ஸித்தியை அடைந்தவன் எவ்வகையால் ஞானத்தின் எல்லை நிலமாகிய பிரம்மத்தை எய்துகிறானோ அவ்வகையைச் சுருக்கமாக என்னிடம் உணர்வாய்.

புத்த்யா விசுத்தயா யுக்தோ த்ருத்யாத்மானம் நியம்ய ச ।
சப்தாதீன் விஷயான்ஸ்-த்யக்த்வா ராகத்வேஷௌ
[வ்யுதஸ்ய ச ॥ 51 ॥

விவிக்தஸேவீ லக்வாசீ யத-வாக்-காய-மானஸঃ ।
த்த்யானயோக-பரோ நித்யம் வைராக்யம் ஸமுபாச்ரிதঃ
॥ 52 ॥

அஹங்காரம் பலம் தர்ப்பம் காமம் க்ரோதம் பரிக்ரஹம் ।
விமுச்ய நிர்மமঃ சாந்தோ ப்ரஹ்ம-பூயாய கல்பதே ॥ 53 ॥

ப்ரஹ்மபூதঃ ப்ரஸன்னாத்மா ந சோசதி ந காங்க்ஷதி ।
ஸமঃ ஸர்வேஷு பூதேஷு மத்பக்திம் லபதே பராம் ॥ 54 ॥

**51.** பரிசுத்தமான புத்தியுடன் கூடியவனாய் திடத்துடன் உடலையும் மனத்தையும் அடக்கி, சப்தம் முதலிய விஷய நுகர்ச்சிகளை ஒழித்து, விருப்பு வெறுப்புகளை விடுத்து ;

**52.** தனிமையை நாடியவனாய் உண்டியைச் சுருக்கிய வனாய் மனம் வாக்கு காயங்களை அடக்கியவனாய் எப்போதும் தியான யோகத்தில் ஆழ்ந்தவனாய் வைராக்கியத்தை நன்கு கைக்கொண்டு ;

**53.** (நான் பற்றொழிந்தவன் என்ற) அகங்காரத்தையும் யோக ஸித்தியால் ஏற்படும் பலத்தையும் (அது சம்பந்தமான) கருவத்தையும் (பிராரப்தவசமாய் வருவனற்றிலும்) ஆசை கோபம் உடைமை முதலிய பாவனைகளையும் ஒழித்து, எனது என்ற எண்ணமில்லாதவனாய் மன அமைதியுற்றவன் பிரம்மம் ஆவதற்கு உரியவனாகிறான்.

**54.** பிரம்மத்தில் நிஷ்டைகூடிய தெளிந்த மனமுடைய வன் துக்கிப்பதில்லை, ஆசைப் படுவதில்லை; எல்லா உயிர் களிடத்தும் சமமானவனாய் என்னிடத்து ஒப்புயர்வற்ற பக்தியை அடைகிறான்.

பக்த்யா மாமபிஜானாதி யாவான் யச்சாஸ்மி தத்வத: ।
ததோ மாம் தத்வதோ ஜ்ஞாத்வா விசதே ததனந்தரம் ॥55॥

ஸர்வகர்மாண்யபி ஸதா குர்வாணோ மத்-வ்யபாச்ரய: ।
மத்-ப்ரஸாதா-தவாப்னோதி சாச்வதம் பதமவ்யயம் ॥ 56 ॥

சேதஸா ஸர்வகர்மாணி மயி ஸந்ந்யஸ்ய மத்பர: ।
புத்தியோக-முபாச்ரித்ய மச்சித்த: ஸததம் பவ ॥ 57 ॥

மச்சித்த: ஸர்வதுர்க்காணி மத்ப்ரஸாதாத்-தரிஷ்யஸி ।
அத சேத் த்வ-மஹங்காராந் ந ச்ரோஷ்யஸி விநங்க்ஷ்யஸி
॥ 58 ॥

55. நான் எவன், எத்தன்மையோன் என்று என்னை பக்தியினால் உணர்கிறான். அதன்பின் சீக்கிரத்தில் என்னை உண்மையில் உள்ளபடி அறிந்து என்னிடம் புகுகின்றான்.

56. எல்லாக் கருமங்களையும் செய்துகொண்டிருப்பவனாயினும் என்னிடம் சரண் புகுந்து, என்னருளால் அழியாததும் மாறுபடாததுமான நிலையை எய்துகிறான்.

57. பகுத்தறிவால் எல்லாக் கருமங்களையும் என்னிடத்தில் சமர்ப்பித்து என்னைவிட வேறொன்றை உயர்வாய்க் கருதாதவனாய்ப் புத்தியோகத்தைக் கைப்பற்றி எப்போதும் என்னிடம் சித்தத்தை நிறுத்தியவனாக ஆவாய்.

58. நீ என்னிடம் சித்தத்தை வைத்து என்னருளால் எல்லாத் தடைகளையும் தாண்டிச் செல்வாய். ஆனால் அகங்காரத்தால் நான் சொல்வதைக் கேட்காமற்போனால், அழிவடைவாய்.

யதஹங்கார-மாச்ரித்ய ந யோத்ஸ்ய இதி மன்யஸே ।
மித்த்யைஷ வ்யவஸாயஸ்-தே ப்ரக்ருதிஸ்-த்வாம் நியோக்ஷ்
[யதி ॥ 59 ॥

ஸ்வபாவஜேன கௌந்தேய நிபத்தஃ ஸ்வேன கர்மணா ।
கர்த்தும் நேச்சஸி யன்- மோஹாத் கரிஷ்யஸ்-யவசோऽபி
[தத் ॥ 60 ॥

ஈச்வரஃ ஸர்வபூதானாம் ஹ்ருத்தேசேऽர்ஜுன திஷ்ட்டதி ।
ப்ப்ராமயன் ஸர்வபூதானி யந்த்ராரூடானி மாயயா ॥ 61 ॥

தமேவ சரணங் கச்ச ஸர்வபாவேன பாரத ।
தத்-ப்ரஸாதாத் பராம் சாந்திம் ஸ்த்தானம் ப்ராப்ஸ்யஸி
[சாச்வதம் ॥ 62 ॥

59. அகங்காரத்தைக் கைக்கொண்டு 'போர் புரிய மாட்டேன்' என்று நீ நினைப்பாயெனின், உன்னுடைய இந்த நிச்சயம் பொய்யாம்; இயற்கை உன்னை கட்டுப்படுத்தி ஏவும்.

60. குந்திபுத்திரனே! மோஹத்தால் எதைச் செய்ய நீ விரும்பவில்லையோ அதையே உடன்பிறந்த கருமத்தால் கட்டப்பட்டவனாய் உன் வசமில்லாதவனாய் நீ செய்வாய்.

61. அர்ஜுனா! தேகமாகிய இயந்திரத்தில் ஏற்றி வைக்கப்பட்ட (பொம்மைகள் போன்ற) எல்லாப் பிராணிகளையும் மாயா சக்தியினால் ஆட்டிவைத்துக்கொண்டு ஈசுவரன் எல்லாப் பிராணிகளுடைய இருதயத்துள்ளும் நிற்கின்றான்.

62. பாரதா! எவ்வகையாலும் அவனையே சரணடைவாய். அவனருளால் ஒப்புயர்வற்ற சாந்தியையும் அழிவில்லாத பதவியையும் அடைவாய்.

இதி தே ஜ்ஞான-மாக்க்யாதம் குஹ்யாத்-குஹ்யதரம் மயா ।
விம்ருச்யைத-தசேஷேண யதேச்சஸி ததா குரு ‖ 63 ‖

ஸர்வ-குஹ்யதமம் பூய: ச்ருணு மே பரமம் வச: ।
இஷ்டோ஽ஸி மே த்ருடமிதி ததோ வக்ஷ்யாமி தே ஹிதம்
‖ 64 ‖

மன்மனா பவ மத்பக்தோ மத்யாஜீ மாம் நமஸ்குரு ।
மாமேவைஷ்யஸி ஸத்யம் தே ப்ரதிஜானே ப்ரியோ஽ஸி மே
‖ 65 ‖

ஸர்வதர்மான் பரித்யஜ்ய மாமேகம் சரணம் வ்ரஜ ।
அஹம் த்வா-ஸர்வ-பாபேப்யோ மோக்ஷயிஷ்யாமி மா சுச:
‖ 66 ‖

63. இங்ஙனம் ரஹஸ்யங்களுள் சிறந்த ரஹஸ்யமான ஞானம் உனக்கு என்னால் எடுத்துரைக்கப்பட்டது. இதை ஆராய்ந்தறிந்து பின் எப்படி விரும்புகிறாயோ அப்படிச் செய்.

64. உயர்ந்ததும், ரஹஸ்யங்களுக்குட் சிறந்ததுமான என் வார்த்தையை மற்றொரு முறையும் கேட்பாய்; எனக்குத் திடமான சிநேகிதனாக நீ உள்ளாய்; ஆகையால் உனக்கு நன்மையைக் கூறுகிறேன்.

65. என்னிடம் மனத்தை வைத்தவனாய், என்னிடம் அன்பு செய்பவனாய், என்னைப் பூஜிப்பவனாய் ஆவாய்; என்னை வணங்குவாய்; என்னையே அடைவாய். எனக்கு நீ பிரியமானவன். உனக்கு நான் உண்மையான பிரதிஜ்ஞையைச் செய்கின்றேன்.

66. எல்லா தருமங்களையும் பற்றற விட்டொழித்து என்னை ஒருவனையே சரண்புகுவாய். நான் உன்னை எல்லாப் பாவங்களினின்றும் விடுவிப்பேன். வருந்தாதே.

இதம் தே நாதபஸ்காய நாபக்தாய கதாசன ।
ந சாசுச்ரூஷவே வாச்யம் ந ச மாம் யோऽப்யஸூயதி
॥ 67 ॥

ய இமம் பரமம் குஹ்யம் மத்-பக்தேஷ்-வபிதாஸ்யதி ।
பக்திம் மயி பராம் க்ருத்வா மாமேவைஷ்யத்-யஸம்சயः
॥ 68 ॥

ந ச தஸ்மான்-மனுஷ்யேஷு கச்சின்மே ப்ரியக்ருத்-தமः ।
பவிதா ந ச மே தஸ்மா-தன்யாः ப்ரியதரோ புவி ॥ 69 ॥

அத்த்யேஷ்யதே ச ய இமம் தர்ம்யம் ஸம்வாத-மாவயோः ।
ஜ்ஞானயஜ்ஞேன தேனாஹ-மிஷ்டः ஸ்யாமிதி மே மதிः
॥ 70 ॥

---

67. இந்த சாஸ்திரம் உனக்கு—என்னால் எடுத்துச் சொல்லப் பட்டது. தத்தம் கருமவடிவமான—தவஞ் செய்யாதவர்க்கு இதைச் சொல்லப்படாது : என்னிடம் பக்தியில்லாதவனுக்குச் சொல்லப்படாது; பணிவிடை செய்யாதவர்க்கும் சொல்லப்படாது; மேலும் என்னை எவன் இகழ்கின்றானோ அவனுக்கும் சொல்லப்படாது.

68. எவன் இந்தச் சிறந்த ரஹஸ்யத்தை என் பக்தர்களுக்கு அளிக்கின்றானோ அவன் என்னிடம் ஒப்புயர்வற்ற பக்தியைச் செய்து ஸந்தேகமில்லாமல் என்னையே அடைகிறான்.

69. மனிதர்களுள் அவனைவிட எவனும் எனக்கு அதிகப் பிரியமானதைச் செய்பவனாகமாட்டான். அவனைவிட எனக்கு அதிகம் பிரியமான ஒருவன் இப்பூவுலகில் இனி உண்டாகப் போவதில்லை.

70. மேலும் எவன் நம்முடைய இந்தப் புண்ணியம் வாய்ந்த ஸம்பாஷணையைப் பாராயணஞ் செய்கின்றானோ அவனால் நான் ஞானயஜ்ஞத்தால் பூஜிக்கப்பெற்றவனாக ஆகின்றேன் என்பது என் அபிப்பிராயம்.

ச்ரத்தாவா-னனஸூயச்ச ச்ருணுயா-தபி யோ நர: ।
ஸோऽபி முக்த: சுபான் லோகான் ப்ராப்னுயாத் புண்ய
[கர்மணாம் ॥ 71 ॥

கச்சிதேதச்ச்ருதம் பார்த்த த்வயைகாக்ரேண சேதஸா ।
கச்சி-தஜ்ஞான-ஸம்மோஹ: ப்ரணஷ்டஸ்-தே தனஞ்ஜய
॥ 72 ॥

அர்ஜுன உவாச—
நஷ்டோ மோஹ: ஸ்ம்ருதிர்-லப்தா த்வத்-ப்ரஸாதான்
[மயாச்யுத ।
ஸ்த்திதோऽஸ்மி கத-ஸந்தேஹ: கரிஷ்யே வசனம் தவ ॥ 73 ॥

ஸஞ்ஜய உவாச—
இத்யஹம் வாஸுதேவஸ்ய பார்த்தஸ்ய ச மஹாத்மன: ।
ஸம்வாத-மிமமச்ரௌஷ-மத்புதம் ரோமஹர்ஷணம் ॥ 74 ॥

71. சிரத்தையுடையவனுகவும் அவமதிப்பில்லாதவனுக வும் எந்த மனிதன் இதைக்கேட்கின்ருனே அவனுங்கூட விடு பட்டவனுய்ப் புண்ணியம் செய்தவர்களுக்குரிய புண்ணிய உலகங்களை அடைவான்.

72. பார்த்தா! உன்னுல் ஒருமைப்பட்ட மனத்துடன் இது கேட்கப்பட்டதா? தனஞ்ஜயா! உன்னுடைய அறியாமை என்னும் மயக்கம் நாசமடைந்ததா?

அர்ஜுனன் கூறியது—

73. அச்சுதா! மதிமயக்கம் நாசமடைந்துவிட்டது; உன தனுக்ரஹத்தால் உண்மையான பிரஜ்ஞை என்னுல் அடையப் பட்டது. ஸந்தேகம் நீங்கப்பெற்றவனுக இப்போது நிலைத்து நிற்கின்றேன். உன்னுடைய வார்த்தையைச் செய்கின்றேன்.

ஸஞ்ஜயர் கூறியது—

74. இங்ஙனம் நான் வாசுதேவனுக்கும் மஹாத்மாவான

வ்யாஸ-ப்ரஸாதாச்-ச்ருதவா-னேதத் குஹ்ய-மஹம் பரம் ।
யோகம் யோகேச்வராத் க்ருஷ்ணாத் ஸாக்ஷாத் கதயதஃ
[ஸ்வயம் ॥ 75 ॥

ராஜன் ஸம்ஸ்ம்ருத்ய ஸம்ஸ்ம்ருத்ய ஸம்வாத-மிம-மத்புதம் ।
கேசவார்ஜுனயோஃ புண்யம் ஹ்ருஷ்யாமி ச முஹுர்
[முஹுஃ ॥ 76 ॥

தச்ச ஸம்ஸ்ம்ருத்ய ஸம்ஸ்ம்ருத்ய ரூப-மத்யத்புதம் ஹரேஃ ।
விஸ்மயோ மே மஹான் ராஜன் ஹ்ருஷ்யாமி ச புனஃ புனஃ
॥ 77 ॥

யத்ர யோகேச்வரஃ க்ருஷ்ணோ யத்ர பார்த்தோ தனுர்த்தரஃ ।
தத்ர ஸ்ரீர்-விஜயோ பூதிர்-த்ருவா நீதிர்-மதிர்-மம ॥ 78 ॥

பார்த்தனுக்கும் நிகழ்ந்த இந்தப் புளகாங்கிதம் செய்யும் அற்புதமான சம்பாஷணையைக் கேட்டேன்.

75. நான் வியாஸருடைய திருவருளால் இந்த ஒப்புயர்வற்ற ரஹஸ்யமான யோகத்தை யோகேசுவரனாகிய கிருஷ்ணனிடமிருந்து நேராகச் சொல்லக் கேட்கப்பெற்றவனானேன்.

76. அரசே! கேசவனுக்கும் அர்ஜுனனுக்கும் நிகழ்ந்த இந்தப் புண்ணியம் வாய்ந்த அற்புதமான ஸம்பாஷணையை நினைத்து நினைத்து மேலும் மேலும் மகிழ்கின்றேன்.

77. அரசே! ஹரியினுடைய அந்த வெகு அற்புதமான உருவத்தையும் நினைத்து நினைத்து எனக்குப் பெரியதொரு வியப்பு உண்டாகிறது; மீண்டும் மீண்டும் மகிழ்ச்சியுங் கொள்கிறேன்.

78. யோகேசுவரனாகிய கிருஷ்ணன் எங்கே இருக்கின்றானோ, வில்லாளியான அர்ஜுனன் எங்கே இருக்கின்றானோ அங்கே தான் மங்களமும் வெற்றியும் பெருமையும், நிச்சயமாக நீதியும் என்பது எனது கொள்கை.

இதி ஸ்ரீமஹாபாரதே சதஸாஹஸ்ர்யாம் ஸம்ஹிதாயாம்
வையாஸிக்யாம் பீஷ்மபர்வணி ஸ்ரீமத் பகவத்கீதா-
ஸூபநிஷத்ஸு ப்ரஹ்மவித்யாயாம் யோக-
சாஸ்த்ரே ஸ்ரீக்ருஷ்ணார்ஜுன-ஸம்வாதே
மோக்ஷஸந்ந்யாஸ யோகோ நாம
அஷ்டாதசோऽத்த்யாயः ॥

---

இங்ஙனம் வியாஸரருளிய
நூறாயிரம் சுலோகம் நிறைந்த
மஹாபாரதத்தில் பீஷ்மபர்வத்தினிடை
பிரம்மவித்தையாயும் யோக சாஸ்திரமாயும்
ஸ்ரீ கிருஷ்ணனுக்கும் அர்ஜுனனுக்கும் ஸம்பாஷணையாயும்
விளங்கும் ஸ்ரீமத் பகவத் கீதை என்னும் உபநிஷத்தில்
மோக்ஷஸந்ந்யாஸயோகம் என்று பெயர்
பெற்ற பதினெட்டாவது அத்தியாயம்
முற்றும்.

---

# நாகரம் — தமிழ் நூல்கள்

## (ஆசிரியர் " அண்ணா " எழுதிய உரைகளுடன்)

| நூல் | | ரூ. பை. | | ரூ. பை. |
|---|---|---|---|---|
| ஈச, கேன, கட உபநிஷதங்கள் | சாதா | 1-75 | காலிகோ | 2-50 |
| ப்ரச்ன, முண்டக, மாண்டூக்ய | ,, | 1-75 | ,, | 2-50 |
| தைத்திரிய உபநிஷத்து | ,, | 1-50 | ,, | 2-50 |
| சாந்தோக்ய, ப்ருஹதாரண்யக | ,, | 3-50 | ,, | 4-50 |
| மஹாநாராயண உபநிஷத்து (தைத்திரிய நாராயண வல்லி) | | | | 3-00 |
| ஸ்ரீமத் பகவத் கீதை | ,, | 8-00 | ,, | 9-50 |
| ஸ்ரீமத் பகவத் கீதை (மூலம்) பாக்கெட் சைஸ் | | | | 2 00 |
| ஸ்ரீமத் பகவத் கீதை வெண்பா (முத்து ஐயர் இயற்றியது) | | | | 2-00 |
| விவேக சூடாமணி | சாதா | 4-25 | காலிகோ | 5-50 |
| ஸ்ரீருத்ரம்—சமகம் | ,, | 4-00 | ,, | 5-00 |
| தைத்திரீய மந்திரகோசம் (முதல் பாகம்) | | | | 1-75 |
| தைத்திரீய மந்திரகோசம் (இரண்டாம் பாகம்) | | | | 2-00 |
| ஸ்ரீ தேவி மஹாத்மியம் | | | ,, | 8 00 |
| ஸ்ரீ தேவி மஹாத்மியம் பாராயணம் (தமிழ் மூலம்) | | | ,, | 2-00 |
| ஜபவிதானம் | | | | 1-00 |
| ஸந்த்யா வந்தனம் | ,, | 2-00 | ,, | 4-00 |
| தேவி ஸூக்தங்களும், உபநிஷதங்களும் | | | | 1-50 |
| புருஷ ஸூக்தம் | | | | 2 25 |
| பூஜா விதானம் (தமிழ்) | ,, | 5-00 | ,, | 7-00 |
| பூஜா விதானம் (நாகரம்) | ,, | 4-50 | ,, | 6-00 |
| தைத்திரீய மந்தரகோசம் (தமிழ்) | | | | 6-00 |
| ஸ்ரீமத் பாகவத ஸாரம் (முதல் பாகம்) | | | | 10-00 |
| ஸ்ரீமத் பாகவத ஸாரம் (இரண்டாம் பாகம்) | | | | 12-50 |
| ஸௌந்தர்ய-லஹரி பாஷ்யம் | சாதா | 5-00 | காலிகோ | 7-00 |
| ஸௌந்தர்ய-லஹரி (நாகரம்—தமிழ் மூலம்) | | | | 1-50 |
| சிவானந்த-லஹரி: | (பாஷ்யம்) | 4-00 | மூலம் | 1-00 |
| ஸ்ரீ லலிதா ஸஹஸ்ர நாம ஸ்தோத்ரம் பாஷ்யம் | | | சாதா | 5-00 |
| | | | காலிகோ | 6-50 |
| ஸ்ரீ லலிதா ஸஹஸ்ர நாம (பாராயணம்) | | | நாகரம் | 3-00 |
| | | | (தமிழ் மூலம்) | 1-50 |
| ஸ்ரீ லலிதா த்ரிசதி | பாஷ்யம் | 2-50 | ஸ்தோத்ரம் | 1-00 |
| ஸ்ரீ வித்யா | | | | 5-00 |
| ஸ்ரீ விஷ்ணு ஸஹஸ்ரநாம ஸ்தோத்ரம் (பாராயணம்) | | | | 2-00 |
| | | | பாஷ்யம் | 6 00 |
| ஸ்ரீ விஷ்ணு ஸ்தோத்ரங்கள் | | | | 1-00 |
| ஸ்ரீ கிருஷ்ண கர்ணாம்ருதம் | | | | 4-50 |